அனைத்திந்திய நூல் வரிசை

# சுயசரிதைச் சுருக்கம்:
# கந்துகூரி வீரேசலிங்கம்

சுருக்கியவர் :
கொடவடிகண்டி குடும்பராவு

தமிழாக்கம் :
பா. பாலசுப்பிரமணியன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
புது தில்லி

# அறிமுகம்

'அண்மைக் காலத்திய தலைசிறந்த ஆந்திரர்' என்று, பெரியார் கட்டமஞ்சி ராமலிங்கா ரெட்டி அவரைச் சிறப்பித்துள்ளார். 'தலைசிறந்த பாரதப் புதல்வர்களில் ஒருவர் ; ஆழமான பகுத்தறிவும்' எல்லையற்ற துணிவும், அளவற்ற ஆற்றலும் வாய்ந்தவர். பொய்ம்மையைப் பந்தாடி, மறுமலர்ச்சிப் பாதைகளுக்காகப் போராடியவர், என்று ராஜாஜி அவரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். வீரேசலிங்கத்தின் மனிதத்தன்மை, அவர் நடத்திய போராட்டங்கள், அடைந்த வெற்றிகள், மாசுமறுவற்ற அவர்தம் மக்கள் தொண்டு, நாட்டுத் தொண்டு முதலியவை இந்த 'சுயசரிதைச் சுருக்கத்தி'ன் வாயிலாகத் தெள்ளத் தெளிவாகின்றன.

திரு. நார்ல அவர்கள், வீரேசலிங்கம் பற்றி அண்மையில் இயற்றிய புகழ்பெற்ற நூலைப் (சாகித்திய அக்காதெமி வெளியீடு) படித்தவர்களுக்கு நார்ல அவர்கள் வெளியிட்டவற்றுக்கான ஆதாரங்கள் இந்த நூலின் வாயிலாகத் தெளிவாகும்.

இந்த நூலின் இறுதியில் வீரேசலிங்கம் அவர்கள், ஆந்திரர்தம் வாழ்க்கையிலும், சமூகத்தின் கண்ணோட்டத்திலும் முப்பது அல்லது நாற்பதாண்டுகளில் தோன்றிய மாற்றங்களை விளக்கியுள்ளார். ஆனால் அந்த மாற்றங்களில் தம் பங்கு என்ன என்பதை அவர் சொல்லிக்கொள்ளவில்லை. ராமலிங்கா ரெட்டி அவர்கள் சொல்லியது போல், 'வீரேசலிங்கம் புதுயுகப் படைப்பாளரில் முக்கியமான ஒருவர். அதனால்தான் அவரால் அதைப் பிரதிபலிக்க முடிந்தது. அவர் அதன் செல்லக் குழந்தையானதால்தான் அதை அவரால் தெளிவாகக் கண்டறிய முடிந்தது. ஏனென்றால், காலத்தின் தன்மையைச் சீரணித்துக் கொண்டவரே அதை உருவாக்கக் கூடியராவர்.'

உண்மையில் சொல்லப் போனால், வீரேசலிங்கம் அழுகிப்போன சமூகத்தின் மீதும், அழுகல் பண்பாட்டின் மீதும் போர் தொடுப்பதற்கு முன்னர் அந்தச் சமூகத்திற்கும் பண்பாட்டிற்கும் பொருந்திய அழுகலிலேயே வாழ்ந்தார். அவர், வாயு வேகத்தில் மக்கள் திரளைத் தள்ளிக் கொண்டு முன்னால் சென்று, அவர்களுடைய கண்டனங்களுக்கு ஆளாகி, இறுதியில் பல்வகை வாழ்வுத் துறைகளிலும்

முன்னேற்றப் பாதைகளை வகுத்துக் காட்டினார். இலக்கியத் துறையிலும், அவர், தம் முயற்சியைத் தம் இளமைப் பருவத்தில் நிலவி வந்த துறைகளில் தொடங்கி, காலப்போக்கில் தற்காலத் தெலுங்கு இலக்கியத்தின் தந்தையாகத் திகழலானார். அவர், ஒரு பக்கத்தில் பிறரை முன்னேற்றிய வண்ணம் தம்மைத் தாமே முன்னேற்றிக் கொண்டார்.

திரு. நார்ல சொல்லியதுபோல், வீரேசலிங்கம் 'இலட்சிய நோக்குள்ள செயல் வீரர்.' அவர் தமக்கு எதிர்ப்பட்ட ஒவ்வொரு சமூகத் தீமையையும் எதிர்த்ததோடல்லாமல், அத்தகைய குறைகளை முழு மூச்சோடு தேடிக் கண்டுபிடித்ததுடன் நில்லாமல், தம்மைச் சார்ந்தோரின் நடத்தையும் குறையற்றிருக்கவேண்டுமென்று உறுதி பூண்டு, அவர்களுடைய குறைகளையும் தீவிரமாகக் கண்டித்து வந்தார். இந்த விஷயத்தில் அவருக்கும் காந்திஜீக்கும் ஓரளவு ஒற்றுமை உள்ளது.

இன்று பின்னால் திரும்பிப் பார்த்தால், இவ்வளவு சிறந்த மனிதருக்கு அரசியல் பகுத்தறிவு இல்லாமல் போனது ஒரு களங்கமாக இருக்குமோ என்று தோன்றுகிறது. ஆனால், அவர் காலத்தில் அரசியல் பெரும்பாலும் பலாத்கார வாதத்திலும், ஆரவாரத்திலும் மூழ்கியிருந்தது. நியாய வாதமும், ஆத்மீகக் கண்ணோட்டமும் இணைந்த காந்தீய அரசியல் நாட்டில் இன்னமும் மலராத காலம். நாட்டில் ஒரு துறை முன்னேற்றம் பயன்படாதென்று வீரேசலிங்கம் கூறிய கூற்று முற்றிலும் உண்மையானது. இன்று நாட்டில் விடுதலைப் பிரசனை தீர்ந்துவிட்டதெனினும், வீரேசலிங்கம் எதிர்த்துப் போராடிய—மூட நம்பிக்கைகள், சாதிவெறி, மதவேற்றுமைகள், குலப்பற்று, அதிகாரிகளின் கடுமையான போக்கு, இருப்பவர்கள் இல்லாதாரைத் துன்புறுத்தும் அவலநிலை, உண்மையான சமூக மறுமலர்ச்சியின்பால் அலட்சிய பாவம், பண்பாட்டுச் சூன்யத்துடன் கூடிய மக்களுக்கு நலம் பயக்க முடியாத மலிவான இலக்கியம்—முதலான சமூகக் குறைகளனைத்தும் இன்னமும் நம் மக்களை வருத்திக் கொண்டேதான் உள்ளன.

வீரேசலிங்கத்தையும், அவர்தம் போராட்டங்களையும் ஓர் ஓரமாக ஒதுக்கிவிட்டது தேசியப் போராட்டம் என்று சொல்லலாம். ஏனெனில், ஆந்திரர் இரண்டாம் உலகப் போர் முடிவு வரையில் வீரேசலிங்கத்தை மறந்திருந்தனர். வீரேசலிங்கத்திடம் ஈடுபாடு கொண்டு நினைவுகூரத் தொடங்கியவர்கள் ஆந்திர நாட்டு முற்போக்கு எழுத்தாளராவர். மிக அண்மைக் காலத்தில் அவர்

குரல் மீண்டும் வலுப்பெற்று வருகிறது. நாடு முன்னேற வேண்டு மென்றால் அவர்தம் கொள்கைகள் மீண்டும் நடைமுறைக்கு வர வேண்டும்.

வீரேசலிங்கத்தின் எண்ணற்ற படைப்புக்களில் அவர்தம் சுய சரிதைக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. இந்த நூல் மட்டும் இல்லை யெனில், சமூக விடுதலைக்காக அவர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் உள்ளூர் நினைவுகளாகவே அடங்கிப் போயிருக்கும். இதனால்தான் இந்த நூலை ஒரு வகையில் 'ஆந்திரச் சமூக வரலாறு' என்று கூறி யுள்ளனர்.

சுயசரிதையின் முதற் பகுதி 1910 டிசம்பரிலும், இரண்டாம் பகுதி 1915 ஏப்ரலிலும் வெளியாயின. அதன் பின்னர், வீரேசலிங்கம் நான்கு ஆண்டுகள்—1919 மே 27 வரையில் வாழ்ந்தார். இறுதி நேரம்வரை அவர் தொடர்ந்து உழைத்துக் கொண்டேதான் இருந் தார். எடுத்துக்காட்டாக, கிடுகு ராமமூர்த்தி பந்துலு தொடங்கி வைத்த வழக்குமொழி வாதத்தை வீரேசலிங்கம் முழுமூச்சுடன் வலுப்படுத்தி, 'தெலுங்கு வழக்குமொழி ஆதரவாளர் சங்க'த்தின் முதல் தலைவராக இருந்து பணியாற்றினார். உண்மையில், ஆந்திரா வில் பல்வேறு சமூக-பண்பாட்டு முயற்சிகளுக்கு அவரே 'முதல்வர்' ஆவார். அதனால்தான் அவரைப் பற்றிக் கெ. ஈஸ்வர தத் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்: 'ஆந்திராவின் வாழ்க்கை நதியை வீரேச லிங்கம் புதுவழியில் திருப்பிவிட்டார். இந்தப் பணியில் அவருக்கு வழிகாட்டிகள் யாரும் இலர். அவருடன் ஒப்பிடக்கூடிய அவரைப் பின்பற்றுநரும் இலர்.'

—கொடவடிகண்டி குடும்பராவு

# உள்ளடக்கம்

# 1. இளமைப் பருவம்

பரதகண்டத்தில் பழைய நகரங்களில் ஒன்றானதும், கோதாவரிக் கரையில் புகழ் பெற்றிருப்பதுமான ராஜமகேந்திர வரத்தில், பாட்டனார் கட்டிய எங்கள் சொந்த வீட்டில், 1848 ஏப்ரல் 16-ஆம் நாள், சூரிய உதயத்திற்கு மூன்று மணிக்குப் பின்னர் நான் பிறந்தேன்.

எங்கள் வீடு ராஜமகேந்திரவரத்தில் உள்ள பெரிய வீடுகளில் ஒன்று. பரம்பரைச் சொத்தாக அவ்வளவு பெரிய வீடு இருப்பதே எங்கள் முன்னோர் உயர்ந்த நிலையில் இருந்தனர் என்பதை ஓரளவு தெரிவிக்கும். அந்த வீட்டைக் கட்டிய எங்கள் பாட்டனார் சிறிது காலம் ஒரு சம்ஸ்தானாதிபதியிடம் திவானாகப் பணியாற்றினார். எங்கள் முன்னோர்கள் பலர் சம்ஸ்தானாதிபதிகளாகவும் நாடு போற்றும் பண்டிதர்களாகவும் பெயர் பெற்றிருந்தனர். சொந்தத் தகுதி இல்லாமல் முன்னோரின் பெருமையைக் கொண்டு தனக்குக் கௌரவம் தேடிக்கொள்ள வேண்டும் என்று எண்ணாதவன் ஆதலால், அவர்களுடைய அருமை பெருமைகளை விளக்கும் வேலையில் இறங்க மாட்டேன். என் பாட்டனார் வீரேசலிங்கம் அவர்கள் மிகுந்த தர்ம சிந்தனையுள்ளவரென்றும், பூதானம் முதலியன செய்து புகழ்பெற்றவர் என்று மட்டும் சொல்வது இந்தக் கதைத் தொடக்கத்திற்குப் போதுமானதாகும்.

என் திருமணம் முதலான நல்ல காரியங்களுக்குப் பொறுப்பேற்று வந்த என் பெரிய தந்தையார் என் ஜாதகத்தைச் சோதிடர்களிடம் காட்டிக்கொண்டு முகூர்த்தங்களைக் குறித்து வந்தார். இருந்தாலும் சோதிட சாத்திரத்தில் நெடுங்காலத்திற்கு முன்னரே எனக்கு நம்பிக்கை போய்விட்டதால் நானாக எப்பொழுதும் என் ஜாதகத்தைப் பார்க்க முயன்றதில்லை. தொடக்கத்தில் சோதிட சாத்திரத்தில் அளவு கடந்த நம்பிக்கையுடையவனாக இருந்தாலும், ஜாதகத்தில் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்று சொல்லப்பட்டவர்களில் பலர், அற்ப ஆயுளிலேயே முடிந்துபோனதாலும், பெரும் வசதி படைத்தவர்கள் என்று சொல்லப் பட்டவர்கள் தரித்திரத்தால் சூழப்பட்டதாலும், குழந்தைப் பேறு நிரம்ப உண்டென்ற பேருக்குக் குழந்தைகளே இல்லாமல் இருப்பதாலும், என்றென்றும் நலத்தோடு வாழ்பவர் எனச் சொல்லப்பட்ட பெண்கள்

இளமையிலேயே கைம்மையுற்றதாலும் மற்றும், நல்ல முகூர்த்தங்கள் பார்த்துச் செய்யப்பட்ட காரியங்கள் சீரழிந்து போவதையும் பார்க்கப் பார்க்க எனக்கு இந்தச் சோதிட விஷயத்தில் குறைந்து வந்த நம்பிக்கை, உலக அனுபவம் பெருகிய பிறகு முற்றிலும் அற்று விட்டது. சோதிட சாத்திர நம்பிக்கை இல்லாத மேலை நாட்ட வர்களின் திருமணங்களைவிட, சோதிடச் சாத்திர எல்லைக்கோட்டை மீருமல் நடத்தப்படும் நம் திருமணங்கள் எந்த வகையில் அதிக நலம் பெற்று விளங்குகின்றன ?

என் முப்பாட்டனுர் காலம் வரையில் எங்கள் முன்னேர்கள் லிங்கம் தரித்து வீரசைவர்களாக இருந்தனர். என் கொள்ளுப் பாட்டனுரான சந்திரமௌளி அவர்கள் ஸ்மார்த்தப் பெண்ணை மணக்க நேரிட்டது. அந்தத் தம்பதிகளுக்குப் பிறந்த என் பாட்டனுர் வீரேசலிங்கம் அவர்கள், வைணவ மதப் பிடிப்புள்ள மாமாக்களின் தூண்டுதலாலோ, அல்லது வேறெந்த காரணத்தாலோ லிங்கம் தரிப்பதை விட்டுவிட்டுச் சீர்திருத்தப் போக்கிற்கு வழிவகுத்தார். அவர் பெயர் தாங்கிய எனக்கும் இளமையிலிருந்தே சீர்திருத்த நறுமணம் ஓரளவு ஒட்டிக் கொண்டது.

எங்கள் தாத்தாவின் பிறந்த ஊர் ஏலூரு. அங்கேதான் அவருக்குப் பரம்பரைச் சொத்தான நிலங்களும் வீடுகளும் இருந்தன. எங்கள் வீட்டுப் பெயரிலிருந்து எங்கள் முன்னேர்கள் நெல்லூர் மாவட்டத்தில் உள்ள கந்துகூரைச் சேர்ந்தவர்கள் என்றும், முகம்மதியர்கள் காலத்தில் உத்தியோகம் நிமித்தம் ஏலூருக்கு வந்து சேர்ந்ததாகவும் தெரிய வருகிறது.

அந்தக் காலத்தில் வாய்க்கால் பாசன வசதிகள் இல்லாததால் பருவமழை தவறும் ஆண்டுகளில், மானிய நிலங்கள் தரிசாகவே இருக்க வேண்டிய நிலை இருந்தது. அதனுல், நில வருவாயை நம்பி யிருக்க முடியாமல் எங்கள் பாட்டனுர், மன்னர் ஆதரவைப் பெற்று ராஜமகேந்திரவரத்திற்கு வந்து, ஏராளமான ஊதியம் ஈட்டி அரண் மனைக்கு ஒப்பான மிகப் பெரிய இல்லத்தைக் கட்டி, அங்கேயே நிலையாகக் குடியேறி விட்டார்.

அவர் இறக்கும் காலத்தில் அவர்தம் தாயாரான அக்கம்மா, மனைவியான காமம்மா, முதல் மகனுன வேங்கடரத்னம், இரண்டா வது மகனுன சுப்பாராயுடு ஆகியோர் இருந்தனர். நான் இரண்டா வது மகனின் மகன்.

இளம் வயதிலேயே என் தந்தையாருக்கு அத்தை மகளைக் கொடுத்துத் திருமணம் நடத்தி வைத்தனர். எங்கள் பாட்டனுரின்

தங்கை ஒரு பெண் குழந்தையைப் பெற்றுக் காலமாகி விட்டதால், புன்னம்மா என்ற அந்தச் சிறுமியைப் பாட்டியான அக்கம்மாவும், தாய் மாமனான எங்கள் பாட்டனாரும் வளர்த்து ஆளாக்கி, எங்கள் தந்தையாருக்கே கொடுத்துத் திருமணம் முடித்தனர். இந்தத் தம்பதியரே என் தாய் தந்தையர் ஆவர்.

அந்தக் காலத்தில் எல்லோருக்கும் பேய் பிசாசுகளிடம் மிகமிக நம்பிக்கையிருந்தது. யாருக்கு என்ன நோய் வந்தாலும் முதலில் மந்திரவாதி வீட்டுக்கோ, குறி சொல்பவன் வீட்டுக்கோ ஓடுவது வழக்கம். எங்கள் தாயாருக்கு இத்தகைய மூட நம்பிக்கைகளில் அதிகம் பிடிப்பிருந்ததால், தம்மை எதோ ஒரு பேய் பிடித்துக் கொண்டு அலைக்கழிப்பதாக மனம் பேதலித்து, நலிந்து தொல்லைப் பட்டுக் கொண்டிருந்தார்களாம். எங்கள் பாட்டனார் எத்தனையோ மந்திரவாதிகளையும், போயோட்டுபவர்களையும் வரவழைத்து வைத்தியம் பார்த்தும், எத்தனையோ மந்திர (மாரண) ஓமங்களை வளர்த்தும், அவர்கள் மெலிந்துகொண்டே இருந்தார்களாம். இத்தகைய வலிவற்ற ஓர் இளம்பெண் வயிற்றில் பிறந்தவனாதலால் குழந்தைப் பருவத்திலிருந்தே நான் வலிவற்று இருந்தேனாம். உடல் நலிவுக்குத் துணையாகப் பிறப்பிலிருந்தே இருமல் ஒன்று பிடித்துக் கொண்டு இன்றுவரை விடாமல் தொல்லைப் படுத்தி வருகிறது. இதற்கிடையில் ஆறுவது மாதத்தில் எனக்கு அம்மை கண்டது. அப்பொழுது எல்லாரும் என்னுடைய ஆயுள் முடிந்து விட்டதாகவே நினைத்துக் கொண்டார்களாம். கண் திறக்காமல், கை கால்களை அசைக்காமல் ஒரு நாள் முழுவதும் உயிரற்ற சிலை போல் கிடந்தேனாம். இத்தகைய உதவாக்கரையான வலிவற்ற ஒரு மனிதன் மூலமாகவும் ஒரு சில பணிகளை நிறைவேற்ற முடியும் என்று காட்டுவதற்காகப் போலும் இறைவன், என்னை இந்தப் பூமியில் நிலைக்க அருள் புரிந்தார்.

என்னுடைய நாலாவது வயதில் என் தந்தையார் காகிநாடாவில் காலமாகி விட்டார். எனக்கு என் தந்தையாரைவிட என் பெரியப்பாவிடந்தான் நெருக்கம் அதிகம். அதனால் அப்பொழுது தந்தை யிழந்த சோகம் என் மனத்தில் தோன்றவில்லை. எங்கள் தந்தையாரின் ஈமச் சடங்குகளுக்குப் பிறகு நாங்கள் அனைவரும் காகிநாடாவை விட்டு ராஜமகேந்திரவரத்தில் குடியேறினோம்.

எழுத்துப் பயிற்சி தொடங்கிய பின்னர் என்னை முதல் முதலில், எங்கள் வீட்டுக்கு இருநூறு கஜ தூரத்திலிருந்த கோபாலஸ்வாமி கோயிலில் நடத்தப்பட்ட பள்ளிக்கு அனுப்பினர். இந்தப் பள்ளியில்

நான் எழுத்துக்கள், அகர வரிசை, வாய்பாடு முதலியன கற்றுக் கொண்டு புத்தகம் படிக்கத் தொடங்கி யிருப்பேன். அதன் பின்னர் எங்கள் வீட்டிற்கு அருகாமையி லிருந்த கோமராஜு என்பவரின் பள்ளிக்கு என்னை அனுப்பி வைத்தனர். இவர் தெலுங்கில் ஓரளவு புலமை பெற்றவர்; மாணவர்களைப் புராணங்கூடப் படிக்கச் சொல்லிப் பொருள் விளக்கிவந்தார். பாலராமாயணத்தை உரை யோடும், அமர நிகண்டையும் என்னை படிக்குமாறு செய்தார். அதன் பிறகு, படிப்பதும், எழுதுவதும் தவிர 'ருக்மிணி கல்யாணம்', 'ஸுமதீ சதகம்', 'கிருஷ்ண சதகம்', 'ஆந்திர நாமசங்கிரகம்' ஆகியவற்றை மனப்பாடம் செய்ய வைத்தார்.

இத்துடன் தெலுங்குப் படிப்பு முடிவுற்ற தென்று, எங்கள் வீட்டுப் பெரியவர்கள் என்னைப் பள்ளியி லிருந்து நிறுத்தி, அரசாங்க வேலைக்குத் தேவையான பயிற்சி (apprenticeship) பெறுவதற் கென்று, தாலுகா கச்சேரியில் இருந்த எங்கள் உறவினரான போத்த ராஜு ரகுராமய்யாவிடம் என்னை ஒப்படைத்தனர். நான் நாள் தோறும் எங்கள் தெருக் கோடியிலிருந்த தாலுகா கச்சேரிக்குச் சென்று, அவர் இட்ட வேலைகளைச் செய்துவந்தேன். இப்படியாக ஓராண்டோ, ஈராண்டுகளோ வீணாயின. அந்தக் காலத்தில் தேர்வுகள் இல்லாததால், அரசாங்க வேலை பார்க்க ஆசையுள்ள வர்கள், அரசாங்க அலுவலகங்களுக்குச் சென்று, வேலையைக் கற்றுக் கொண்டே, அதிகாரிகளை அணுகி அவர்தம் ஆதரவை நாடிவந்தனர். அரசாங்க நிர்வாகப் பொறுப்பைக் கிழக்கிந்தியக் கம்பனியிட மிருந்து உயர்திரு மகாராணி (விக்டோரியா) அவர்கள் தாமே சுயமாக ஏற்றுக்கொண்ட பின்னர், நம் தேசிய மொழிகளிலும், ஆங்கில மொழியிலும் பொதுத் தேர்வுகளும், சிறப்புத் தேர்வுகள் சிலவும் ஏற்படுத்தப்பட்டன.

1860 ஆம் ஆண்டில், எங்கள் வீட்டினர் என்னை அரசினர் மாவட்டப் பள்ளியில் ஆங்கிலம் கற்றுக் கொள்வதற்கென்று அனுப் பினர். பிராம்மண ஆசாரத்தை யொட்டி ஏழாவது வயதிலேயே உபநயனம் (பூணூல் சடங்கு) நடத்தப்பட்டது. அதிலிருந்து நாள் தோறும் முக்காலமும் சந்தியாவந்தனம் செய்துகொண்டு, மிக அக் கறையுடன், காயத்ரி ஜபித்து வந்தேன். அவ்வப்பொழுது மாலை நேரங்களில் கோதாவரிக்குச் சென்று, மறையும் சூரியனுக்கு வணக்கம் செலுத்தி, சந்தியாவந்தனம் முடித்ததுடன், பொழுது மறைந்த பின்னர் மார்க்கண்டேயஸ்வாமி கோயிலுக்கும், வேணுகோபால ஸ்வாமி கோயிலுக்கும் சென்று வந்ததுண்டு. ஏகாதசி யன்று, இரவு

விடியும் வரையில் கண் விழித்ததோடு, ஓராண்டு சிவராத்திரியன்று முழுவதும் தூங்காமலிருந்து விரதம் காத்தேன்.

வீட்டில், ரகுவம்சத்தில் ஐந்து சருக்கங்கள் படித்திருந்ததாலும், புராணங்களின் பொருள் கேட்டுவந்ததாலும், ஓரளவுப் பொருள் உணரும் ஆற்றல் பெற்றவனுகி, எங்கள் வீட்டிலிருந்த பழைய பனேயோலைச் சுவடிகளை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். முனிவர்களைப்போல் தவம் செய்து மகிமைகள் பெறவேண்டுமென்று பலமுறை எனக்குத் தோன்றியதுண்டு. நான் ஆங்கிலம் படிக்கத் தொடங்குவதற்கு முன்னர் எனக்கு வைதிகப் பற்று பெருகத் தொடங்கியது. நான் பக்தனுகிக் கொண்டுள்ளேனென்று என் தாயார் முதலானவர்கள் என்னை ஊக்குவித்து வந்தனர்.

அந்தக் காலத்தில் எனக்கு உடல்வலிமை எந்த அளவு குறைந்திருந்ததோ அந்த அளவிற்கு அறிவுவலிமை பெருகி யிருந்ததென்று சொல்லலாம். நான் அந்தச் சின்னவயதில் எளிதில் புரிந்து கொள்ளும் சக்தியுடன் நல்ல நினைவாற்றலும் பெற்றிருந்தேன். எனினும் அவற்ருல் ஓரளவு நஷ்டமே வந்ததென்று சொல்ல வேண்டும்.

# 2. மாணவப் பருவம்

பள்ளியில் நான் அந்த ஆண்டின் இரண்டாம் பாதியில்தான் சேர்ந்தேன். ஆண்டு முடியும் பொழுது உடன் படித்த மாணவர்களை விஞ்சி எங்கள் வகுப்பில் முதல் பரிசு பெற்றேன். அதுமுதல் இறுதி வரையில் பள்ளியில் நான் பரிசு பெருத வகுப்பே இல்லை. இரண்டாவது வகுப்பில் படிக்கும் பொழுதுதான் எனக்குத் தெலுங்குப் புத்தகங்களின் மீது ஆர்வம் பெருகியது. பள்ளிக்குப் போகும் நேரம் தவிர மற்ற நேரங்களில் எங்கள் வீட்டிலிருந்த பனை யோலைச் சுவடிகளைப் படித்து வரலானேன். என் தாயாரும், பாட்டி யாரும் என்னை மிரட்டிப் பயன் காணுததால், எங்கள் வீட்டிற்கு அருகாமையிலேயே குடியிருந்த எங்கள் ஆசிரியரிடம் சென்று, நான் வீட்டில் ஆங்கிலப் புத்தகமே தொடுவதில்லை என்று சொல்லி, என்னைத் தண்டிக்கும்படி வேண்டிக் கொண்டனர். நான் என் வகுப்பில் ஒவ்வொரு பாடத்திலும் முதல்வனுகவோ, இரண்டா மவனுகவோ இருப்பதாகச் சொல்லி அவர், அவர்களை அனுப்பி விட்டார்.

ஒருமுறை, இருமுறை பார்த்த உடனே மனத்தில் கொள்ளும் ஆற்றல் பெற்றிருந்தமையால், நான் வீட்டிலிருந்து பள்ளிக்குப் போகும் வழியில் பாடத்தைப் பார்த்த அளவிலேயே தப்பில்லாமல் ஒப்புவிக்கும் சக்தி உடையவனுக இருந்தேன். என் அறிவுக் கூர்மையே எனக்குக் கவனக் குறைவையும், சோம்பலையும் கொடுத்து ஓரளவு என்னைக் கெடுத்தது. படித்தது மனத்தில் நிலையாக நில்லாமற் போனதால் சில நாட்களுக்குப் பின்னர் மீண்டும் படித் ததையே படிக்க வேண்டிய நிலையிலிருந்தேன். சோம்பலை உருவாக்கும் கூரிய அறிவைவிட, இடைவெளி யில்லாமல் பாடுபட்டுச் சோம்பலில்லாமல் இருக்கச் செய்யும் மந்தபுத்தியே உலகத்துக்கும் நமக்கும் நன்மை செய்வதாகும்.

அந்தக் காலத்தில் எனக்குப் புராணம் படிப்பதில் வெறி முற்றி யிருந்தது. எப்பொழுது தவம் செய்யத் தொடங்குவது, எப்போது மகிமைகள் பெறுவது என்று நான் தவித்துக் கொண்டிருந்தேன். மூடர்களான என் தோழர்களால் நான் ஓர் அறிஞனுகப் போற்றப் பட்டேன். என் மாயையில் விழுந்தவர்களான என் உடன்படிக்கும்

மாணவர்கள் என்னைவிட வயதில் மூத்தவர்கள். தவத்தின் மகிமையை அவர்களுக்கு விளக்கி, இமயமலையில் தவம் செய்வதாகத் திட்டம் தீட்டி, அவர்களில் மூவரைப் பயணத்திற்கு ஊக்குவித்தேன். பயணம் எப்போது என்று அவர்களே என்னைத் துரிதப் படுத்தத் தொடங்கினர். தூரதேசப் பயணத்திற்குத் துணிச்சல் இல்லாமல் காலம் தாழ்த்தி வரலானேன். ஒருநாள் மாலை அவர்களில் இருவர் என்னிடம் வந்து, அடுத்த நாளே புறப்படுவதாகச் சொன்ஞர்கள். நான் உடன் செல்ல மறுத்து விட்டேன். அவர்கள் அதன் பிறகு என்னிடம் பேசாமல், வடக்கு நோக்கிச் சென்றனர். அன்று பொழுதுபோன பிறகும் அவர்கள் வீட்டிற்கு வராமற் போகவே, உறவினர்கள் தேடத் தொடங்கினர். மூன்ருவது இளைஞனைப் பிட்டாபுரம் அருகில் கண்டு பிடித்து வீட்டிற்கு அழைத்து வந்தனர். விஜயநகரம் வரையில் சென்ற பிறகு முதலாமவன் இரண்டாமவனோடு சண்டையிட்டு, காப்பை விற்றுவிட்டு வீட்டிற்குத் திரும்பி வந்தான். முதலாமவன் வெள்ளி அரைஞாண் கயிற்றை விற்றுவிட்டு, ஜகந்நாதம் வரையில் யாத்திரை சென்று மீண்டு வந்தான்.

என் தாயாரும், பெரியப்பாவும் கலந்து பேசி, எங்கள் பட்டணத்திலிருந்து இரண்டு மைல் தொலைவிலுள்ள, காத்தேரு எனும் கிராமத்தைச் சேர்ந்த அத்தங்கியார் வீட்டுப் பெண்ணை எனக்குத் திருமணம் முடிப்பதற்கு ஏற்பாடு செய்யலாயினர். மணமக்கள் ஒருவரையொருவர் பார்த்த பின்னர், தம் விருப்பத்திற்கு உகந்தவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சுயம்வர முறை, இந்தியாவிலுள்ள பிராம்மணர்கள் கனவில்கூட பார்க்காததொன்று. ஒருவேளை இனிமேலாவது வருமோ என்னவோ? எங்களவர்கள் எல்லோரும் ஆசாரத்திற்கு அடிமைகள். ஆசாரப் பேய் பிடித்துக் கொண்டதெனில் அவர்களிடமிருந்து கருணை, தருமம், சத்தியம், நன்மை எல்லாம் ஓடிவிடும்.

பண்டைக் காலத்தில், மிக இளமையில் கல்யாணம் நடப்பது என்பதே யாருக்கும் தெரியாது. இயற்கைக்கு மாருன இந்த வாலிப வயதில் மணம் என்ற பீடை, ஆசாரப் பேயின் வலிமையால் வந்ததே தவிர விதிவசமானதல்ல. எங்களவர்கள், திருமணம் நிச்சயம் செய்யும் நேரத்தில் பன்னிரண்டு வயதான எனக்குத் திருமணம் என்ன என்பது பற்றி எள்ளளவும் தெரியாது. என்னைவிட நான்கு வயது சிறியவளான என் மனைவிக்கு இது முற்றிலும் தெரிந்திருக்காது. எனக்குப் பதின்மூன்று வயதும், என் மனைவிக்கு ஒன்பது வயதும் இருக்கும்போது, பொம்மைக் கல்யாணம் போல எங்கள் திருமண

விழா நடைபெற்றது. என் கல்யாணத்தில், எங்களவர்கள் பிற செலவுகளைக் குறைத்திருந்தும் தாசி, மேளம் இவற்றிற்காகும் வீண் செலவை மட்டும் நிறுத்த வில்லை. தாசிகள் வராத மணக்கோலம் சோபிக்காதாம்! கௌரவத்திற்குப் பங்கம் வருமாம்! நாலு பேர் முன்னால் தலையிறக்கம் ஏற்படுமாம்!

என் மனைவிக்குப் பெற்றோர் வைத்த பெயர் பாபம்மா. இருந்தாலும் கல்யாணத்திற்குப் பிறகு என் தாயார் அவள் பெயரை மாற்றி, ராஜலக்ஷ்மி என்று தம் தாயார் பெயரைச் சூட்டினர்.

என் திருமணத்திற்குப் பிறகு என் பெரியப்பாவின் மனைவிக்கும் என் தாயாருக்கும் இடையே தகராறுகள் தொடங்கின. இரண்டு பெண்கள் ஓரிடத்தில் சேர்ந்தால் வீணான கலகங்கள் தலைகாட்டாமல் இருக்கா. இப்போது நம் நாட்டில் காணப்படும் இத்தகைய கலகங்களுக்கு முக்கியமான காரணம், தன்னலத்தின் பொருட்டுத் தவறான எண்ணங்களுக்கு ஆளானவர்கள் தம் பெண்டிரைக் கல்வி வாசனையே அற்றவர்களாக ஆக்கி வருவதால், அவர்களைப் பற்றியுள்ள முட்டாள்தனமான போக்கே தவிர, இயல்பாகவே மென்மையான பெண்தன்மை யன்று.

எங்கள் வீட்டுத் தகராறுகளுக்கு முக்கிய காரணம் என் தாயார்தான் என்றே சொல்லவேண்டும். சாந்தத்தன்மை யற்று, பழி வாங்கும் உணர்ச்சியே மிக்கிருந்த என் தாயார், மற்றவர்கள் தம்மை ஒரு சொல் சொன்னவுடனே பதிலுக்குப் பத்துச் சொற்களை வீசி, கலகத்தை வளர்த்தபடித் தம் யதேச்சைப் போக்கை நிலை நாட்டிவந்தார். இருந்தாலும் ஈர உள்ளமும் இதயமும், பிறருக்குதவும் இயல்பும், உண்மைக்குப் புறம்போகாத போக்கும், நெஞ்சத் துணிவும் அவர்களுக்கு அணிகளாக இருந்தன. அவர்களுடைய குணங்களில் சில எனக்கும் ஒட்டிக் கொண்டன. இயல்பில் நானும் கோபச் சுபாவம் உள்ளவன்தான். மற்றவர்கள் தவறு செய்யும்போது என் கோபத்தைத் தடுக்க முடியாது. நான் அப்பொழுது கடுமையான சொற்களால் தாக்குவேன். நான் எத்தனையோ முறை இதனை அகற்ற வேண்டுமென்று முயன்றும் இந்தத் தீயகுணம் இன்று வரை என்னை விடாமல் பற்றிக் கொண்டுள்ளது.

குடும்பக் கலகங்களை நிறுத்தி நிம்மதியை நிலைநாட்டுவதற்கு, குடும்பச் சொத்தைப் பிரித்து, என்னைத் தனிக் குடித்தனம் வைப்பது தவிர வேறு வழியொன்றும் என் பெரியப்பாவிற்குப் புலப்படவில்லை. அவர் 1862 ஆகஸ்ட்டு மாதத்தில், என் மனைவியின் தாய்-மாமனையும் மற்றோர், உறவினரையும் மட்டும் வரவழைத்து, சொத்துப் பட்டியல்

ஒன்று எழுதி, என் சரிபாகத்தை எனக்குக் கொடுத்து விட்டார். என் பாகத்திற்கு வந்த வீட்டிலேயே என் தாயார் எனக்குத் தனியாகச் சமைத்துப் போடத் தொடங்கினுர். என் பெரியப்பா எங்களுக்கு எல்லா வகைககளிலும் உதவி செய்து கொண்டே இருந்தார். பெற்ற பாசத்தைவிட வளர்த்த பாசம் அதிகமல்லவா! இரண்டு குடும்பங்களிடையே கலகம் மறைந்து அமைதியும், இயற்கையான அன்பும், பந்தபாசமும் மீண்டும் பரவத் தொடங்கின. கூட்டுக் குடும்பங்களில் ஓயாத கலகம் குடிபுகுந்து அமைதிக்குப் ஊறு ஏற்படும்போது, குடும்ப பாசத்தை மீண்டும் நிலைநாட்டு வதற்குப் பாகப் பிரிவினையே மேலான வழியாகும்.

இந்தக் காலத்தில் நான் செய்த தவருன காரியம் ஒன்று உண்டு. அது என் மனத்தை நீண்ட காலம் உறுத்தி வந்தது. தெலுங்குக் காவியங்களில் மனுசரித்திரம் சிறந்ததென்று பலரும் சொல்லி வந்தனர். எங்கள் வீட்டிலிருந்த ஓலைச் சுவடிகளில் அது தென்பட வில்லை. என்ன செய்வதென்று தெரியாமல், ஒரு நாள் மனு சரித்திரத்தை வாங்கித் தருமாறு என் தாயாரிடம் துணிந்து கேட்டு விட்டேன். அது என் பாட புத்தகம் அல்லவென்று அறிந்து அவர்கள் என் வேண்டுகோளை நிறைவேற்றவில்லை. அத்துடன் ஆசையை விட்டுவிடாமல், எப்படியாவது மனுசரித்திரத்தை வாங்கி விடுவது என்று முடிவு செய்துகொண்டேன். அந்தப் புத்தகத்தின் விலை நாலரை ரூபாய். என்னிடம் எட்டணுவுக்குமேல் காசு இல்லை. என்னிடமுள்ள எட்டணுவைப் புத்தகக் கடைக்காரனிடம் கொடுத்து, ஒவ்வொரு மாதமும் எட்டணு கொடுத்துத் தவணை முறையில் புத்தகத்தை வாங்கிப் படிக்க வேண்டும் என்ற தவருன எண்ணம் வந்தது. மாதந்தோறும் எட்டணு கொடுக்கக் கூடிய சக்தி அப்போது எனக்கு இல்லை. எனவே நாள்தோறும் சாப்பிட்டுவிட்டு, பள்ளிக்குப் போவதாகப் பாவனை செய்து, எங்கேயாவது உட்கார்ந்து விட்டு மாலை மீண்டு வருவதென்றும், பள்ளிச் சம்பளத்திற்கெனக் கொடுக்கும் எட்டணுவைப் புத்தகத்துக்குத் தவணையாகக் கொடுப்ப தென்றும் முடிவு செய்தேன். புத்தகம் படிக்கும் ஆசை என் மனத்தைக் கெடுக்கவே, நான் உடனே புத்தகக் கடைக்காரனிடம் சென்று என் விருப்பத்தைத் தெரிவித்தேன். என் பேராவாவினைப் புரிந்துகொண்டு, புத்தகத்தின் விலை தீரும் வரையில் கடையிலேயே நான் உட்கார்ந்து அதைப் படிக்கலாம் என்று அந்தக் கடைக்காரர் சொன்னுர். கள்ளத்தனத்தை நீண்டகாலம் ஒளிக்க முடியாது. நான் பள்ளிக்குப் போகாமலிருப்பது இரண்டாவது மாதமே என்

தாயாருக்குத் தெரிந்துவிட்டது. அப்போது அவர்கள் என்னைக் கண்டித்துவிட்டு, கேட்ட உடனே உண்மையைச் சொன்னதற்கும், சம்பளத்தை வாங்கிச்சென்று இனிய தின்பண்டங்களை வாங்காமல் புத்தகத்திற்கு விலையாகக் கொடுத்ததற்காகவும் ஓரளவு மகிழ்ச்சியடைந்து, மீதிக் காசையும், கொடுத்து, என்னை மீண்டும் பள்ளிக்கு அனுப்பினார்கள்.

இந்தப் பிரச்னை முடிந்த சிறிது காலத்திலேயே எனக்கு நோய் கண்டது. நோய் நாளுக்கு நாள் அதிகரிக்கத் தொடங்கியது. குழந்தைப் பருவத்திலிருந்து வந்த இருமலுக்குத் துணையாக வயிற்றுக் கோளாறுகள் என்னைப் பிடித்துக் கொண்டன. இங்கிலீஷ் வைத்தியர்களும், நாட்டு வைத்தியர்களும் பல மாதங்கள் எனக்குப் பல மருந்துகள் கொடுத்தார்களே தவிர, நோய் சற்றும் குறைந்த பாடில்லை. சதை, இரத்தம் எல்லாம் சுண்டிப்போய் வெறும் எலும்புக் கூடாகிவிட்டேன். ஒருவர்பின் ஒருவராக வைத்தியர்கள் அனைவரும் என்னைக் கைவிட்டனர். இப்படியாக, 1863ஆம் ஆண்டுக் கடைசியிலிருந்து 1864ஆம் ஆண்டுக் கடைசிவரை நான் சாவு வாழ்வுக் கிடையில் ஊசலாடிக் கொண்டிருந்தேன். பெரிய வைத்தியர்கள் அனைவரும் என்னைக் கைவிட்ட பின்னர் ஒரு வைத்திய சிகாமணி எனக்குப் பச்சிலை மருந்துகள் கொடுத்து வந்தார். கடைசியில் அவர் வைத்தியத்தில்தான் குணம் கண்டது.

1865இல் கோடைக்கால விடுமுறைக்குப் பிறகு பள்ளியில் முன்பு விட்டுவந்த மூன்றாவது வகுப்பிலேயே நான் மீண்டும் சேர்ந்தேன். ஆறு மாதங்கள் அந்த வகுப்பில் படித்த பின்னர், ஆண்டு முடிவில் நடந்த தேர்வில் நான் முதல்வனாகத் தேறினேன். அதனால் அடுத்த ஆண்டு முழுவதும் எனக்குச் சம்பளம் இல்லாமல் படிக்க வசதி அளிக்கப்பட்டது. அந்த ஆண்டிலிருந்து பள்ளியில் படித்த காலம் முழுவதும் நான் பள்ளிச் சம்பளம் கட்டவேண்டிய தேவையே இல்லாமற் போய்விட்டது.

நான்காவது வகுப்பில் நான் படித்துவந்த காலத்தில், ஒரு நாள் பிற்பகல் நேரம் எங்கள் மாவட்ட நீதிபதியான ஹென்றி மாரிஸ் துரையவர்கள் பள்ளியைப் பார்வையிட வந்தார். பள்ளி மாணவர்கள் அனைவரிலும் நன்னடத்தை யுள்ளவர் பெயரை எழுதச்சொல்லி, அவர் மாணவர் எல்லாருக்கும் துண்டுக் காகிதங்களைக் கொடுத்தார். பிற மாணவருடன் கலந்து பேசுவதற்கு அவர்களுக்கு அப்பொழுது வாய்ப்பில்லை. அதனால் பிள்ளைகள் அனைவரும் அவரவர்களுக்குத் தோன்றிய பெயர்களை எழுதிக் கொடுத்தனர். அந்தத் துண்டுக்

காகிதங்கள் அனைத்தையும் படித்தபொழுது அதிக எண்ணிக்கையுள்ள மாணவர்கள் என் பெயரை எழுதியிருப்பது தெரிய வந்தது. நன்னடத்தைக்காக ஒரு பரிசு கொடுக்கக் கருதி, துரையவர்கள் இவ்வாறு பெயர்களை எழுதச் சொல்லியிருந்தார். அந்தப் பரிசு எனக்கே கிடைத்ததென்று சொல்லவேண்டிய தேவையில்லை. அந்தத் துரையவர்கள் ஐந்து ரூபாய்ப் பெறுமானமுள்ள புத்தகங்களைக் கேட்டுக் கொள்ளுமாறு எனக்குச் சொன்னபோது, நான் மேல் வகுப்பிற்குத் தேவையான புத்தகங்களையும், ஒரு நிகண்டையும் விரும்பினேன். அந்த நிகண்டில் துரையவர்கள் தம் கையால் எழுதிய எழுத்தைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு மகிழ்ச்சித் தோன்றிக் கொண்டிருந்தது. எனக்குப் பரிசாக வந்த பிற புத்தகங்களை யெல்லாம் தொலைத்து விட்டிருந்தாலும், நன்னடத்தைக்குப் பரிசாகக் கொடுக்கப்பட்ட அந்த நிகண்டை இப்பொழுதும் கவனமாகப் பாதுகாத்து வருகிறேன்.

மாணவர்கள் என் மீது நல்லெண்ணம் வைத்திருந்தாலும், அந்தக் காலத்தில் நான் ஒருநாளும் பொய்யே பேசவில்லையென்று சொல்லமுடியாது. அப்பொழுது நான் உரைத்த பொய்யொன்றைக் குறித்து எழுதாமல் விடுவது நியாயமல்ல.

அந்தக் காலத்தில் இருபது ரூபாய் சம்பளத்துக்கு மேற்பட்ட அரசாங்க அலுவலகங்களுக்குத் தகுதி பெறுவதற்கெனப் பொதுத் தேர்வு ஒன்று இருந்தது. அது ஆங்கிலம், தெலுங்கு என்று இரு வேறு பிரிவுகளாக இருந்தது. இந்தத் தேர்விலாவது, பல்கலைக் கழக நுழைவுத் தேர்விலாவது வெற்றி பெற்றால் தவிர, எவரும் சிறப்புத் தேர்வுகளில் கலந்துகொள்ள முடியாது. பொதுத்தேர்வுக் கேள்வித் தாள்களைப் பார்த்தபொழுது எளிதாகத் தென்பட்டதால் எனக்கு அந்தத் தேர்வு எழுத வேண்டுமென்று மிகவும் ஆவல் பிறந்தது. பதினெட்டு ஆண்டுகள் நிரம்பாதவர்கள் அந்தத் தேர்வில் எழுதக் கூடாது. எனக்கு வயது அப்பொழுது பதினெட்டு நிரம்பவில்லை. இருந்தாலும் விரைவில் தேர்வில் வெற்றி பெறவேண்டும் என்ற இளமைத் துடிப்பின் காரணமாக என் வயது சுமார் பத்தொன்பது என்று விண்ணப்பத்தாளில் (application) எழுதி அனுப்பினேன். அந்த ஆண்டே நான் இருமொழித் தேர்வில் வெற்றி பெற்று, வட சர்க்கார் மாவட்டங்களில் இரண்டாமவனாக வந்தேன். அந்தக் காலத்தில் அறிவுக்குத் தெரிந்து நான் உரைத்த பொய் இது ஒன்று தான் என்பது என் கருத்து.

நான்காவது வகுப்பிலும் ஆண்டுத்தேர்வில் நானே முதல்வனாக வந்தேன். மொத்த எண் (maximum marks) 480 இல் எனக்குக் கிடைத்தது 420. அப்பொழுது பள்ளி மேற்பார்வையாளரான பவர்ஸ் துரையவர்கள் என் அறிவைப் பாராட்டி, என்னைத் தனியாகத் தம் அறைக்கு அழைத்து, நாற்காலியில் அமரச்செய்து, நுழைவுத்தேர்வில் வெற்றிபெற்ற பிறகு சென்னைப்பட்டணம் சென்று, பட்டத்தேர்வு வரைக்கும் படிக்க வேண்டுமென்று அறிவுரை கூறினார்.

1867 ஆம் ஆண்டு ஐந்தாவது வகுப்பில், அதாவது நுழைவுத் தேர்வு வகுப்பில், என் படிப்பு முற்றுப் பெறவில்லை. என் பெரியப்பா நோய்வாய்ப்பட்டு, சில மாதங்கள் வாதைப்பட்ட பின்னர், உலக வாழ்வை நீத்தார். அவர் படும் நோயைச் சகியாது மனம் கசந்த காரணமாக நான் பள்ளிக்குச் சரியாகப் போவதும், பாடங்களைச் சரிவரப் படிப்பதும் தடைப்பட்டன. பள்ளியைவிட்டு வேலைக்குப் போகுமாறு எங்கள் உறவினர் பலர் எனக்கு ஆலோசனை கூறியதுடன், என் தாயாரிடமும் கூறினர். எனக்குப் படிப்பை நிறுத்துவது சற்றும் பிடிக்கவில்லை யென்றாலும், என் தாயார், மற்றும் உறவினர்களின் தூண்டுதலால், வேலையில் சேர்வதற்கென்று மாவட்ட நீதிபதியான மாரீஸ் துரையவர்களைச் சென்று கண்டேன். பொதுத் தேர்வில் வெற்றி பெற்றிருந்ததால் அரசாங்க உத்தியோகத்திற்கு தகுதி பெற்றிருந்தேன். மார்ரீஸ் துரையவர்கள் எனக்குப் பரிசு கொடுத்த காலத்திலிருந்து என் கல்வி நலங்களைப் பற்றிக் கேட்டு என்னை ஆதரித்து வந்தவராவார். நான் சென்று பேட்டி கண்டபொழுது, துரையவர்கள் என் பெரியப்பா மறைவிற்கு வருத்தம் தெரிவித்து எனக்கு ஆறுதல் சொல்லியதுடன், எனக்கு ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்வதாகவும் வாக்களித்தார். அப்பொழுது மாவட்ட நீதிமன்றத்தில் சிரஸ்தாதாராக இருந்த நாராயணப்பா எங்கள் வகுப்பைச் சேர்ந்தவர், எங்கள் குடும்பத்திடம் மிகவும் நெருங்கியவர். இவ்வாறிருக்க, இரண்டு மூன்று நாட்களில் அந்த வேலை, தேர்வில் வெற்றிபெறாத வேறொருவனுக்குக் கொடுக்கப்பட்டதாகத் தெரிந்தது. இது எவ்வாறு நடந்ததென்று விசாரித்தபோது, சிரஸ்தாதார் நூறு ரூபாய் கையூட்டு வாங்கிக்கொண்டு, அந்த வேலையை அவனுக்குப் போட்டுக் கொடுத்ததாகத் தெரியவந்தது. ரூபாய்க் காற்று அடிக்கும் போது, அதன் முன்னர் உறவு, நட்பு ஆகிய அனைத்துமே பறந்து போக வேண்டியதுதானே !

அந்த வேலை எனக்குக் கிடைக்காமலிருந்தது, கடவுள் என் நன்மையைக் கருதியதால் போலும். அந்த வேலையிலேயே இருக்க

நேரிட்டிருந்தால், சளியில் விழுந்த ஈயைப் போல இராப் பகலாக அந்தப் பயனற்ற வேலையில் தொல்லைப்பட்டு, நானெப்படி யெல்லாம் அல்லல் பட்டிருப்பேனோ!

இவ்வாறு, ஆசைப்பட்டு ஏமாற்றம் கண்டதால் கோபங் கொண்டு, இனி எப்போதும் நீதிமன்றத்தில் குமாஸ்தா வேலை பார்ப்பதில்லை என்று உறுதிபூண்டு, மீண்டும் பள்ளிக்குச் செல்லத் தொடங்கினேன். இவ்வாறிருக்க, மற்றொரு விசித்திரக் கதை நிகழ்ந்து என் படிப்புக்கு வேறோர் இடைஞ்சலைத் தோற்றுவித்தது.

அப்போது எங்கள் தலைமையாசிரியரான வையாபுரி முதலியார், ஆங்கில மொழியில் அதிகப் புலமை யிராததால் தேர்வுக்கென அமைத்திருந்த ஆங்கிலக் காவியத்தைச் சரிவர போதிக்க இயலாத வராக இருந்தார். எனவே, மாணவர்களின் நன்மைக்காக அவரை அனுப்பிவிட்டு, அவருடைய இடத்திற்குத் திறமையுள்ள மற்றொரு வரை வரவழைப்பது முறையென்று எனக்கு உறுதியாகப் பட்டது. என் தோழர்களான மற்ற மாணவர்களும் இதை ஆமோதித்தனர். உடனே கல்வி அதிகாரிக்கு அனுப்புவதற்கென்று ஆங்கிலத்தில் ஒரு கூட்டு விண்ணப்பத்தை எழுதினேன். அதில் என் வகுப்பில் உள்ளவர்களிடம் கையெழுத்து வாங்கினேன். ஏனைய வகுப்பு மாணவர்களிடம் கையெழுத்து வாங்குவதற்காக, என் இளம் பருவத்துத் தோழனும், எங்கள் கீழ் வகுப்பில் படித்துக் கொண் டிருந்தவருமான கனபர்த்தி லக்ஷ்மய்யாவிடம், ஒரு ஞாயிற்றுக் கிழமை கொடுத்தனுப்பினேன்.

இந்த விண்ணப்பத்தின் விஷயம் எங்கள் தலைமை யாசிரியருக்கு எப்படியோ தெரிய வந்தது. அதைக் கொண்டுவந்து தம்மிடம் கொடுக்குமாறு, எங்கள் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த மொண்ட் ரேட்டி ராமச்சந்திருடு என்பவனிடம் இனிமையாகப் பேசி அவனை உடன்படச் செய்தார். அவர் அதில் கையெழுத்துப் போட்டுக் கொண்டு வருவதாக நடித்து, விண்ணப்பத்தைத் தம் வீட்டிற்குள் கொண்டு சென்று, புழக்கடை வழியாக சென்று நேரே எங்கள் தலைமை யாசிரியரிடம் கொடுத்து விட்டார்.

அடுத்த நாள் தலைமையாசிரியர் நான்காவது வகுப்பிற்குச் சென்று என் நண்பனை, மாட்டை அடிப்பது போல் அடித்தார். அதைப் பார்த்தபோது என் மனத்தில் தாங்க முடியாத அளவு வெறுப்பு உண்டாயிற்று. அப்பொழுது என் மனம் பட்ட வேதனையை வார்த்தைகளால் வருணிக்க முடியாது. தலைமையாசிரியர் என் நண்பனை அவ்வாறு அடித்துவிட்டு, என் வகுப்பிற்குள் வந்து,

அடக்க முடியாத கோபத்துடன் என்னை, 'முட்டாள்' என்று திட்டினார். நான் சட்டென்று எழுந்து வகுப்பை விட்டு வெளியே சென்றேன். என் வகுப்பைச் சார்ந்த மாணவர்கள் என் பின்னாலேயே வெளியே வந்து, என்னோடு சேர்ந்து அனைவரும் அவரவர் வீடுகளுக்குச் சென்றுவிட்டனர்.

நியாயமான விஷயத்தில் எனக்கு ஆத்திரம் வரும்போது, என் கோபத்திற்கும், பிடிவாதத்திற்கும் எல்லை இருக்காது. அப்பொழுது நான் ஆசியரென்றோ, உறவினரென்றோ, நண்பனென்றோ, வலியவனென்றோ பாராது, எடுத்துக்கொண்ட காரியத்தில் ஆழ்ந்து, கடைசி வரை வேலை செய்வேன். அந்தத் தலைமையாசிரியரை அனுப்பும் வரையில் நான் வாளாயிருப்பதில்லையென்று முடிவு செய்து கொண்டேன். எங்கள் பள்ளி ஆசிரியர் சிலர், எங்களுக்கு ஊக்கம் அளித்தனர். நாங்கள் கட்டுப்பாட்டோடு, மறு நாளிலிருந்து பள்ளிக்குப் போவதை நிறுத்திக் கொண்டோம். தலைமையாசிரியர் மாணவர்களை மீண்டும் பள்ளிக்கு வரச் செய்வதற்கு மிக மிக முயன்றார். செய்த முயற்சிகள் யாவும் வீணாயின.

நாங்கள் அடுத்த நாளே, கூட்டு விண்ணப்பம் ஒன்றைத் தயாரித்து, அதில் ஏராளமான பேரிடமிருந்து கையெழுத்து வாங்கி, ஒரு பிரதியைச் சென்னையிலிருந்த கல்வி மேலதிகாரிக்கும், மற்றொரு பிரதியை விசாகப்பட்டணத்திலிருந்த பள்ளி மேற்பார்வையாளர்க்கும் அனுப்பினோம். அன்றே கல்வி மேலதிகாரியான கர்னல் வாக்தானல்ட் துரைக்கும், பள்ளி மேற்பார்வையாளரான கிரிக் துரைக்கும் தந்தியும் அனுப்பினோம். கிரிக் துரை சில நாட்களில் ராஜமகேந்திரவரத்திற்கு வந்து, எங்களனைவரையும் வரச் சொல்லி விசாரித்து, வையாபுரி முதலியாரை வேறோர் இடத்திற்கு மாற்ற வேண்டுமென்று மேலிடத்துக்கு எழுதினார். கல்வி மேலதிகாரி, வையாபுரி முதலியாரை நரசாபுரத்திற்கு அனுப்பி, செங்கல்வ குப்புஸ்வாமி சாஸ்திரியாரை ராஜமகேந்திரவர மாவட்டப் பள்ளித் தலைமை யாசிரியராக அனுப்பினார். அதன் பிறகு நாங்களனைவரும் மீண்டும் பள்ளிக்குப் போகலானோம்.

இந்தக் காலத்தில்தான் நான் கவிதைகள் இயற்றத் தொடங்கினேன். அதுவரையில் நான் விக்ரக ஆராதனை செய்பவனாகவே இருந்தேன். உபவாசங்களும், விரதங்களும் கடவுளுக்குப் பிடித்தமானவை என்றே நம்பி வந்தேன். கவிதை இயற்றத் தொடங்கிய உடனே, முதன் முதலில் வேணுகோபால ஸ்வாமி மீது ஒன்றும், மார்க்கண்டேய ஸ்வாமி மீது ஒன்றுமாக இரண்டு கந்தபத்ய

(ஒருவகை யாப்பு) சதகங்களை இயற்றினேன். இந்தச் சதகங்கள் நன்ருக இல்லையென்று ஒரு மூலையில் எறிந்து விட்டதால் சிதைந்து போயின.

நான் அப்பொழுது வேதாந்தத்தில் அதிக ஈடுபாடு கொண்டவனுக இருந்தேன். மந்திரச் சக்தியிலும் அதிக நம்பிக்கை கொண்டவனுகி, பல்லாயிர முறை காயத்ரி ஜபம் பண்ணியதோடல்லாமல், ஆஞ்சநேய மந்திரம், ராமமந்திரம் ஆகிய இரண்டையும் உபதேசம் பெற்று, பல வாரங்கள் உச்சரித்து வந்தேன். மந்திர மகிமையால் பேய் பிசாசுகள் தொலைந்து போகும் என்று நம்பி, அவற்றைக் கண் கூடாகப் பார்க்கவேண்டுமென்ற ஆசையால், பேய் பிசாசுகள் பிடித் திருப்பவர்களின் வீடுகளுக்குச் சென்று, மாந்திரீகர்கள் நடத்தும் மந்திர தந்திரங்களை எல்லாம் பார்த்ததுடன், மந்திரவாதிகளைப் பின் பற்றிச் சென்று, ஒரு பூதத்தையாவது எனக்கு காட்டுமாறு அவர் களில் பலரை எவ்வளவோ வேண்டியும், ஒருவரும் காட்டவில்லை.

ஒரு மாந்திரீகன் மட்டும் எனக்குப் பிசாசைக் காட்டுவதாகச் சொல்லி, ஓர் இரவு என்னை ஊருக்கு வெளியே ஓர் ஆலமரத்தின் அருகில் அழைத்துச்சென்ற பிறகு, 'காட்டிட்டா நீ நடுநடுங்கிப் போவே' என்று சொல்லித் தப்பிக்கப் பார்த்தான். 'நான் பயப்பட மாட்டேன். என்மேலே கருணைவெச்சுக் கட்டாயமாக் காட்டணும்' என்று வேண்டிக் கொண்டேன். 'நீ பயப்படாம போனாலும் அரசாங்கத்தால் எனக்குத் தொந்தரவு வரும்' என்று சொல்லி என் ஆசையைக் குலைத்துவிட்டு அவன் போய்விட்டான்.

பேய் பிசாசுகள் சுடுகாடுகளில் நள்ளிரவில் திரியும் என்று எல்லாரும் சொல்வதால், அவற்றைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலால், பலமுறை நள்ளிரவில் யாரிடமும் சொல்லாமல் சுடுகாட் டிற்குத் தனியாகச் சென்று, பிசாசு பயம் கொஞ்சங்கூட இல்லாமல் சுற்றிவிட்டு, எண்ணம் நிறைவேருமல் திரும்பி வந்துகொண் டிருந்தேன்.

இந்தக் காலத்தில்தான் என்னுடைய பழைய நம்பிக்கைகள் சில மாறத் தொடங்கின. யாரிடமிருந்தோ கேசவ சந்திர ஸேன் அவர் களின் சொற்பொழிவுகள் சிலவற்றை வாங்கிப் படித்தேன். அந்தச் சொற்பொழிவுகளைப் படித்ததாலேயே, என்னைப் பொறுத்தவரையில் மெய்யென்று நம்பிய சில விஷயங்களைப் பற்றி ஐயம் பிறந்தது. அந்தச் சமயத்தில் ஆத்மூரி லக்ஷ்மீ நரசிம்மம், பந்தரு (மச்சிலி பட்டணம்)விலிருந்து, எங்கள் பள்ளிக்குத் துணைத் தலைமையாசிரிய ராக வந்தார். அவர் பிராம்ம சமாஜ மதச் சித்தாந்தத்தை அவ்வப்

பொழுது சொல்லி வரலானுர். அவருடைய தூண்டுதலால், பயன் படக்கூடிய விஷயங்களைப் பற்றி விவாதிப்பதற்கென, மாணவர் களிடையே ஒரு சங்கத்தை உருவாக்கிக் கொண்டோம். நாங்கள் ஐந்தாறு பேர் லக்ஷ்மீநரசிம்மம் அவர்கள் வீட்டிலாவது, எங்கள் வீட்டிலாவது சந்தித்து வந்தோம். அந்தக் காலத்தில் நான்கு பேர் ஓரிடத்தில் சந்தித்துக் கூட்டம் நடத்துவதே தவருகக் கருதப் பட்டது. நாங்கள் தெருவில் போகும்பொழுது எங்களைச் சுட்டிக் காட்டி, 'மீட்டிங்குகாரங்க இவங்கதாண்டா' என்று மூடர்கள் கேலி செய்து வந்தார்கள்.

அந்த ஆண்டு இறுதித் தேர்வில் எனக்குப் பரிசு கிட்டியது. நான் அந்த ஆண்டு, பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வு எழுதினேன். என்ருலும் வெற்றி பெறவில்லை.

1869ஆம் ஆண்டில் என்னை மீண்டும் நோய் ஆட்கொள்ளவே, இருமலும் பலவீனமும் அதிகமாயின. அப்பொழுது நான் படுக்கை யிலேயே விழுந்து கிடக்கவில்லை. வீட்டிலேயே இருந்துகொண்டு, உடல் சற்று நலமடைந்தபொழுது கவிதைகள் எழுதிக்கொண்டிருந் தேன். சிறிய வயதிலிருந்தே என் சிந்தனைகள், முடியும் முடியா தென்ற கவலையில்லாமல் உயர்ந்த இலக்கை நோக்கியே போய்க் கொண்டிருந்தன. காவியங்களைப் படிக்கும்பொழுது சிறந்த காவியங்களை இயற்ற வேண்டுமென்ற எண்ணம் பிறக்கும். தூய தெலுங்குக் காவியங்களை ஒருவர் இருவரே எழுதினரென்றும், 'நிரோட்டக' (உதடுகள் சேர்ந்து ஒலிக்காத) காவியத்தை ஒரு கவிஞரே இயற்றியுள்ளாரென்றும், 'நிர்வசன' (உரையிடையற்ற) காவியத்தை ஒரு கவிஞரே இயற்றியுள்ளாரென்றும் அறிந்து கொண்டேன். இந்த மூன்று பண்புகளையும் ஒரே காவியத்தில் பிணைத்து அரியதொரு புதிய வழியை வருக்க வேண்டுமென்ற எண்ணம் என் மனத்தில் பிறந்தது. சாதாரணமாக எண்ணம் ஒன்று என் மனத்தில் பிறப்பதற்கும், அதைச் செயல் படுத்துவதற்கும் இடையே அதிக இடைவெளி இருக்காது. உலக அனுபவமற்ற வனும், புலமைத் திறன் இல்லாதவனுமான நானெங்கே, பெருங் காவியமெங்கே என்று சற்றும் தயங்காமல் முயற்சி செய்து, 'சுத்தாந்த்ர நிரோஷ்ட்ய நிர்வசன நைஷத' மென்ற பெயரில் நள சரிதத்தை இயற்ற முற்பட்டு, நான் எடுத்த முடிவை எப்படியோ சாதித்து மனநிறைவு அடைந்தேன். இந்தக் காலத்தில்தான் 'ரஸிக மனேரஞ்ஜனமு' என்ற கலம்பகப் பிரபந்தம் ஒன்றையும் இயற்றத் தொடங்கினேன்.

அந்தக் காலத்தில் சித்ரபு காமராஜு என்பவர் மாவட்ட நீதி மன்றத்தில், அரசாங்க வழக்கறிஞராக இருந்தார். அவருக்கு ஆங்கிலம் சரிவரத் தெரியாதாகையால், மாவட்ட ஆளுனர் மற்றும் பிற அதிகாரிகளோடும் ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்வதற்கென, மாதம் இருபது ரூபாய்ச் சம்பளம் கொடுப்பதாகச் சொல்லி, காலைதோறும் மூன்று மணி நேரம் தம் வீட்டிற்கு வந்து வேலை செய்யுமாறு என்னைக் கேட்டுக் கொண்டார். வைப்பாட்டியைக் கொள்வது கௌரவத்தின் ஒரு சின்னம் என்று கருதும் பழைய நாகரிக உலகத்தைச் சேர்ந்தவர் அவர். வைப்பாட்டி விஷயத்தை மிக மட்டமானதெனக் கருதும் புதுமைப் போக்கைச் சேர்ந்தவன் நான். அவர் வீட்டில் நான் வேலை செய்யும் நேரத்தில் அவருடைய வைப்பாட்டி வந்து அவர் பக்கத்தில் அமர்ந்துஅவரோடு சரச சல்லாபம் நடத்திக் கொண்டிருப்பாள். அது பிடிக்காததால், முதல் மாதமே சம்பளம் பெற்றுக் கொண்டதும் வேலையிலிருந்து நின்று விட்டேன்.

அதன் பிறகு, ராஜமகேந்திரவர மாவட்டப் பள்ளித் தலைமை யாசிரியரான பாரோ துரைக்கும், காவல்துறைப் பெரிய அதிகாரி யான கேப்டன் ஹால்லெட் துரைக்கும் தெலுங்கு கற்றுத் தரும் பணியை ஏற்றேன். அவர்களிருவராலும் எனக்கு 35 ரூபாய் கிடைத்து வந்தது.

1869ஆம் ஆண்டு நான் தேர்வுக்குப் போகவில்லை. 1870ஆம் ஆண்டு, பாரோ துரை வெளியிட்டுவந்த ‘கோதாவரி எஜுகேஷனிஸ்ட்’ (Godavari Educationist) என்ற மாதப் பத்திரிகையை நான் தெலுங்காக்கம் செய்து வந்தேன். நான் பள்ளியில் படிக்காமலே 1870ஆம் ஆண்டு, பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வு (entrance test) எழுதி வெற்றி பெற்றேன்.

# 3. 1870 முதல் 1880 வரை

புகுமுகத் தேர்வில் வெற்றி பெற்ற சில மாதங்களிலேயே, 1871 ஏப்ரல் மாதம் போலும், நான் ராஜமகேந்திரவர அரசினர் மாவட்டப் பள்ளியில் 25 ரூபாய் மாதச் சம்பளத்தில், ஆசிரியனாக நியமிக்கப் பட்டேன். அந்த வேலையில் இருந்த சொற்ப காலத்தில் நான் சில வகுப்புகளுக்கு ஆங்கிலம், கணக்கு, மற்றும் இந்தியநாட்டு வரலாறு முதலியன கற்பித்து வந்தேன். அந்தக் காலத்திலேயே என்னிடம் மாணவர்களுக்குப் பயபக்தியும், உடன் பணியாற்றும் ஆசிரியர் களிடம் மதிப்பும் இருந்து வந்தன. ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம், துரிசேட்டி சேஷகிரி ராவ் பந்த்துலு, வேப்பா கிருஷ்ணமூர்த்தி பந்த்துலு முதலியவர்கள் நான்காவது வகுப்பில் என்னிடம் படித்த வர்கள். கிருஷ்ணமூர்த்தியின் தமையனார் வேப்பா ராமமூர்த்தி பந்த்துலு, அந்தக் காலத்தில், எங்கள் பள்ளியில் துணைத் தலைமை யாசிரியராகப் பணியாற்றி வந்தார். ஒரு நாள் கிருஷ்ணமூர்த்தி பந்த்துலு சற்று அடக்கக் குறைவாக நடந்து கொள்ளவே, உடனே நான் அவரைப் பெஞ்சியின் மேல் நிற்க வைத்தேன். நான்கைந்து நிமிடங்களுக்குப் பின்னர் என்னுடன் பணியாற்றும் ஆசிரியர் ஒருவர் வந்து, இரகசியமாகப் பேசவேண்டும் என்று என்னை வெளியே அழைத்துச் சென்று, 'அந்தப் பையன், ராமமூர்த்தி பந்த்துலுவோட தம்பி' என்று சொன்னார். 'ஆமாம், எனக்குத் தெரியும்' என்று சொல்லிவிட்டு, என் வகுப்பிற்குச் சென்றுவிட்டேன். மாலை ஐந்து மணிக்குப் பள்ளி விட்ட உடனே, ராமமூர்த்தி பந்த்துலு என்னருகில் வந்து, தம் தம்பி என்று பாராமல், ஒழுங்கு முறையைக் கடைப்பிடித்ததற்காக என்னைப் பாராட்டிவிட்டு, தம் நன்றியைத் தெரிவித்தார். கிருஷ்ணமூர்த்தி பந்த்துலுவும் என்னிடம் அன்புட னேயே இருந்தார் என்பதை மெய்ப்பிக்கும் வகையில், 1876ஆம் ஆண்டு, சென்னை மாநிலக்கல்லூரியில் அவர் படித்துக் கொண்டிருந்த பொழுது, தாமாக எனக்கு எழுதிய கடிதத்தில், 'என் வாழ்நாளில் தங்களை எப்பொழுதும் கௌரவிக்காமலிருக்க முடியாது' என்ற பொருள்படும்படி எழுதினார்.

பிறரிடம் வேலை பார்க்காமல் சுதந்திரமாக இருக்கும் விருப்பத்தில், வழக்கறிஞராகப் பணியாற்ற வேண்டுமென்ற எண்ணம் எனக்கு

இருந்து வந்தது. மாவட்டப் பள்ளியில் என்னுடன் பணியாற்றும் ஆசிரியரும், இளமையில் என் வகுப்புத் தோழரும், உறவினருமான சல்லபல்லி பாப்பய்ய பந்த்துலு என் நெருங்கிய நண்பராக இருந்து வந்தார். ஆசிரியர்களாக இருந்த காலத்திலேயே நாங்கள் இருவரும் சேர்ந்து படிக்கத் தொடங்கி, 1871 ஆவணி மாதத்தில், கிரிமினில் ஹையர் கிரேட் தேர்வு எழுதினோம். நாங்கள் வெற்றி பெற்றதாக 1872ஆம் ஆண்டு அரசினர் அறிக்கை இதழில் வெளியிடப்பட்டது.

இந்தக் காலத்தில் பேய் பிசாசுகள் பிடித்து ஆட்டுவது, சோதிட சாத்திர அடிப்படையில் முகூர்த்தம் வைப்பது, ஜாதகம் சகுனம் பார்ப்பது முதலியவற்றில் நம்பிக்கை முற்றிலும் அற்றுவிட்டது. என் அவநம்பிக்கையை உலகிற்குக் காட்டுவதற்கு விரைவிலேயே எனக்கு ஒரு வாய்ப்புக் கிட்டியது. எங்கள் புழக்கடையில் இருந்த வாழை மரமொன்று, உச்சியிலிருந்து அல்லாமல், இடையிலிருந்து பிளந்துகொண்டு பூ விட்டுக் குலை தள்ளியது. அது தீமைக்கு அறிகுறியென்றும், உடனே மரத்தை வெட்டிவிட வேண்டு மென்றும் அக்கம் பக்கத்தவர், உறவினர் யாவரும் பலவிதமாகக் கூறினர். அவர்கள் அறிவுரையைக் காதில் வாங்காமல், அந்த மரத்தை அப்படியே விட்டு வைத்தேன். காய் முற்றிக் கறிக்குப் பக்குவமாக வந்த பிறகு குலையை அறுத்து, அதன் பிறகு கன்றின் நலம் கருதி, அந்த மரத்தை வெட்டிவிட்டேன். அந்தச் சமயத்திலேயே எங்கள் வீட்டுத் தூண் ஒன்றின் உச்சியில் தேனிக்கள் கூடு கட்டின. அப்படிக் கூடு கட்டுவது துர்நிமித்தம் என்றும், அதை உடனே அகற்றிவிட்டுப் பரிகாரமாகப் பிராம்மணர்களைக் கொண்டு சாந்தி செய்ய வேண்டுமென்றும் எல்லாரும் சொல்லிப் பார்த்து, பயனில்லை யென்று பேசாமல் விட்டனர்.

1872 ஆனி மாதத்தில், கோரங்கியெனும் கிராமத்தில் இருந்த ஆங்கிலப் பள்ளியில் 30 ரூபாய் மாதச் சம்பளத்தில், தலைமை யாசிரியர் பதவி எனக்குக் கிட்டியது. நல்ல நாள் பார்த்துப் போய்ச் சேரும்படி ஏனையோரும், எங்கள் வீட்டினரும் என்னை வற்புறுத்தினர். அவர்களைப் பொருட்படுத்தாமல், அமாவாசையன்று புறப்பட்டுச் சென்று வேலையில் சேர்ந்தேன். நான் அங்கே இருந்த காலத்தில், சிறப்புத் தேர்வுகளில் ஒன்றான, இரண்டாம் நிலை மொழிபெயர்ப்புத் தேர்வில் (Translation Lower Grade) ஆங்கிலம், தெலுங்கு ஆகிய மொழிகளில் எழுதி வெற்றி பெற்றேன்.

என் தாயாருக்குப் பேய்ப் பிரமை இருந்ததென்று ஏற்கனவே சொல்லியுள்ளேன். கோரங்கியிலிருந்த காலத்திலும் என் தாயாரை

அந்தப் பிரமை பிடித்து வந்தது. அங்கு இருந்தவர்கள், சிறந்த மாந்திரீகன் ஒருவனை அழைத்து வந்தனர். அந்தப் பிராம்மண யோகி மிகவும் திடகாத்தரமானவன்; தாடியும் நகங்களும் வளர்த்திருந்தான். காலில் கட்டைச் செருப்பணிந்து, கையில் பிரம்பேந்தி, காஷாய உடை உடுத்தி, நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டொன்று தரித்து மிகவும் பயங்கரமான தோற்றத்தோடு இருந்தான். அவன் கஞ்சா புகைப்பவன். எனக்கு மந்திர வித்தையிலும், பேய் பிசாசுகளிலும் நம்பிக்கையில்லாமற் போனாலும், அவனை என் வீட்டில் தங்கவைத்துச் சாப்பாடு போடுவதாகவும், என் தாயார் குணமான பிறகு தக்க பரிசளிப்பதாகவும் சொன்னேன். அவன் அதற்கு உடன்பட்டு, எங்கள் வீட்டில் வந்துசேர்ந்தான். வந்ததிலிருந்து அவன் பல சாக்குப்போக்குச் சொல்லி என்னிடமிருந்து பணம் கறக்க முயன்றான். என் தாயார் குணமடைந்தால் ஒழிய ஒன்றும் தர முடியாதென்று நான் மறுத்து விட்டேன். அப்பொழுது அவன் கனல் தெறிக்கும் கண்களோடு என்னை முறைத்துப் பார்த்துக் கண்டபடி வையத் தொடங்கினான். நானும் பொறுக்க முடியாத சினங்கொண்டு, என் பள்ளிப் பணியாளைவிட்டு அந்த யோகீசுவரனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளச் செய்தேன். அவன் பிறிதோர் இடத்திற்குச் சென்று, ஒரு வீட்டில் ஓர் அறையை வாடகைக்குப் பிடித்து, மெழுகிக் கோலம் போட்டு, அதில் ஏதோ யந்திரம் வரைந்து, மந்திரப் பிரயோகத்தால் என்னைக் கொன்று விடுவதாகச் சொல்லிக்கொண்டு, ஏதோ மந்திரம் ஜபிக்கத் தொடங்கினான். என் நண்பர்கள் பயந்துபோய், அவன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்குமாறு எனக்கு அறிவுரை கூறினர். நான் அவர்கள் பேச்சைக் கேளாமல் அனுப்பிவிட்டேன். அந்த யோகி இரவு வரையில் சாப்பாடில்லாமல், இருட்டில் 'ஹ்ரீம்' 'ஹ்ராம்' என்று கத்திக்கொண்டிருந்தான். சாப்பாடில்லாமல் போனதாலோ, தூக்கக் கலக்கத்தாலோ, கஞ்சா மயக்கத்தாலோ—அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ, அவன் நடுக்கங்கண்டு கீழே விழுந்து, தன்னை யாரோ கீழே தள்ளி விட்டதாகப் பிரமைகொண்டு, நடு நடுங்கிப் போனான். அவனுக்கு உடனே பயக் காய்ச்சல் கண்டது. மறுநாள் விடியற்காலையில் தன்னைப் பார்க்க வந்த எல்லாரிடமும், நான்தான் ஏதோ 'சரப சாள்வ'த்தை (மந்திரச் சக்தி வாய்ந்த ஒருவகை கோர மிருகம்) தன்மீது ஏவிவிட்டதாகவும், அது விரைவில் தன்னைக் கொன்றுவிடும் என்றும் அந்த யோகி சொல்லலானான். நான் இரண்டு நாட்கள் அதைப் பொருட்படுத்தாமல் பேசாமலிருந்

தேன். ஆனால் அவன் வரவரப் பலவீனமடைந்து, இடை இடையே என் பெயரையே புலம்பிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டு, பரிவு கொண்டு, அவனிடம் சென்று, நான் ஒன்றும் செய்யவில்லை யென்று அவனை நம்ப வைத்து எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்தேன். படிப் படியாக அவன் நலம்பெற்றுப் பழைய நிலைக்கு வருவதற்கு ஒரு மாதம் ஆகியது.

1874 ஆடி மாதத்தில், நான் கோரங்கியி லிருந்து, வேலையை விட்டுவிட்டு, ராஜமகேந்திரவரத்திற்கு நான்கு மைல் தொலைவி லுள்ள தவளேசுவரத்தில், ஆங்கில—தேசிய மொழிப் பள்ளியில், 44 ரூபாய் மாதச் சம்பளம் கொண்ட தலைமை யாசிரியர் பணியை ஏற்றேன். இங்கிருந்த காலத்தில் கொக்கொண்ட வெங்கடரத்னம் பந்துலு பெண்கல்விக்கு எதிர்ப்பாக, 'ஆந்திர பாஷா ஸஞ்ஜீவனி' யில் எழுதி வந்ததைக் கண்டித்து, நான் பெண்கல்விக்கு ஆதர வாகப் 'புருஷார்த்தப் பிரதாயினி'யில் எழுதலானேன்.

1875 ஆம் ஆண்டில், நான் சுருக்கி வரைதல் (Precis writing) தேர்வில் ஆங்கிலத்தில் வெற்றி பெற்றேன். இந்தத் தேர்விற்கென நான் ராஜமகேந்திரவரம் சென்றபோதுதான், அங்கு அரசினர் கலைக் கல்லூரித் தலைவரான மெட்காஃப் துரையை முதல் முறையாகச் சந்திக்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. சுருக்கி வரைதல் தேர்வில் வெற்றி பெற்றதனால் நான் சப்மாஜிஸ்டிரேட் வேலைக்குத் தகுதி உடையவனானேன், பொது விவகார உயர்நிலைத் (Civil Higher Grade) தேர்வில் வெற்றி பெற்றுவிட்டால் முதல்நிலை மாஜிஸ்டிரேட் பதவிக்கும், சப்-ஜட்ஜ் பதவிக்கும் நான் தகுதி பெற்றிருப்பேன். என் நண்பர்களான நீதிபதிகள் சிலர், தம் பணியில் உண்மையான சுதந் திரமில்லை யென்றும், அதில் நியாயமாக நடந்துகொண்டு பணம் சம்பாதிப்பது இயலாதென்றும் கூறியதால், வெறுப்புற்று அத்துடன் நிறுத்திக் கொண்டேன்.

என் கருத்துக்களை உலகத்திற்கு அறிவிப்பதற்கென, சொந்தமாகப் பத்திரிகை யொன்று இருப்பது நல்லதென்று எண்ணி, 1874 ஆம் ஆண்டு புரட்டாசி மாதம், 'விவேகவர்தனி' எனும் பெயரில் நான்கு பெரிய பக்கங்கள் கொண்ட ஒரு சிறிய மாதப் பத்திரிகையைத் தெலுங்கில் வெளியிடத் தொடங்கினேன். இந்த பத்திரிகையை வெளியிடத் தொடங்கியதில் என் முக்கியமான நோக்கங்கள், மொழி வளர்ச்சி, நாட்டு முன்னேற்றம் ஆகிய இரண்டுமாகும். மொழி வளர்ச்சிக்காகத் தெலுங்கில் மென்மையான, எளிய நடையில் அழகிய உரைநடை எழுதுவதை மேற்கொண்டேன். நாட்டு முன்

னேற்றத்திற்காக, மக்களிடையே யுள்ள தவறான பழக்க வழக்கங் களைக் கண்டித்தும், மறுமலர்ச்சிக்கான நல்ல முறைகளைச் சுட்டிக் காட்டியும், அவர்கள் அதிக அளவில் நியாயத்திற்குக் கட்டுப்பட்டு நடக்கும்படிச் செய்யவும் எண்ணங் கொண்டேன். மேலும், நாட்டை உயர்நிலைக்குக் கொணரக் கல்வி, பொது விவகாரங்கள், ஆசாரம், நீதி, மதம் ஆகிய பல துறைகளிலும் மறுமலர்ச்சி காணச் செய்வதே தவிர, அரசியல் விஷயத்தில் மட்டுமே வேலை செய்வது என் நோக்கமாக இருக்கவில்லை. மனித உடலில் கைகால்கள் முதலான எல்லா உறுப்புக்களும் ஒரே சீராக வளர்வதுதான் வளர்ச்சியே தவிர, தலை மட்டுமோ, கால் மட்டுமோ அதிக அளவில் வளர்வது வளர்ச்சி யல்ல—நோயாகும். அது போல் நாட்டு விஷயத்திலும், மக்களின் நீதி, மத, ஆசாரம் முதலிய பல துறைகளிலும் சமமான வளர்ச்சி காண்பதே முன்னேற்றமாகும்.

அந்தக் காலத்தில் அரசாங்க அலுவலர்களிடையே லஞ்சம் வாங்குவது மிகச் சாதாரணமாக இருந்து வந்தது. லஞ்சம் தவறென் றல்லாமல் உத்தியோக தர்மம் என்றே எல்லாரும் எண்ணி வந்தார்கள். அரசாங்க அலுவலர்களிடையே இந்த அக்கிரமத்தை நிறுத்த முயல்வது எங்கள் பத்திரிகையின் நோக்கங்களில் ஒன்று. கையூட்டுக் கொடுக்கும் மக்களிடத்திலும், வாங்கிக் கொள்ளும் அதிகாரிகளிடையேயும் நியாயத்தை மதிக்கும் போக்கு பரவவில்லை யெனில் லஞ்சம் ஒழியாது. எனவே, மக்களிடையே நியாயம் மற்றும் தன்மான உணர்ச்சிகளை வளர்ப்பது மற்றொரு நோக்கமாகும். வைப் பாட்டிகளைக் கொள்பவர்கள், அது தவறான பழக்கம் என்று உணரும் வரையில் நியாயத்தை எப்படிப் பாதுகாக்க முடியும்? எனவே குல ஒழுக்கத்தைச் சீர்திருத்துவது மற்றொரு நோக்கமாகும். துளசி ருத்ராட்ச மாலைகள் முதலான ஆசாரச் சின்னங்களைவிட நன்ன டத்தை, மதத்திற்கு மிகத்தேவையென்ற நம்பிக்கை மக்களிடையே நிலைபெறும் வரையில், மதத்தில் புகுந்துள்ள குறைகளை நீக்க முடியாது. ஆதலால் தூய்மையான மதச் சித்தாந்தங்களை அறி வுறுத்துவது மற்றொரு நோக்கமாகும். இத்தகைய நன்னோக்கங் களோடு எங்கள் விவேகவர்தனி வெளிவரத் தொடங்கியது.

கையூட்டு கூடாதென்றால் அரசாங்க அலுவலர்க்குக் கோபம்; வைப்பாட்டிகளைச் சேர்த்துக் கொள்வது தவறென்றால் காமக்களி யாட்டக்காரர்களுக்குக் கோபம்; பழைய ஆசாரங்களை மாற்றிக் கொள்ள வேண்டுமென்றால் பாமரமக்களுக்குக் கோபம்; நியாயத் திற்குப் புறம்பான வெளி வேஷங்கள் மதத்திற்கு எதிரானவை

என்ருல் மதத்தலைவர்களுக்குக் கோபம்—பத்திரிகையின் நோக்கங்களை நிறைவேற்ற வேண்டுமென்ருல் இத்தனைக் கோபங்களைப் பற்றியும் கவலைப்படாமலிருக்க வேண்டியிருந்தது.

பெண் கல்வியைப் பற்றிப் பத்திரிகை வாயிலாகச் சொற்போர்கள் நடந்துகொண்டிருக்கும் நேரத்தில், அதன் காற்று தவளேசுவரம் வரை அடித்து, அந்த வாக்குவாதம் ஒரு நல்விளைவைக் கொண்டு வந்தது. அங்கிருந்த பிரமுகர் பலருக்கு இளம்பெண்களுக்குக் கல்வி தேவை யென்ற எண்ணம் உண்டாயிற்று. பிரமுகர்கள் அனைவரும் சந்தா திரட்டி 1874 செப்டம்பரில், பெண்கள் பள்ளி யொன்றை நிறுவினர். அந்தப் பள்ளி பிறகு, பஞ்சாயத்து ஆட்சியாளரின் பாதுகாப்பைப் பெற்று, இன்றுவரைத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. ஆண்களிலேயே படித்தவர் அதிகம் இல்லாத அந்தக் காலத்தில் ஒரு சிறிய கிராமத்தினர் சந்தா திரட்டி, பெண்களுக்குப் பள்ளி யொன்று நிறுவினர் என்று சொல்வது விந்தையாகத் தோன்றலாம். நற்காரியத்தின் சிறப்பை உணர்ந்துவிட்டால் நடக்காதது ஒன்றுமில்லை.

பொறுப்பு வாய்ந்த பதவியிலிருந்தோரின் தீய நடத்தைகளை அம்பலப்படுத்தி வந்ததால் எனக்கு எதிரிகள் பெருகிக்கொண்டு வந்தனர். அந்தக் காலத்தில் தாசிலோலர்களின் எண்ணிக்கை அளவிறந்திருந்தது. நீதிபதி போன்ற மிக உயர்ந்த பதவி வகித்தவர்கள் அனைவரும் வேசிகளின் காலடியிலேயே விழுந்து கிடந்தனர். அந்த அதிகாரிகளின் வீடுகளுக்குத் தம் சொந்த வேலைக்காகச் செல்வோரில், வைப்பாட்டிகளை வைத்துக் கொண்டவர்க்கு அதிக மதிப்பும், வைத்துக் கொள்ளாதவர்க்குக் குறைந்த மதிப்பும் கொடுக்கப்பட்டது. நீதி மன்றங்களிலும், காதற் கணிகையருடன் வாழும் வழக்கறிஞரின் வாதங்களுக்கு மரியாதையும், நற்குலப் பெண்டிரை மணந்து வாழும் வழக்கறிஞரின் வாதங்களுக்கு அவமரியாதையும் வழங்கப்பட்டன! எனவே நீதிபதிகளின் மதிப்பைப் பெற்று, சொத்து சேர்க்க வேண்டுமென்று விரும்பிய வழக்கறிஞர் பலர் வேசியரை வைத்துக்கொள்ள வேண்டியவராயினர். எங்கள் ராஜமகேந்திரவரத்திலிருந்த தாசிகள் போதாமற் போகவே, ராமசந்திரபுரம் முதலான சிற்றூர்களிலிருந்தும் புதிய தாசிகள் வரவழைக்கப்பட்டனர்.

அந்தக் காலத்தில் ராஜமகேந்திரவரத்தில் பள்ளிக்கூடம் என்ருல் தாசிகள் படிப்பதற்குத்தான் என்ற எண்ணம் நிலவி வந்தது. நல்லவேத விற்பன்னர்களும், அதிகாரிகள் தம்மை மெச்சிக் கொள்வதற்கென இந்தத் தாசிகளின் பள்ளிகளுக்கு மாதந்தோறும் ஐந்து

அல்லது பத்து ரூபாய் சந்தா கொடுத்து வந்தனர். தாசியர் இசை மேளங்கள் நாயுடு மேளம், பந்த்துலு மேளம், சாஸ்திரி மேளம் என்று வழங்கப்பட்டன. யார் வீட்டிலாவது நற்காரியங்கள் நிகழ இருந்தால், இந்தப் பெரியவர்கள் தத்தம் இசை மேளங்களை அமர்த்திக் கொள்ளுமாறு தூது விடுத்து வந்தனர். இத்தகைய பெரியோர்க்குப் பிடிக்காத வகையில் இந்தத் தீய பழக்கத்தைப் பற்றிப் பலமுறை எழுத வேண்டி வந்தது. சில சமயங்களில் இந்தப் பிரமுகர்கள் அடக்க முடியாத ஆத்திரம் கொண்டு, பத்திரிகையை வாங்கக் கூடாதென்று சந்தாதார்களிடம் சொல்லியும், கண்டித்துப் பேசியும், என்னை ஏதோ செய்துவிடுவதாகவும், செய்விப்பதாகவும் அச்சுறுத்தியும் என் முனைப்பிலிருந்து என்னை விலக்கப் பார்த்தனர். ஆனால் அவர்களுடைய ஆசைகள் நிறைவேறவில்லை. தாசிகளின் பள்ளிகள் அனைத்தும் சொற்ப காலத்திலேயே மூடப்பட்டன. பிற ஊர்களிலிருந்து வந்த தாசிகள் மீண்டும் தம் ஊர்களுக்கே திரும்ப வேண்டியவராயினர்.

இவ்வாறு எளியேனாகிய நான் வழிகாட்ட முற்பட்டாலும், தர்மமே முடிவில் வெற்றி பெற்றது. இருப்பினும், தாசிலோலர்களுக்கு என் மேல் உண்டான கோபம் கொஞ்ச நஞ்சமல்ல. அப்போது எனக்கு, யாருடைய கோபத்தையும் பொருட்படுத்தத் தேவையில்லாத, சுதந்திர நிலையில் இருக்க வேண்டுமென்ற எண்ணம் உறுதி பெற்றது. ஆசிரியர் தொழிலை விட்டுவிட்டு, பத்திரிகையை நடத்திக் கொண்டு, நூலாசிரியராக வரவேண்டுமென்ற ஆசை என் மனத்தில் அப்பொழுது தலைதூக்கியது.

பத்திரிகை நடத்துவதன் மூலம் சுதந்திரமாக வாழ்வதற்குத் தேவையான பணம் கிடைக்குமென்ற நம்பிக்கை எனக்கு எப்போதும் இல்லை. என் நூல்களைப் பத்திரிகையாளர்கள் பாராட்டி வந்ததாலும், நான் எழுதிய நூல்கள் பல பள்ளிகளில் பாடபுத்தகங்களாக வைக்கப்பட்டதாலும், புத்தகங்கள் எழுதுவதன் மூலம் சுதந்திரமாக வாழ முடியுமென்ற துணிவு பிறந்தது. என் இலக்கண நூலின் வாயிலாக இரண்டு மூன்று மாதங்களில் ரூபாய் இருநூறு கிடைத்தது. என்னுடைய ‘நீதிசந்திரிக விக்ரக தந்திரங்கள்’ என்ற நூலின் மூலமாக ஆயிரம் ரூபாய் கிடைத்தது.

பத்திரிகை வெளியிடுவதற்கும், நூல்களை அச்சிடுவதற்குமென அச்சகம் ஒன்று நிறுவ வேண்டுமென்னும் விருப்பம் எனக்கு அதிகமாக இருந்தது. தவளேசுவரத்தில் இருந்தபோது, ஆறு பேர் தலைக்கு ரூபாய் முந்நூற்றைம்பது வீதம் பங்குகள் பிரித்து, ராஜ

மகேந்திரவரத்தில் அச்சகம் ஒன்றை அமைப்பது என்று திட்ட மிட்டோம். பங்குதாரர்கள் முடிவான பின்னர், கோடை விடுமுறை யில், நான் ஒருமுறை சென்னைப்பட்டணம் சென்றேன். பகுஜனபல்லி சீதாராமாசார்யுலு முதலான பண்டிதர்கள் என்னிடம் மிகவும் ஆதரவு காட்டினர். பச்சையப்பன் கல்லூரியில் தெலுங்கு பண்டிதராக இருந்த கார்மன்சி சுப்பராயலு நாயுடு, சென்னையி லிருந்து எனக்குத் தேவையானவற்றையெல்லாம் வாங்கி அனுப்பு வதாக வாக்களித்தார். நான் தவளேசுவரத்தில் ஆசிரியர் பணியை விட்டுவிட்டு, 1876ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் சொந்த ஊரான ராஜமகேந்திரவரத்தில் குடியேறினேன்.

அச்செழுத்துக்கள் வந்து சேர்ந்ததும், ஏப்ரல் மாத இடையிலிருந்து வேலையைத் தொடங்கி, எங்கள் வீட்டிலேயே நிறுவப்பட்ட அச்ச கத்தில், 'விவேகவர்தனி'யை அச்சிடத் தொடங்கினோம். நாங்கள் எண்ணியதுபோல அச்சகத்தில் லாபம் வரவில்லை. வந்த வருவா யையும், விவேகவர்தனிக்கு வந்த சந்தாத் தொகையையும் சேர்த் தாலும் தொழிலாளர்தம் சம்பளத்திற்கே பற்றியும் பற்றாமலும் இருந்தது. நரசாபுரத்தில், என் நண்பரான, மீர் கஜாயுத்தல்லீகான் சாயபு, 'வித்யான் மனோஹாரிணி' என்ற பெயரில் தெலுங்கு மாதப் பத்திரிகை ஒன்றை வெளியிடத் தொடங்கினர். விவேகவர்தனி ஓராண்டுக் காலம் நடந்த பின்னர், 'வித்யான் மனோஹாரிணி'யை அத்துடன் இணைத்துவிட்டு, விவேகவர்தனியில் ஆங்கிலப் பகுதியும் சேர்த்து, ஆங்கிலப் பகுதியை அவரும், தெலுங்குப் பகுதியை நானும் எழுதுவதென்று ஏற்பாடு செய்துகொண்டோம்.

1876 ஜூலை மாதத்திலிருந்து விவேகவர்தனியை மாதமிருமுறை இதழாக மாற்றி, 'ஹாஸ்ய ஸஞ்ஜீவனி' எனும் பெயரில் ஒரு நகைச் சுவை பொழியும் மாத இதழை விவேகவர்தனியின் இணைப்பாக வெளியிடத் தொடங்கினோம். பண்டைய மரபில் ஊறித் திளைத்தவர் களின் தலைவரெனக் கருதப்பட்ட கொக்கொண்ட வேங்கடரத்னம், விவேகவர்தனியைப் பரிகசிக்கும் முகத்தான் 'ஹாஸ்யவர்தனி' எனும் பத்திரிகையைத் தம்முடைய 'ஆந்திரபாஷா ஸஞ்ஜீவனி'க்கு அநுபந்தமாக, 1875 இறுதியில் வெளியிட்டார். 'ஹாஸ்ய வர்தனி'யை எதிர்த்துப் போராடுவதற்கென எழுந்த பத்திரிகையே 'ஹாஸ்ய ஸஞ்ஜீவனி.'

என்னுடைய 'பிராம்ம விவாகம்' இந்தப் பத்திரிகையில்தான் முதலில் வெளியாகத் தொடங்கியது. தெலுங்கு மொழியில் அத்தகைய படைப்பு வெளியிடப்பட்டது அதுவே முதன் முறை

யாதலால், அந்த நாட்களில் எங்குப் பார்த்தாலும், மக்கள் கூட்டம் கூடி, ஹாஸ்ய சஞ்ஜீவனியை, முக்கியமாக அதில் வெளிவந்த 'பிராம்ம விவாக'த்தைப் படித்து மகிழ்ந்து வந்தனர். நான் ஒரு முறை பந்தருபுரத்திற்குப் போனபொழுது, ஒரு பிராம்மணச் சிறுமி 'பிராம்ம விவாக'த்தை முதலிலிருந்து இறுதிவரையில் ஒப்பித்து என்னை வியப்பில் ஆழ்த்திவிட்டாள். தன் இரண்டாவது ஆண்டில் 'ஹாஸ்யவர்தனி' மறைந்துவிட்டதால், எங்கள் 'ஹாஸ்ய ஸஞ்ஜீவனி' தனி இதழாக வெளி வராமல், விவேகவர்தனியில் இறுதிப் பகுதியாக வெளிவந்து, தீய பழக்க வழக்கங்களையும், அநியாயத்தையும் ஒழித்துக் கட்டுவதற்குப் பெரிதும் உதவி புரிந்தது.

1876 ஆம் ஆண்டு நவம்பர் முதல் தேதியன்று, ராஜமகேந்திரவர அரசினர் கலைக் கல்லூரியில், இருபத்தைந்து ரூபாய் மாதச் சம்பளத்தில், தெலுங்குத் துணையாசிரியர் பதவியை ஏற்கவேண்டியவன் ஆனேன். முதலில் எனக்கு அந்த வேலையைத் தருவதாக மெட்காஃப் துரை சொல்லி அனுப்பியபோது மறுத்துவிட்டேன். என் உறவினர்களும், நண்பர்களும் என்னைக் கண்டித்து, அந்த வேலையை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினர். மறுததுவிட்ட நானே மீண்டும் சென்று அந்த வேலையை எனக்குத் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்.

ஒரே கல்லூரியில் இருந்த காரணத்தால் பசவராஜு கவர்ராஜு, புர்ரா ராமலிங்க சாஸ்திரி, ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம் ஆகியோர் எனக்கு நெருங்கிய நண்பர்களாயினர். நாங்கள் பத்திரிகையில் எழுதும் விஷயங்களைப் பற்றியும், ஒழிக்கப்படவேண்டிய தீய பழக்க வழக்கங்களைக் குறித்தும் கருத்துக்களைப் பரிமாறிக்கொண்டு வந்தோம். இந்த நால்வரில் நான் தலைவன். மற்ற மூவரும் மாணவர்களாகவும், நான் ஆசிரியனாகவும் இருந்து வந்தோம். பத்திரிகையில் நாங்கள் எழுதியவற்றால் மனம் நொந்தவர் அனைவரும் எங்களை நான்கு துஷ்டர்கள் என்று அழைக்கத் தொடங்கினர்.

எங்கள் விவேகவர்தனி ஆற்றிய பணிகளில் முக்கியமானவை இரண்டு மூன்றை மட்டும் இங்குக் கூற விரும்புகிறேன்.

திருமணம் போன்ற நற்காரியங்களுக்கு எழுந்தருளிய பெரிய மனிதர் அனைவரிடமிருந்தும் தாசியர் இசை மேளத்திற்கென ஒரு ரூபாய்க்குக் குறையாமல் காணிக்கை வசூலிக்கும் பழக்கம் அந்தக் காலத்தில் எங்கள் பக்கத்தில் மிகச் சாதாரணமாக இருந்து வந்தது. தாம்பூலம் பெற்றுக் கொள்பவர் தாசியர்க்குக் காணிக்கை போடாமல்

இருப்பது மிகமிக அவமானத்திற்கு உரியதாக இருந்தது. வசதி குறைந்தவர்கள் சிலர் ஏதோ சாக்குகள் சொல்லி நண்பர், உறவினர் வீட்டு நற்காரியங்களுக்குப் போகாமல் தப்பித்துக் கொண்டாலும், அதிகார மமதை கொண்டவர்களின் வீடுகளுக்குத் தவருமல் சென்று, வேசையருக்குக் கட்டணம் சமர்ப்பிக்க வேண்டியவர்களா யிருந்தனர். அழைத்தபோது அதிகாரிகள் வீடுகளுக்குப் போகாத பாமரர்கள், ஊரில் குடித்தனம் செய்வதே மிகக் கடினமாக இருந்தது. எங்கள் பட்டணத்திலேயே ஒரு மாஜிஸ்டிரேட் இருந்தார். அவர் ஏதேனும் ஒரு சாக்கை முன்னிட்டு மாதத்தில் இரண்டு முறையாவது தாசியர் இசை மேளம் ஏற்பாடு செய்து, ஊரிலிருந்தவர் அனைவரையும் அழைப்பது வழக்கம். அந்த விழாவிற்கு யாராவது போகாமலிருந்தார்களானுல், மறுநாள் வீட்டின் முன்னுல் சாணி இருந்ததென்றே, சாக்கடை நீர் தெருவில் வந்ததென்றே அந்தத் துர்ப்பாக்கியசாலிகள் கோர்ட்டுக் கச்சேரிக்கு இழுக்கப்பட்டு, சில நாட்கள் வேலை கெட்டு அலைந்த பின்னர், ஒரு ரூபாய்க்குப் பதிலாக நான்கு ரூபாய்கள் அபராதம் கட்டவேண்டி நேரிடும். இத்தகைய அதிகாரிகளில் சிலர் தம் இல்லங்களில் வரும் வசூலிலில் பாதியை மட்டும் தாசிகளுக்கென ஒதுக்கிவிட ஏற்பாடு செய்து கொண்டு, இந்த வகையில் மாதத்திற்கு இருநூறே முந்நூறே சம்பாதித்துக் கொண்டிருந்தனர். இந்தத் தீய வழக்கத்தை ஒழிப்பதற்கெனக் கூட்டங்கள் நடத்திப் பிரசாரம் செய்து, எங்கள் விவேகவர்தனி வெகுவாய்ப் பாடுபட்டது.

அத்தகைய கூட்டங்களில் இறுதிக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட முடிவு, 1878 ஜனவரி இதழில் வெளியிடப்பட்டது : திருமணங்களில் தாம்பூலம் பெற்றுக்கொள்ள வருவோர் வசூலுக்கு வழங்கும் தீய வழக்கத்தை நிறுத்துவது முக்கியமான கடமையாகும். இந்தக் கூட்டத்திற்கு வந்த பெரிய மனிதர் அனைவரும் தாங்கள் இனிமேல் வசூலுக்கு வழங்குவதில்லை யென்றும், அப்படி யாராவது வழங்குவாரேல், அவர்களைத் தம் இல்லங்களில் தாம்பூலம் பெற்றுக் கொள்ள அழைப்ப தில்லையென்றும், அத்தகையோர் வீடுகளில் தாம்பூலம் வாங்கப் போகக் கூடாதென்றும் நிபந்தனைகள் எழுதி, அதன் கீழ்த் தம் கையெழுத்தைப் போட்டு இந்தப் பத்திரிகை ஆசிரியரையே இந்தக் குழுவிற்குச் செயலாளராக நியமித்தனர்.

சில நாட்களிலேயே எங்கள் ஊரில் ஒரு குடும்பஸ்தர் வீட்டில் பூணூல் விழா நடைபெற்றது. எங்கள் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட ஒருவர் அந்த விழாவிற்குச் சென்று, தாசியர் மேள

வசூலுக்கு 'மொய்' எழுதினர். எங்கள் கட்டுப்பாட்டை மீறியே அவரிடம், என் அறிக்கையின் காரணமாக, நல்விளைவு காணப் பட்டது. அவர் அச்சம் கொண்டு, தாம் உடன்படிக்கையை உள்ளூர மீறவில்லை யென்றும், நிபந்தனைகள் எப்போதிலிருந்து நடைமுறைக்கு வருமென்ற கால நிர்ணயம் இல்லாமற் போனதால், அப்படி நடைமுறைக்கு வரும் நாளிலிருந்து வசூலுக்கு வழங்குவதை நிறுத்திக் கொள்ளலாமெனத் தாம் எண்ணிவிட்டதாகவும் சொல்லி, மன்னிப்பைக் கோரினர். இவ்வாறு நடக்கும் என்ற அச்சத்தினல் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட அனைவரும் அதன் பிறகு வெகுமதிகள் வழங்கவில்லை. பலரும் வசூலுக்கு வழங்குவதை நிறுத்தி லாபத்தைக் குறைத்து வந்ததால், நாளடைவில் எங்களில் சேராதவர்களும் கூடத் தாசியர்க்குச் சம்மானம் அளிப்பதை நிறுத்திக் கொண்டனர்.

வாலேஸ் துரை மாவட்ட நீதிபதியாகப் பணியாற்றி வந்தார். தொடக்க காலத்தில் ஓரிரு துணை நீதிபதியர் தம்மை அணுகி இருந்த வர்க்கு வழக்கறிஞராகச் சந்நது வழங்கச் சொல்லி சிபாரிசு செய் தனர். ஆனல் உரிய தேர்வில் வெற்றி பெறவில்லை என்ற காரணத் தால் எங்கள் மாவட்ட நீதிபதி சந்நது வழங்க மறுத்துவிட்டார். இதற்கிடையில் ஒரு புதிய சிராஸ்தாதார் வந்து சேர்ந்தார். இவர் காலத்தில் வழக்கறிஞர் சந்நதுகள் எல்லோருக்கும் கொள்ளையாக வழங்கப்பட்டன. சில மாதங்களில் ஏறத்தாழ எண்பது பேருக்குச் சந்நதுகள் கிடைத்தன. இவர்களில், தேர்வு எழுதியவர்கள் ஒருவர் கூட இல்லை. பலபேருக்கு ஆங்கில வாசனை கூடத் தெரியாது. இந்த அக்கிரமத்தைப் பொறுக்க முடியாமல் எங்கள் விவேகவர்தனி, தேர்வில் வெற்றி பெருதவர்க்குச் சந்நது வழங்குவது அநியாய மென்று கூக்குரல் எழுப்பத் தொடங்கியது. இந்த முறையீட்டிற்குச் செவிசாய்த்து, 1878 ஆம் ஆண்டு இறுதியில், உயர் நீதிமன்றத்தினர் இந்தச் சந்நதுகள் ஏன் வழங்கப்பட்டன என்று தெரிவிக்குமாறு எங்கள் மாவட்ட நீதிபதியைக் கேட்டனர்.

வழக்கறிஞர் சந்நது விஷயமாகச் சில முக்கிய அம்சங்களைத் தெரிவிப்பதற்கென, 1879 ஜனவரி 23 ஆம் நாள் பிற்பகல் 3 மணிக்குத் தம் நீதிமன்றத்திற்கு வரவேண்டுமென்று எங்கள் மாவட்ட நீதிபதி எனக்கு உத்தரவு அனுப்பினர். நான் சொல்ல வேண்டியது என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. எனக்கு உத்தரவு வந்த செய்தி ஊர் முழுவதும் பரவவே, என்னைப் பார்ப்பதற்கு இரண்டு நண்பர்கள் எங்கள் வீட்டிற்கு வந்தனர். நாங்கள் மூவரும் சேர்ந்து வழக்கறிஞர்

சிர்ராஹூரி யக்ஞன்ன சாஸ்திரி வீட்டுக்குப் போனோம். உத்தரவுக் கடிதத்தைக் கண்டு அவர் வியப்படைந்தாரே தவிர தக்க ஆலோசனை சொல்ல அவரால் இயலவில்லை. நீதிபதிகளுக் கெல்லாம் மேலான நீதிபதியான இறைவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு நான் அன்று இரவு கவலை யில்லாமல் தூங்கி, மறுநாள் கல்லூரிக்குச் சென்று வேலைபார்த்துவிட்டு, இரண்டு மணிக்குமேல் ஓய்வு பெற்றுக் கொண்டு, நேராக நீதிமன்றத்துக்கு நடந்து போனேன்.

சரியாக மூன்று மணிக்கு துரை மன்றத்துக்கு வந்தார். அவர் என்னை ஒரு நாற்காலியில் உட்காரச் சொல்லி, விவேகவர்தனி இதழை எடுத்து என் கையில் கொடுத்து, வழக்கறிஞர் சந்நது பற்றிய கட்டுரையைச் சுட்டிக்காட்டி, 'இதை நீங்கள்தான் எழுதினீர்களா ?' என்று கேட்டார். உயர்நீதிமன்றத்தின் முத்திரை போடப்பட்டிருந்த அந்த இதழைப் பார்த்த உடனே எனக்கு எல்லாம் புரிய வந்தது.

உடனே, நடக்க வேண்டியதைப் பற்றி யோசித்து, 'உங்கள் கேள்விக்குப் பதில் சொல்வதற்கு முன்னர், இந்த உத்தரவு எந்த அரசியல் சட்டத்தின்படி எனக்கு அனுப்பப் பட்டதென்று தெரிவிக்க வேண்டுகிறேன்' என்று பதில் சொன்னேன்.

நீதிபதி, ஒன்றும் தோன்றுதவர் போல் சற்று யோசித்துவிட்டு, 'இந்தப் பத்திரிகையை நீங்கள்தான் வெளியிடுகிறீர்களா?' என்று இன்னொரு கேள்வியைக் கேட்டார்.

'உங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்கு முன்னர், நான் பதில் சொல்வதற்குக் கடமைப்பட்டவனு இல்லையா என அறிய விரும்புகிறேன்' என்று நான் மறுபடியும் கேட்டேன்.

'நீங்கள் கடமைப்பட் டிருக்கிறீர்கள் என்று சொல்ல இயலாது. உங்களுக்கு விருப்பமிருந்தால் சொல்லலாம்' என்று நீதிபதி கூறினுர்.

'நான் கடமைப்பட வில்லையென்றுல், பதில் சொல்வதற்கு எனக்கு விருப்பமில்லை' என்று நான் தெரிவித்தேன்.

இந்தக் கேள்வி பதில்களை யெல்லாம் எழுதிக் கொண்டு, 'இனி உங்களை இங்கே இருக்க வைப்பது எனக்கு விருப்ப மில்லை' என்று துரை சொல்லிவிட்டார்.

'மகிழ்ச்சி' என்று சொல்லிவிட்டு நான் வெளியேறினேன். என் துணிவைப் பார்த்து மகிழ்ச்சி யடைந்த எனக்கு எதிரியாக இருந்த ஒரு வழக்கறிஞர், என்னுடன் வெளியே வந்து, என்னைக் கட்டித் தழுவி நட்புணர்ச்சியைக் காட்டினுர். நான் வீட்டுக்குத் திரும்பிச் செல்லும்போது, நான் அன்று சிறைச்சாலைக்கு அனுப்பப்படுவேன்

என்று நம்பி, வேடிக்கை பார்ப்பதற்கென்று கூட்டம் கூட்டமாக நீதிமன்றத்தை நோக்கிச் சென்றுகொண் டிருந்த மூடஜனங்கள் என்னை வாயடைத்துப்போய்ப் பார்க்கலாயினர்.

உயர் நீதிமன்றத்தாரும் அரசினரும், வழங்கப்பட்ட சந்நதுகள் யாவற்றையும் ரத்துசெய்ய வேண்டுமென்று எங்கள் மாவட்ட நீதி பதிக்கு உத்தரவிட்டனர்.

அந்தக் காலத்தில் லஞ்சம் வாங்காதவன் பயனற்றவன் என்றும் அறிவில்லாதவன் என்றும் கருதப்பட்டான். ஒளிவு மறைவில்லாமல், பணியாள் முதல் மந்திரிவரை அரசாங்க அலுவலர்கள் அனைவரும் கையூட்டு வாங்கி ஏப்பம் விட்டுக்கொண் டிருந்தனர். 1878 தொடக் கத்தில் போலூரி ஸ்ரீராமுலு என்பவர் சிறிது காலம் ராஜமகேந்திரத் தில் நீதிபதியாக (டிஸ்ட்ரிக்ட் முன்சீஃப்) வந்தார். அவர்தம் தங்கையரை, எங்கள் மாவட்ட நீதிமன்றத்தில் அரசாங்க வழக் கறிஞராக இருந்த சித்ரபு காமராஜுவின் மகனுக்குத் திருமணம் செய்து கொடுத்ததால், அவர்களிருவரும் நெருங்கிய உறவின ராகவும், உயிர்த் தோழராகவும் ஆகியிருந்தனர். புதிதாக நீதிபதி பதவிக்கு வந்த அந்தப் பெரியவர் லஞ்சஆசை பிடித்தவராக இருந்த தால், இப்பொழுது வாய்ப்பு கிட்டியதும், வாதி பிரதிவாதி, ஏழை பணக்காரன், நியாயம் அநியாயம் என்று பாராமல் அனைத்தையும் விழுங்கும் அக்கினி பகவானைப் போல் பணத்தை விழுங்கிக் கொண்டிருக்க, பெரும் திறமைசாலியான சித்ரபு காமராஜு அவருக்கு அருந் துணையானார். இந்த நீதி வியாபாரத்திற்கு ஒரு புதிய கலைச் சொல்லாக்கம் செய்ய வேண்டிவந்தது. இந்த கலைச்சொல்லாக் கத்தை ஒட்டி வழக்கறிஞர்கள், தக்க காரணங்களைச் சொல்லி வாதிக்க வேண்டிய சிரமம் இல்லாமல், வேலை எளிதாகிவிட்டது. வாதியின் சார்பில் வரும் வழக்கறிஞர், சட்டத் தொகுப்பு 100ஆவது பிரிவின்படி நியாயம் வழங்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, பிரதிவாதியின் சார்பில் வரும் வழக்கறிஞர், அந்தப் பிரிவு பயன் படாது. சட்டத் தொகுப்பு 150 ஆவது பிரிவை உத்தேசித்து நியாயம் வழங்க வேண்டுமென்று முறையிட்டுக் கொள்வார். பார்க்கப் போனால் ஒருவருக்குப்பின் ஒருவராக 160, 170, 180, 190, 200 என்று வழக்கறிஞர்கள் தம் சட்டத் தொகுப்பின் பிரிவுகளைச் சொல்லிக்கொண்டு போக, இறுதியில் ஒரு பிரிவில் சென்று நின்று விடுவர். மிகப் பெரிய பிரிவைச் சொல்லி அரும்பாடுபட்ட வழக்கறிஞர் அன்று இரவு, நியாயம் தீர்ப்பவரின் வீட்டுக்குச் சென்று அந்தப் பிரிவின் பொருளை விளக்கொளியில், தெளிவாகவும் சந்தேகத்துக்

கிடமில்லாமலும் விளக்கிக் காட்டினுல் மறுநாள் அந்தக் கட்சிக்குச் சார்பாக முன்சீஃப் அவர்கள் நீதிமன்றத்தில் நீதி வழங்குவார். நூருவது பிரிவு என்ருல் 100 ரூபாய் என்றும், நூற்றைம்பதாம் பிரிவு என்ருல் 150 ரூபாய் என்றும் அந்தப் புதிய சட்டத்தொகுப்பின் கலைச் சொற்களுக்குப் பொருள் ஆகும்.

எங்கள் முன்சீஃப் அவர்கள் பேராசைகொண்டு வரிசைமுறையை மாற்றி, பெரிய தொகைகளுக்கான வழக்குகளை முதலில் தீர்த்து நீதி வழங்கத் தொடங்கினுர். அத்துடன் நில்லாமல் ஒரே சமயத்தில் இரண்டு மூன்று வழக்குகளையும் விசாரிக்க முற்பட்டு, தாம் ஒரு வழக்கில் சாட்சிகளை விசாரிக்க, மற்ருெரு வழக்கில் சாட்சிகளை விசாரிக்கும் பொறுப்பைத் தம் குமாஸ்தாக்களிடம் ஒப்படைக்கலானுர். ஒரே சமயத்தில் இத்தனை வழக்குகளின் முறையீட்டு வாசகங்களையும், சாட்சிகளின் வாக்குமூலங்களையும் படித்துத் தீர்ப்புக்களை ஒருவர் எழுதுவது கடினமாகப் போனதால், தாம் சொந்தமாகச் சில தீர்ப்புக்களை எழுத, வேறு சில வழக்குகளுக்குத் தம் உறவினரான சித்ரபு காமராஜுவைக் கொண்டு தீர்ப்புக்களின் முதற்படிகளை எழுதச் சொல்லி, தாம் அவற்றைப் படியெடுத்துக் கொண்டு கேட்பாரில்லாமல் இஷ்டப்படி நடந்துகொண் டிருந்தார்.

இந்த அதிகாரியின் தீய போக்கிற்கு ஒரு முடிவு காண வேண்டுமென்று எங்கள் விவேகவர்தனி சான்றுகளைத் திரட்டும் முயற்சியில் ஈடுபடலாயிற்று. பாதிக்கப்பட்ட வழக்காளரையும், அவர்கள் தரப்பில் பணியாற்றிய வழக்கறிஞரையும் கேட்டுக் கொண்டது. ஆனுல் அவர்களில் ஒருவரும் தாம் லஞ்சம் கொடுத்ததாகவோ, முன்சீஃப் பெற்றுக் கொண்டதாகவோ வெளிப்படையாகச் சாட்சி சொல்லத் தயாராக இல்லை.

நான் ஒருநாள் நீதிமன்றத்துக்குச் சென்று ஒரு மூலையில் தலை மறைவாக உட்கார்ந்திருந்து, அந்தப் பெரியவரின் போக்கைச் சாவதானமாகக் கவனித்து வந்தேன். நான் வந்ததைப் பற்றிக் கேள்விப்பட்டதாலும், விவேகவர்தனியில் தம்மைப் பற்றி எழுதப்பட்டதைப் படித்ததாலும், முதலில் சற்று நடுக்கம் கொண்டாலும், லஞ்ச விஷயத்தில் தேர்ச்சியும், துணிவும் பெற்றவராகையால் எப்போதும் போலவே நடந்து கொண்டிருந்தார். மாவட்ட நீதிமன்றத்தில் அப்போதைய அரசாங்க அலுவலர்களில் ஒருவரான பயனேபூடி வெங்கட ஜோகய்யா மட்டுமே எனக்கு நண்பராகி ஓரளவு உதவி வரலானுர். அவரால்தான் எனக்கு அவ்வப்போது நீதிமன்றத்தில் நடக்கும் சில முறைகேடுகள் தெரியவந்தன.

அந்தக் காலத்தில் கடவுள் எங்களுக்கு ஓர் ஆதாரத்தைக் காட்டித் தந்தார். சித்ரபு காமராஜு, முன்சீஃபுக்காக எழுதிய முதற்படித் தீர்ப்புக் காகிதங்களைப் படியெடுத்த பின்னர்க் கிழித்து, அந்தத் துண்டுகளைத் தம் வீட்டிற்கு எதிரிலிருந்த குப்பை மேட்டில் எறிந்து வரலானார். அவர்தம் எதிர்வீட்டிலிருந்த ஒரு வழக்கறிஞர் என்னிடம் வந்து, அவர் ஏதோ காகிதத் துண்டுகளை எறிந்து வருவதாகச் சொன்னார். அவை பயன்படலாமென்று எண்ணி, தெருக் கூட்டுவோனுக்கு ஏதாவது கொடுத்து, அந்தத் துண்டுக் காகிதங்களைக் கொண்டுவர ஏற்பாடு செய்யுமாறு நான் அந்த வழக்கறிஞரிடம் சொன்னேன். அவர் இரண்டு கூடைகளில் துண்டுக் காகிதங்களை எங்கள் வீட்டில் கொண்டுவந்து சேர்த்தார். அந்தத் துண்டுகளை ஒன்றோடு ஒன்று முயன்று சேர்த்து ஒட்டலானேன். அவற்றில் சில பயனற்றுப் போயின. துண்டுக் காகிதங்களைக் கொண்டு வந்த வழக்கறிஞர் ஒட்டிய வற்றில் இரண்டு காகிதங்கள் சேர்த்து ஒரு தீர்ப்பு முழுமையாக உருவாயிற்று. எடுத்துக்கொண்ட முயற்சி வீண்போகவில்லையென்று எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று.

அந்த வழக்கில் தோற்றுப்போன ஒரு முகம்மதியரை வரவழைத்துப் பேசியபோது, காமராஜு லஞ்சம் கொடுக்கச் சொல்லிக் கேட்ட நேரத்தில், தாம் ஏழைமையினால் கொடுக்க முடியாமற் போனதாகவும், பிரதிவாதியிடம் லஞ்சம் வாங்கிக்கொண்டு முன்சீஃப், அவன் பக்கம் தீர்ப்புக் கூறியதாகவும் சொன்னார். அந்த விஷயங்களைத் தெரிவித்து, அந்த முகம்மதியரின் சம்மதத்துடன் மாவட்ட நீதிபதிக்கு ஒரு விண்ணப்பம் எழுதி, முதற்படித் தீர்ப்பின் ஒரு பாதியை அத்துடன் இணைத்து, மாவட்ட நீதி மன்றத்தில் கொடுக்குமாறு செய்தோம். இந்த விண்ணப்ப விவகாரம் தெரிந்த உடன், மிகத் தந்திரக்காரரான காமராஜு அந்த முகம்மதியரை இரகசியமாக வரவழைத்து, வழக்குத் தொகைக்கு இரண்டு பங்காகப் பணம் கொடுத்து, அவரிடமிருந்த தீர்ப்புத் துண்டுக் காகிதங்களை அபகரித்துக் கொண்டார்.

அந்த விண்ணப்பத்தில் குறிப்பிடப்பட்ட சாட்சிகளில் மிர்த்தி பாட்டி ராமய்யா ஒருவர் ஆவார். அந்த முகம்மதியர், சித்ரபு காமராஜுவிடம் பணம் பெற்றுக்கொண்டு மனம் மாறிப்போய், துண்டுக் காகிதங்களைக் கொடுத்து விட்டாரென்றும், காமராஜு முன்சீஃபுக்கு லஞ்சங்களை ஒழுங்கு படுத்தி வருகிறாரென்றும், தீர்ப்புக்கள் எழுதித் தருகிறாரென்றும் நிரூபிப்பதற்குத் தக்க ஆதாரங்கள் இருப்பதாகவும்,

அந்த முகம்மதியரின் வழக்குத் தீர்ப்பின் மறுபாதி தம்மிடம் இருப்ப தாகவும் மிர்த்திபாட்டி ராமய்யாவின் மூலம் மாவட்ட நீதிமன்றத்தில் விண்ணப்பம் கொடுத்தோம்.

அதற்குள் காமராஜு முகம்மதியர் மூலமாக, தம் விண்ணப்பத்தில் இருக்கும் விஷயங்கள் எதுவும் தமக்குத் தெரியாதென்றும், காமராஜு நாகராஜு என்ற வழக்கறிஞர் மோசம் செய்து தம்மிடமிருந்து அதில் கையெழுத்து வாங்கிக் கொண்டாரென்றும், தம் விண்ணப்பத்தைக் கவனிக்கத் தேவையில்லையென்றும் ஒரு புதிய விண்ணப்பத்தைக் கொடுக்கச் செய்தார். மிர்த்திபாட்டி ராமய்யா கொடுத்த விண்ணப் பத்தின் மேல், எங்கள் மாவட்ட நீதிபதி முகம்மதியர் வழக்குத் தீர்ப்பின் மறுபாதியை வாங்கிக்கொண்டு, மற்றைய ஆதாரங்களைச் சமர்ப்பிக்க வேண்டுமென்று உத்தரவிட்டார்.

இதற்கிடையில் மேலும் மூன்று நான்கு தீர்ப்பு முதற்படிகளின் துண்டுகளையும் நாங்கள் ஒட்டி முடித்தோம். தம் கைப்பட எழுதிய தீர்ப்புத் துண்டுகள் என்னிடம் இருப்பதை உளவறிந்து, அவற்றைக் கொடுத்து விட்டால் ரூபாய் 5,000 கொடுப்பதாகச் சித்ரபு காமராஜு எனக்குத் தூது அனுப்பினர். நான் கண்டனம் செய்யும் தோரணை யில் மறுத்து விட்டேன்.

இதற்குள் ஐந்து தீர்ப்புக்களை எங்களால் முழுமையாக ஒட்டி உருவாக்க முடிந்தது. ஒரு தீர்ப்பை மட்டும் என்னிடம் வைத்துக் கொண்டு, ஏனைய நான்கையும் ஒரு காகித உறையில் போட்டு ஒட்டி, அரக்கு முத்திரை வைத்து, மிர்த்திபாட்டி ராமய்யாவிடம் கொடுத்தேன். அவர் அந்த உறையை மாவட்ட நீதி மன்றத்துக்கு எடுத்துச் சென்று, விசாரணை நாள்வரையில் நீதிபதியைத் தம் பெட்டியிலேயே வைத்திருக்குமாறு விண்ணப்பம் எழுதிக் கொடுத்து, துரையிடம் தந்துவிட்டார்.

இன்னமும் ஒரு கூடைத் துண்டுக் காகிதங்கள் என்னிடம் மீத மிருந்தன. அவற்றில் எவையேனும் சரியாகப் பொருந்துகின்றனவா என்று பார்ப்பதற்காக அந்தக் கூடையை நான் காமராஜு நாகராஜு விடம் கொடுத்து வைத்தேன். மறுநாள் காலையில், முன்சீஃபும் காமராஜுவும் ஒரு துணை வழக்கறிஞரை, நாகராஜுவின் வீட்டுக்கு ஏதோ வேலையாக அனுப்பியதாக எனக்குத் தெரிய வந்தது. நான் உடனே நாகராஜுவின் வீட்டிற்குச் சென்று, அந்தக் காகிதக் கூடையைக் கொண்டு வந்து, என் பெட்டியில் வைத்துப் பூட்டி விட்டேன். அந்தக் காகிதத் துண்டுகளைக் கொடுத்து விட்டால் தமக்கு ரூபாய் ஐந்நூறு கொடுப்பதாகத் தூதனுப்பியதாகவும், தாம் அதை நிராகரித்ததாகவும் நாகராஜு பிறகு சொன்னர்.

இரண்டு மூன்று நாட்களில், எனக்கு முதலில் காகிதத் துண்டுகளைக் கொண்டுவந்து கொடுத்த வழக்கறிஞர் வந்து, தமக்கு அன்று வேலை யில்லையென்றும், தீர்ப்புக்களை ஒட்டித் தருவதாகவும் கூறினர். நான் அவர் பேச்சை நம்பி காகிதக் கூடையைக் கொடுத்துவிட்டேன். காமராஜு ஏதோ மாய்மாலம் செய்து காகிதக்கூடையை அபகரித்துக் கொண்டார் என்று அன்று மாலையே பட்டணத்தில் வதந்தி பரவியது. காமராஜு பணம் கொடுத்தும், பெண்களை அனுப்பியும், பல்வேறு வழிகளைக் கையாண்டு, காரியம் சாதித்துக் கொள்ளும் திறமை வாய்ந் தவர். நான் அந்த வழக்கறிஞரிடம் சென்று கேட்டபோது, அந்தக் கூடையில் பயன்படக் கூடிய துண்டுகள் ஒன்றுமில்லாததால் கொட்டிவிட்டதாகச் சொன்னர். அத்துடன் எல்லாக் காகிதங்களும் தொலைந்தன என்று எல்லாரும் நினைத்தனரே தவிர, என்னிடம் இன்னுமொரு தீர்ப்பு எஞ்சியுள்ளதென்பதை என் நண்பர்கள்கூட அறியார்.

மிர்த்திபாட்டி ராமய்யாவின் விண்ணப்பத்தை முன்னிட்ட விசாரணையை, மாவட்ட நீதிபதி ஜூன் 26 அன்றைக்குக் குறித் திருந்தார். விசாரணை நாள் வருவதற்கு முன்னரே, மாவட்ட நீதி பதியின் பெட்டியிலிருந்த தீர்ப்புக் காகிதங்கள் எப்படியோ சிரஸ்தா தாரரின் கைகளுக்குப் போயின. காலையில் விசாரணை என்றிருக்க, 25ஆம் நாள் இரவு, நீதிமன்றக் கட்டடத்தில் கோதாவரிப் பக்கத்தி லிருந்த கதவு ஒன்று திறக்கப்பட்டு, சிரஸ்தாதார் மற்றும் ஒரு குமாஸ்தாவின் பெட்டிகள் உடைக்கப்பட்டு, காகிதங்கள் சின்ன பின்னமாக இறைக்கப்பட்டுக் கிடந்தன. அருகிலேயே இருந்த பணப் பெட்டியை யாரும் தொடவேயில்லை. காமராஜுவின் விவகாரத்தில் தொடர்பு பட்ட காகிதங்களைத் திருடர்கள் கொண்டு சென்றனர் என்று பட்டணத்தில் பெரும் வதந்தி பரவியது.

அன்று விசாரணை நாளாதலால் சாட்சிகளும், நகரமக்களும் பகல் பத்து மணிக்கு முன்னரே நீதி மன்றக் கட்டடத்திற்குச் சென்றிருந்தனர். நானும் ஒரு சாட்சியானதால் நண்பர்களுடன் சேர்ந்து, விசாரணைக்கு முன்பாகவே சென்றிருந்தேன். அப்பொழுது நீதிமன்றக் கட்டடத்தில் ஒரு விந்தை நடந்து கொண்டிருந்தது. சிரஸ்தாதாரரும், கிரிமினல் ரிக்கார்ட்ஸ் கீப்பரும் ஓர் அறையில், கதவைத் தாழிட்டுக்கொண்டு உட்கார்ந்து, இரகசியமாக ஏதோ செய்துகொண்டிருந்தனர். நானும் என் நண்பர்களும் சாவித்துளை வழியாக உள்ளே பார்த்தோம். சிரஸ்தாதாரரும், பொல்லாப்ரகட வெங்கன்னவும் காகிதத் துண்டுகளை ஓர் உறையில் போட்டுக்

கொண்டிருந்தனர். முத்திரை போடுவதற்காகப் போலும். வெங்கன்னுவின் கையில் அரக்குத் துண்டு ஒன்று இருந்தது.

நீதிபதி வந்து இடத்திலமர்ந்த உடனே, மிர்த்திபாட்டி ராமய்யா தம்மால் சமர்ப்பிக்கப்பட்ட காகிதங்கள் மாற்றப்படுகின்றன என்றும், உடனே தம் காகிதங்களைத் தமக்குக் காட்டவேண்டும் என்றும் நீதிபதியிடம் முறையிட்டுக் கொண்டார். சற்று நேரத்தில் சிரஸ்தாதார் வந்து, ஒட்டிய காகிதங்கள் சிலவற்றை நீதிபதியின் மேஜை மேல் வைத்தார். அவற்றைச் சோதித்துப் பார்த்து, தாம் காகித உறையில் வைத்தவை அவை அல்ல என்றும், சிரஸ்தாதார் காகிதங்களை மாற்றியபோது பார்த்த சாட்சிகள் உள்ளனரென்றும் மிர்த்திபாட்டி ராமய்யா, நீதிபதியிடம் பல விதங்களில் சொல்லலானார். காகிதங்கள் மறைந்த விஷயத்தில் தாம் செய்ய வேண்டியது ஒன்றுமில்லையென்று சொல்லி விட்டார் நீதிபதி. மேலும், எங்கள் மாவட்ட நீதிபதி, மிர்த்திபாட்டி ராமய்யாவைப் பார்த்து, ‘ நீ பாதிக்கப்பட்ட வாதி பிரதிவாதிகளில் ஒருவனல்ல. எனவே உன் விண்ணப்பத்தை விசாரிக்கத் தேவையில்லை ’ என்று சொல்லி அனுப்பிவிட்டார். மாவட்ட நீதிமன்றத்தில் நியாய விசாரணை, அன்று இந்த விதமாக முடிந்தது. ஆனால் விவகாரம் அத்துடன் முடியவில்லை.

ராஜமகேந்திரவரக் காவல்துறை மேற்பார்வையாளர் (Police Inspector) இந்த அநியாயத்தைக் கேள்விப்பட்டு, என்னை மாவட்டக் காவல்துறைக் கண்காணிப்பாளரிடம் (Police Superintendent) அழைத்துச் சென்று விஷயத்தைக் கூறினார். அவர் நடந்த தெல்லாம் கேட்டு, நீதிமன்றக் கட்டடத்தில் நடந்த திருட்டைப் பற்றிப் புலன் விசாரிக்க அனுமதி அளிக்க வேண்டுமென்று மாவட்ட நீதிபதிக்கு எழுதினார். அத்தகைய புலன் விசாரணை தேவையில்லை என்றும், பொருள்கள் எதுவும் களவு போகவில்லை யென்றும் அவர் பதிலெழுதினார். அதற்குப் பின்னர் மாவட்டப் போலீஸ் அதிகாரி, நடந்த விஷயங்கள் எல்லாவற்றையும் என்னிடம் எழுதி வாங்கிக் கொண்டு, உடனே காகிநாடாவுக்குச் சென்று, மாவட்ட மாஜிஸ்டிரேட்டிடம் நடந்ததெல்லாம் எடுத்துச் சொல்லி, சிரஸ்தா தாரரையும், கிரிமினில் ரிக்கார்ட்ஸ் கீப்பரையும் பிடிப்பதற்கு வாரண்ட்டுகள் பெற்றுவந்தார். மறுநாள் சிரஸ்தாதாரர் ரொஜாரியோ துரையும், கிரிமினில் ரிக்கார்ட்ஸ் கீப்பர் பொல்லாப்ரகட வெங்கன்னு வும் நீதிமன்றத்துக்குச் செல்வதற்கென உடை உடுத்திக்கொண் டிருந்த நேரத்தில், காவலர் சென்று அவர்கள் இருவரையும் பிடித்துக் கொண்டு, காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்று, அறையில்

அடைத்து வைத்தனர். இந்த விஷயம் தெரிந்ததும் ஊரெல்லாம் அல்லோல கல்லோலப்பட்டது.

எதிர் தரப்பினர் சிலர் ஓடிச்சென்று, இந்த விபரீதத்தை மாவட்ட நீதிபதியிடம் பணிவுடன் தெரிவித்தனர். சிரஸ்தாதாரரை உடனே விடுதலை செய்ய வேண்டும் என்று காவல் நிலையத் தலைவருக்கு அவர் ஒரு கடிதம் எழுதினுர். ஆனுல் காவல் நிலையத்தினர் அதைப் பொருட்படுத்தாமல், அன்று மாலையே அவர்கள் இருவரையும் படகேற்றி, காகிநாடாவில் மாவட்ட மாஜிஸ்டிரேட்டிடம் கொண்டு சென்றனர். மாவட்ட மாஜிஸ்டிரேட் மேல் விசாரணை நடத்தி, எங்களிடமிருந்து சாட்சியங்கள் பெற்றுக்கொண்டு, ராஜ மகேந்திரவரம் வந்து திருட்டு நடந்த இடத்தைப் பார்வையிட்டு, மாவட்ட நீதிபதியின் வாக்குமூலத்தையும் பெற்றுக்கொண்டு, பொல்லாப்ரகட வெங்கன்னுவை விடுதலை செய்து, சிரஸ்தாதாரரை இறுதி விசாரணைக்கென்று மாவட்ட நீதிமன்றத்திற்கு அனுப்பினுர். செஷன்ஸ் நீதிபதியும், எங்கள் மாவட்ட நீதிபதியுமான வ்ாலெஸ் துரை இந்த வழக்கில் ஒரு சாட்சி ஆதலால் சென்னை உயர்நீதி மன்றத்தினர், விசாரணைக்காக வழக்கைக் கிருஷ்ணு மாவட்ட நீதிமன்றத்திற்கு அனுப்பினர்.

அக்டோபர் மாதத்தில் விசாரணை நடந்தது. கிருஷ்ணு மாவட்ட நீதிபதியான கெல்சால் துரை, சரியான காகிதத் துண்டுகள் சமர்ப்பிக்கப்பட்டன என்பதில் எள்ளளவும் ஐயமில்லை என்றும், சிரஸ்தாதார் அவற்றை அபகரித்துக் கொண்டதற்குச் சாட்சியம் இல்லாததால் அவர் குற்றவாளி அல்ல என்றும் தீர்ப்பளித்து, ரொஜாரியோ துரையை விடுதலை செய்தார்.

இதற்கிடையில் எங்கள் விவேகவர்தனியில் எழுதப்பட்ட விஷயத்தைப் பார்த்து சென்னை அரசினர் உயர் நீதிமன்றத்திற்கு எழுத, அவர்கள் விசாரணை நடத்தி முடிவைத் தெரிவிக்க வேண்டுமென எங்கள் மாவட்ட நீதிபதிக்குக் கட்டளையிட்டனர். அப்பொழுது மாவட்ட நீதிபதி விழித்துக்கொண்டு, என்னையும் மற்றும் சிலரையும் வரச்சொல்லி விசாரணையைத் தொடங்கினுர். எங்கள் எதிர்க் கட்சியினரான சித்ரபு காமராஜு முதலியவர்கள், இந்த விசாரணையின் முடிவில் நான் சிறைச்சாலைக்கு அனுப்பப்படுவது உறுதி என்று நம்பிக்கொண்டிருந்தனர். என்னிடமிருந்த தீர்ப்புக் காகிதங்கள் யாவும் பாழ்ப்பட்டுப் போய்விட்டன. அவற்றை அநியாயமாக ஒழித்துவிட்ட சிரஸ்தாதார் குற்றவாளி அல்லர் என்று விடுதலை செய்யப்பட்டார். மாவட்ட நீதிபதி என்னிடம்

நல்லெண்ணம் இல்லாதவராக இருந்தார். சூழ்நிலைகள் யாவும் எனக்கெதிராகவே காட்சி யளித்தன. என்னிடம் இன்னொரு தீர்ப்புக் காகிதம் எஞ்சியுள்ளதென்பது என் நண்பர்களுக்கோ, எதிரிகளுக்கோ தெரியாது. நான் அந்தத் தீர்ப்புத் தாளைச் சட்டைப் பையில் போட்டுக்கொண்டு நீதிமன்றத்திற்குச் சென்றேன்.

விசாரணை தொடங்குவதற்கு முன்னர் நான் ஒரு காகிதத்தில், என்னிடம் காமராஜு அவர்கள் கைப்பட எழுதிய முதற்படியான தீர்ப்பு ஒன்று உள்ளதென்றும், அந்த வழக்கின் கட்டை உடனே கொண்டுவரச் சொல்வதாக இருந்தால் அதன் எண்ணைத் தெரிவிப்ப தாகவும் எழுதி நீதிபதியிடம் கொடுத்தேன். எண்ணைச் சொல்ல வேண்டும் என்று அவர் எழுதி அந்தக் காகிதத்தை என்னிடம் திருப்பிக் கொடுத்தார். அதன்கீழ் எண்ணை எழுதி மீண்டும் நான் துரையிடம் கொடுத்தேன். அவர் உடனே ஒரு கடிதம் எழுதி, பணியாளை அழைத்து, 'ஓடிப்போய் இதை முன்சீஃப் கச்சேரியில் கொடுத்து, அவர் கொடுப்பதை வாங்கி வா' என்று கட்டளை யிட்டார். எனக்கும் துரைக்கும் இடையே நடந்த கடிதப் போக்கு வரத்து என்னவென்பது யாருக்கும் தெரியாது.

சென்ற பணியாள் அரைமணியில் அந்த வழக்குக் கட்டைக் கொண்டுவந்து துரையிடம் கொடுத்தான். அப்போது என் சட்டைப் பையிலிருந்த காகிதத்தை எடுத்துத் துரையிடம் கொடுத் தேன். அரசாங்க வழக்கறிஞராதலால் காமராஜுவின் கையெழுத்து எல்லாருக்கும் தெரிந்திருந்தது. நான் கொடுத்த காகிதத்தில் அம்புக் குறிகளும், அடித்தல் திருத்தல்களும் நிரம்பியிருந்தன. வழக்குக் கட்டில் இருந்த தீர்ப்பு அப்படியே அதன் படியாக இருந்தது. அந்த இரண்டையும் பார்த்த உடனே துரையின் மனத்திலிருந்த எண்ண மெல்லாம் ஒரேயடியாக மாறிவிட்டது.

அவர் முதற்படித் தீர்ப்பைக் காமராஜுவின் கையில் கொடுத்து, 'இது நிச்சயமாக உன் கையெழுத்துதான். (என்னைச் சுட்டிக் காட்டி) இவர் நேர்மையானவர். சிரஸ்தாதாரரும் நீயும் சேர்ந்து, இவர்மேல் எனக்குத் தவறான எண்ணம் உண்டாகும்படிச் செய் தீர்கள். இதுவரையில் காணாமற்போன காகிதங்கள் யாவும் உண்மையானவையே. சிரஸ்தாதாரருக்கு லஞ்சத்தைக் கொடுத்து அந்தக் காகிதங்களை மாற்றும்படியாக நீயே செய்திருக்கிறாய். விசாரணைக்காக நாளைக்கு உன்னை மாஜிஸ்டிரேட்டிடம் அனுப்பு கிறேன்' என்று கோபமாகச் சொல்லிவிட்டு, சிரஸ்தாதாரரையும் கிரிமினில் ரிக்கார்ட்ஸ் கீப்பரையும் வேலையிலிருந்து நீக்குவதாகவும் எழுதிப் படித்துக் காட்டினார்.

காமராஜு அவர்கள் நீதிமன்றத்திலிருந்து வீட்டிற்குச் சென்று, மரண வாக்குமூலம் எழுதிவைத்து, அன்றிரவே விஷம் குடித்துத் தற்கொலை செய்துகொண்டார். அடுத்த நாள் விடியற்காலையில் அவரது தற்கொலை விஷயம் தெரிந்தபோது எனக்குப் பெரும் வியப்பும் மனத்துயரும் உண்டாயின.

தீய நடத்தையுள்ளவர்களின் தீய நடவடிக்கைகளைத் தடுக்க முயன்றதால் எனக்குப் பலபேருடைய விரோதம் வந்து சேர்ந்தது. தூரத்திலிருக்கும் அரசாங்க ஆளுநர்கள், அரசப் பிரதிநிதி, இறுதியாகச் சக்கரவர்த்தி இவர்களின் தவறுகளைச் சுட்டிக் காட்டுவது ஆபத்தில்லாத பணியேயாகும். ஆனால் வாழும் இடத்திலுள்ள துணை மாஜிஸ்ட்ரேட் மேலாவது, காவல் பணியாளர் மேலாவது அவர் தம் குறைகளை எடுத்துச் சொல்லி எழுதுவது அவ்வளவு ஆபத்தில்லாத வேலையல்ல. இருந்தாலும், தவறு செய்த பொழுது, செய்தவர் எந்த அதிகாரியாக இருந்தாலும், எங்கள் விவேகவர்தனி கண்டிக்காமல் விடவில்லை. அதன் எதிர்ப்புக்கு ஆளான அதிகாரிகள் பலர், தொடக்க காலத்தில் அதை உருத் தெரியாமல் அழிக்கப் பல வழிகளில் முயன்றனர். ஆனால் அவர்தம் முயற்சிகள் வெற்றிபெற வில்லை. சித்ரபு காமராஜுவின் விவகாரத்தோடு விவேக வர்தனியின் பெயரே பயங்கரமாகி, தீய அதிகாரிகளுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கியது.

அச்சுறுத்துவதால் விவேகவர்தனியை ஒழிப்பது இயலாதென்று அறிந்த அறிவாளிகள் சிலர், நயத்தின் மூலமாக அதை நிறைவேற்றப் பார்த்தனர். தொடக்கத்திலேயே 25 ரூபாய் ஊதியம் கொண்ட வேலை ஒன்றைக் கலெக்டர் அலுவலகத்தில் தருவதாக எனக்குச் சொல்லி அனுப்பினர். மதிப்பு வாய்ந்த அந்த வேலையைப் அப்போது ஏற்றுக் கொண்டிருந்தால், நான் ஒரு வேளை கௌரவமான அதிகாரி ஆகியிருக்கலாம் என்றாலும் என் சுதந்திரப்போக்கு, தத்துவச் சிந்தனை, மன அமைதி இவை யாவும் நிச்சயமாக அழிந்தே போயிருக்கும். அந்த வேலையில் சேர்ந்திருந்தால் நான் எத்தகையோரின் கீழ் பணியாற்றவேண்டும், எப்படியிருக்க வேண்டும் என்பது அறிந்ததே. எங்கள் கல்லூரியில் சுதந்திர வாழ்க்கையை நான் அனுபவித்துப் பழகிய மாணவர் சிலர் அத்தகைய வேலையை ஏற்றுக்கொண்ட பின்னர், சொற்ப காலத்திலேயே மீசையை மழித்து விட்டு, முகத்தில் விபூதிப் பட்டைகள் தீட்டி, காவியேறிய வேட்டிகளை உடுத்தி, அடையாளம் கண்டுகொள்ள முடியாத அளவுக்கு மாறுவேடம் பூண்டு திரிவதை நான் அன்றாடம் பார்த்துத்

தான் வந்தேன். அவர்கள் கதிதான் எனக்கும் வந்து சேரும் என்று அஞ்சி, என் நண்பர்கள் சொன்ன அறிவுரைகளையும் கேளாமல், நான் அந்த வேலையை மறுத்துவிட்டேன்.

1878 ஆம் ஆண்டில் பிரார்த்தனை சமாஜம் ஒன்றை முதலில் எங்கள் வீட்டில் அமைத்தோம். அப்போது நானும், புர்ரா ராஜ லிங்கம் ராவ், பசவராஜு கவர்ராஜு, ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம், பயபுரேடி வேங்கடஜோகய்யா, கன்னமுரெட்டி பார்த்தசாரதி நாயுடு ஆகியோரும் உறுப்பினராகச் சேர்ந்து அந்த சமாஜத்தை உருவாக்கினோம். பார்த்தசாரதி நாயுடு கீர்த்தனைகள் பாடுவார். நான் சிறிய அறிவுரைகளை எழுதிப் படித்து வந்தேன்.

ஓராண்டு முடிந்த பின்னர் சமாஜத்தை விஜயநகரம் மகாராஜா பெண்கள் பள்ளிக்கு மாற்றினோம். இப்போதுதான் பிரார்த்தனை சமாஜத்திற்கு வசதியான மண்டபம் உருவாகியுள்ளது. இந்தச் சமாஜம் எத்தனையோ நற்காரியங்களுக்கும், எத்தனையோ பேரை நல்வழிக்குக் கொண்டுவருவதற்கும் உறுதுணையாக இருந்ததென்று சற்றும் ஐயமில்லாமல் கூறலாம். இந்தச் சமாஜத்தின் மூலமாகவே ஏழையருக்கு இராப் பள்ளிகள் முதலானவை முதலில் தொடங்கப் பெற்றன.

# 4. 1880 முதல் 1890 வரை

1874 ஆம் ஆண்டில் சென்னையிலிருந்த பிரமுகர்கள் சிலர் மகளிர் மறுமணத்தை ஊக்குவிப்பதற்கென்று சங்க மொன்றை நிறுவி, பணி யாற்றத் தொடங்கி, எல்லா மாவட்டங்களுக்கும் அறிக்கைகள் அனுப்பினர். அந்தச் சங்கத்திற்குத் திருவாளர். பல்லெ செம்சலராவ் அவர்கள் செயலாளர். அந்தச் சங்கம் இரண்டு ஆண்டுகள் ஆர வாரத்தை எழுப்பிவிட்டு ஓய்ந்த பின்னர் அதனுடைய சுவடே தெரியாமற் போய்விட்டது. அது பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில் மகாமகோபாத்தியாய திரு. பரவஸ்து வேங்கட ரங்கா சார்யுலு மகளிர் மறுமணம், சாத்திர ஒப்புதலுடையதென்று 1875இல் சிறிய புத்தகம் ஒன்றை எழுதி வெளியிட்டார்.

விபசாரம், கருச்சிதைவுகளுக்கு வாய்ப்பில்லாமல், இளம் விதவையர் தம்முடைய இரண்டாம் கணவர்களுடன் நிரந்தரமாக இன்பத்தை அனுபவித்துக்கொண்டு இனிய வாழ்வில் ஈடுபடுவதைப் பார்க்கும் வாய்ப்பு எப்பொழுது வருமோ என்ற ஏக்கம் என் இதயத்தில் நிறைந்திருந்தாலும், மகளிர் மறுமணம் பரவுவதற்கான காலம் இன்னும் வரவில்லை என்று எண்ணியதால் அதைப் பிரசாரம் செய்வதற்கான முயற்சியில் இறங்க எனக்குத் தைரியம் பிறக்கவில்லை.

ஒரு நாள், என் உடன்படித்தவரும், நாட்டுப் பற்று மிக்கவரும், நெருங்கிய நண்பருமான சல்லபல்லி பாபய்ய பந்துலு அவர்கள், 'நாம் பெண்கள் மறுமண விஷயத்தில் முயற்சி எடுக்கவேண்டும்' என்று என்னிடம் மிகவும் அழுத்தமாகச் சொன்னார். என்னைப் போன்றவன் இத்தகைய மாபெரும் செயலில் இறங்கினால் பயனிருக் காது என்ற எண்ணத்தோடு நான், அவரை அவ்வளவாக ஊக்குவிக் காமல், 'பார்க்கலாம்' என்று அக்கறை காட்டாமலிருந்தேன். அவர் இரண்டு மூன்று முறை என்னிடம் இந்த விஷயத்தைச் சொல்லி என்னைத் தூண்டிக் கொண்டேயிருந்தார். இப்படி இரண்டு முறை சொல்லிய பிறகு மூன்றும் முறை, நான் நண்பரைப் பார்த்து, 'உன்னை உன் அண்ணன்மார்கள் கைவிட்டாலும், உறவினர்கள் ஒதுக்கிவிட்டாலும் என்னை விடாமல் கடைசிவரையில் என்னோ டிருந்து வேலை செய்வாயா?' என்று உறுதியுடன் கேட்டேன். அவர் அணுவளவும் தயங்காமல், 'எத்தனைக் கஷ்டங்கள் வந்தாலும்

தளராமல் நின்று வேலை செய்வேன்' என்று அந்த விஞடியே சொன்னார். அப்பொழுது அது கடவுள் விரும்பிய ஆணை என்று மனத்துக்குப் பட்டதால், 'கூட்டத்திற்கான அழைப்பிதழை எழுதிக்கொண்டு வா, நான் கையெழுத்துப் போட்டு வெளியிடு கிறேன்' என்று கூறினேன்.

என்னுடைய அழைப்பிதழ் வெளிவந்த உடனே எங்கள் பட்டணத்துப் பண்டிதர்கள் யாவரும் என்மீது போர் தொடுத்து, கத்திகளைத் தீட்டத் தொடங்கினர். அவர்களுக்குத் துணையாகப் பழைய ஆசாரத்தில் பிடிப்புக் கொண்ட உலகியல் அறிஞர்களும், வைதீகப் பெரியவர்களும் என் மீது போர் துவங்கிவிட்டனர். மகளிர் மறுமணம் பற்றி ஈசுவர சந்திர வித்தியாசாகரின் நூலொன் றுள்ளதென்று தெரியுமே தவிர, எனக்கு அப்பொழுது அது கிடைக்க வில்லை. மனு ஸ்ம்ருதி, யாக்ஞவல்க்கிய ஸ்ம்ருதி, பராசர ஸ்ம்ருதி ஆகியவை மட்டும் என்னிடமிருந்தன. இந்த விஷயம் பற்றித் 'தத்துவபோதினி'யில் வெளியிடப் பட்ட சொற்பொழிவு ஒன்றும், 'புருஷார்த்த பிரதாயினி'யில் வெளியிடப்பட்ட கட்டுரையொன்றும் எனக்குக் கிடைத்தன. இந்த நூல்களின் உதவியுடன் என் சிந்தனைக் கெட்டிய கருத்துக்களைச் சாத்திர மேற்கோள்களோடு இணைத்து என் சக்திக் கெட்டிய வரையில் சொற்பொழிவொன்று எழுதி, பெண்கள் பள்ளிக்கூடக் கட்டடத்தில் 1879 ஆகஸ்ட்டு 3 ஆம் நாள் நடைபெற்ற சிறப்புக் கூட்டத்தில் படித்தேன். என் சொற்பொழிவு முடிந்த உடனே, காளை மேல் பாயும் கொடும் புலிக ளெனப் பண்டிதர்கள் பலர் எழுந்து, பயங்கரமான சத்தத்துடன் என்னைப் பல விதமாகத் திட்டி, 'நஷ்டே ம்ருதே' முதலிய பராசர ஸ்ம்ருதி பகுதிகளுக்குத் தவறான பொருள்களைச் சொல்லிவிட்டு, பதில் சொல்வதற்கு வாய்ப்புத் தராமல், அடுத்த வாரம் என் சொற்பொழிவுக்கு ஒரு கண்டனச் சொற்பொழிவு படிப்பதாகச் சொல்லி, அன்று கூட்டத்திலிருந்து கலைந்து சென்றனர்.

அது வரையில் என்னைப் புகழ்ந்து வந்தவர்களும் என்னை இகழத் தொடங்கினர். நண்பர்கள்கூட என் ஊக்கத்தைக் குறைக்க முற்பட்டனர். இந்தக் காரியத்தில் என்னை ஊக்குவித்து வந்த பாபய்ய பந்த்துலு மட்டும் சம்ஸ்கிருதத்தில் ஓரளவு புலமை பெற்றி ருந்தவராதலால் எனக்குப் பல விதங்களில் துணையாக இருந்தார். இதற்கிடையில் 30க்கு மேற்பட்ட ஸ்ம்ருதிகளை வரவழைத்தோம். நான் பார்த்த பகுதிகளில் என் வாதத்திற்குத் துணையான பகுதிகள் பல எனக்குக் கிடைத்தன. பண்டிதர்கள் சொற்பொழிவு நடத்திய

நாளன்று சபையில் என் எதிர்வாதங்களைக் கேட்ட பிறகு, பகுத்தறிவு படைத்த யாவர்க்கும், பண்டிதர்களின் வாதம் சாரமற்றதென்றும், மகளிர் மறுமணம் சாத்திரத்துக்கு உடன்பட்டதே என்றும் எண்ணம் பிறந்தது.

பண்டிதர்கள் பொதுகூட்டங்களில் என்னைத் தோற்கடிக்க முடியாமற் போனதால் குறுக்கு வழிகளைக் கையாளத் தொடங்கினர். சிலர் நல்ல வார்த்தைகள் சொல்லியும், சிலர் அச்சுறுத்தியும் என்னை மாற்ற முயன்றனர். மற்றும் சில பண்டிதர்கள் விசாகை மாவட்டத்திலிருந்து கண்டன நூலொன்று எழுதுவித்துக் கொண்டுவந்து, ஸ்யுல பேரிச்சயநுலு அவர்கள் வீட்டில் கூட்டம் போட்டு, அந்தக் கூட்டத்திற்குப் மகளிர் மறுமண எதிர்ப்பாளர்களை மட்டும் வரவழைத்து, என்னை அங்கு எதிர்பாராமல் அழைத்துச் சென்று, மேற்சொன்ன நூலைப் படித்து, அதில் கண்ட அம்சங்களுக்கு அந்த விஞடியே பதில் சொல்ல வேண்டுமென்று கேட்டு என்னைப் பண்டிதருக்க முயன்றனர். ஆனால் நான் சமயோசிதமான பதில்கள் சொல்லத் தொடங்கவே கேட்காமல், வயிற்று வலியென்று ஒருவரும், கால் வலியென்று ஒருவரும் எழுந்து செல்லத் தொடங்கினர். அப்பொழுது வைணவர் ஒருவர் எழுந்து முன்னால் வந்து, தாம் பழைய ஆசாரத்தில் பிடிப்புள்ளவராக இருந்தாலும், தம் பக்கத்தைச் சேர்ந்தவர்கள் செய்யும் அநியாயத்தைச் சகிக்க முடியாமல், 'என்ன அநியாயம்? இது என்ன, அரங்கமா?' என்று கூவிக்கொண்டே சபையிலிருந்து வெளியேறினர்.

நான் முதலில் ஆற்றிய சொற்பொழிவு வெளியானதும் தெலுங்கு நாடு முழுவதும் மகளிர் மறுமண விஷயம் பற்றிய வாதங்கள் பிரபலமாகி, பலர் என் சொற்பொழிவு பற்றிக் கண்டன நூல்கள் எழுதினர். இந்த நூல்கள் யாவற்றிலும் இருந்த முக்கிய அம்சங்களுக்குப் பதில் கூறு முகத்தான் பெண்கள் பள்ளியில், அக்டோபர் 12ஆம் நாள் நடந்த சிறப்புக் கூட்டத்தில் என் இரண்டாம் விண்ணப்பத்தைச் சொற்பொழிவாக நிகழ்த்தி, பிறகு பத்திரிகையில் வெளியிட்டேன். பல இடங்களிலிருந்து எழுதப்பட்டு வந்த, எதிர் வாதங்களுக்கான மறுப்புக்களை விவேகவர்தனியில் வெளியிட்டு வந்தேன். ஓய்வு கிடைத்தபொழுது மற்ற இடங்களுக்குச் சென்று சொற்பொழிவாற்ற முயன்று வந்தேன்.

நான் முதன் முதலில் காகிநாடாவிற்கு ஒரு ஞாயிற்றுக்கிழமை சென்று, மகளிர் மறுமணம், சாத்திரத்திற்கு ஒவ்வும் என்று ஹிந்து கலைக் கல்லூரிக் கட்டடத்தில் சொற்பொழிவாற்றினேன். எதிர்ப்பாக

இருந்த அந்த ஊரைச் சேர்ந்த பண்டிதர்கள் சிலர், அடுத்த ஞாயிறன்று கண்டனச் சொற்பொழிவு ஆற்றுவதாகச் சொல்லி அனுப்பினர். எதிர்க்கட்சி வாதங்களைக் கேட்டு, எனக்குத் தோன்றும் சமாதானங்களைச் சொல்வதற்கென்று அந்த ஞாயிற்றுக்கிழமை நான் காகிநாடாவிற்குச் சென்றேன். கோயிலில் கூட்டம் நடத்தினால் வருவதாகப் பண்டிதர்கள் செய்தி அனுப்பியதால் நானும், என் துணைவர்களும் விஷ்ணு ஆலயத்துக்குச் சென்றோம். விதவை மறுமண எதிர்ப்பாளர்கள் நான் ஆற்றிய சொற்பொழிவிற்குக் கண்டனமென்று ஒரு நூலைப் படிக்கத் தொடங்கினர். வேதக் கருத்து ஆராய்ச்சி முடிவதற்குள் பொழுதுபோயிற்று. மறுநாள் காலை அவர்கள் ஸ்ம்ருதிப் பகுதியின் பொருளைக்கூறி முடிப்பதற்குள் பத்து மணி கடந்துவிட்டது. அன்று பிற்பகல் கூட்டம் தொடங்கிய பிறகு மகளிர் மறுமணக் கட்சியனர் சொற்பொழி வாற்றத் தொடங்கும் பொழுது, மல்லாதி அச்சன்ன சாஸ்திரியெனும் பெரிய மனிதர் வருகை தந்து, பாரபட்சமில்லாமல் நியாயம் வழங்குவதற்குத் தாம் நடுவராகப் பணியாற்றுவதாகச் சொன்னார். நான், வேதப் பகுதிகளின் பொருள் விளக்கம் தந்த உடனே சாஸ்திரி அவர்கள், பாரபட்ச மற்ற தம் கருத்தைப் படிப்பதற்கென்று இடுப்பில் செருகிக்கொண்டு வந்த காகிதத்தை வெளியே எடுத்து, விலக்காளருக்குச் சாதகமாகப் படிக்கத் தொடங்கினார். அத்துடன் கூட்டத்தினர்க்கு அந்த நடுவரின் யோக்கியதை புலனாகி இனி கருத்தைச் சொல்ல வேண்டியதில்லையென்று தடை செய்தனர். சிலர் கூட்டத்தை விட்டு எழுந்து சென்றனர். அச்சன்ன சாஸ்திரியவர்களும் சந்தியா வேளையென்று சாக்குச் சொல்லி எழுந்து சென்றுவிட்டார்.

எதிர்தரப்பினரான பிராம்மணர் சிலர், குழப்பம் விளைவிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் கோயிலின் வாயிலில், மறியலைத் தொடங்கவே காவல் நிலையத்தினர் தடுத்துவிட்டனர்.

இதற்குள் இருள் சூழ்ந்ததால் எதிர்தரப்பினர் கற்களை எறியத் தொடங்கவே, என்னோடு என் மெய்க் காப்பாளராக வந்த மாணவர்கள், கூட்டமாகச் சத்தம் போட்டவாறு எழுந்து அவர்களுக்குத் தலைவராக இருந்த பிராம்மணரைச் சரியாக அடித்துவிட்டதாலும், காவல் அதிகாரியும், என் நண்பருமான கும்மிடிதல மனோகரம் பந்த்துலு வந்து குழப்பம் விளைவிப்போரைச் சிறையில் அடைக்கப் பார்த்ததாலும் விரைவில் அந்தத் துஷ்ட பார்ப்பனக் கும்பல் ஓட்டம் பிடித்தது.

பலாத்காரத்தைக் காட்டி எதிர்க் கட்சியினர் என்னை ஒழிப்பதற்கான முயற்சி, காகிநாடாவில் மட்டுமில்லாமல், என் சொந்த ஊரான ராஜமகேந்திரவரத்திலும் ஒரு முறை நடைபெற்றது. சென்னை போன்ற தலைநகரத்திலேயே மகளிர் மறுமணம் பற்றி வண்ணாரப் பேட்டையில் நான் சொற்பொழிவாற்றும்பொழுது அங்கு வைணவப் பிராம்மணர்கள் கூச்சலிட்டுக் கொண்டு என் மீது பாயவே ராவ்பகதூர் ஸ்ரீவனப்பாக்கம் அனந்தாசார்யுலு என்னைத் தப்பிக்க வைத்து, தம் வண்டியில் ஏற்றிக்கொண்டு அழைத்து வரவேண்டியிருந்த தென்ருல், சிறிய பட்டணங்களில் மூடர்கள் இத்தகைய வன்முறையில் இறங்கியது ஆச்சரியமில்லை.

மகளிர் மறுமணச் சங்கம் பணியாற்றத் தொடங்கிய பிறகு இளம் விதவையரைக் காப்பாற்றும் பொறுப்பிலிருந்தவர் பெரும்பாலோர் தம் விதவைக் கன்னியருக்கு மறுமணம் செய்து வைக்கும் எண்ணம் கொள்ளலாயினர். கன்னி விதவையர் கிடைப்பாரேயாளுல் தாம் மணந்து கொள்ளவதாக எங்கள் கலைக் கல்லூரி மாணவர்கள் பலர் முடிவு செய்தனர். நானும் பாப்பய்ய பந்த்துலுவும் வீடு விடாகத் திரிந்து கேட்கவே, உலகிய லுணர்ந்த பிராம்மணக் குடும்பத்தினர், முப்பது பேருக்கு மேலான எண்ணிக்கையுள்ளவர்கள், திருமண காலத்தில் விருந்திற்கு வருவதாக உறுதியளித்து, ஒப்புதல் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டனர். நாங்கள் இந்தப் பணியைத் தொடங்கியபொழுது எங்களிடம் நிதியென்று சொல்ல ஒரு காசும் இல்லை. இருந்தாலும் சில வாரங்களிலேயே எனக்குப் பழக்கமானவர்களான ராஜாராவ் பந்த்துலுவும், பைடா ராமகிருஷ்ணய்யாவும் ராஜமகேந்திரவரத்திற்கு வந்தபொழுது இந்தப் பணிக்கென்று ரூபாய் முப்பதிறுயிரம் கொடுப்பதாக வாக்களித்தனர். இரண்டாண்டுகளுக்குப் பிறகு நடந்த முதல் விதவைத் திருமணத்திற்கான எல்லாச் செலவுகளையும் நானே ஏற்றுக்கொண்டேன். நான் ஆற்றிய சொற்பொழிவுகளை அச்சடித்துப் பெரும் பகுதியை இலவசமாகவே வழங்கினேன். வாதங்களுக்கென்று 30 40 ஸ்ம்ருதிகளையும், புத்தகங்களையும் விலைக்கு வாங்கினேன். திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்த மாணவர் சிலருக்குக் கல்லூரிச் சம்பளத்திற்கு நானே உதவி வந்தேன். இளம் விதவையர் இருக்கும் இடங்களை விசாரித்துச் சொல்வதற்கும், அதற்காகப் பாடு படுவதற்கும் சில பேருக்குப் பணம் கொடுத்து வந்தேன். இளம் விதவையரின் பெற்ருேரிடம் பேசுவதற்கென்று அமலாபுரம், மண்ட பேட்ட, காகிநாடா, ராமசந்திரபுரம், பாலகொல்லு முதலிய இடங்

களுக்கு ஆட்களை அனுப்புவதற்கு மட்டுமல்லாமல், ஓரிரண்டு இடங்களுக்கு நானும் சென்று வந்தேன். இந்தப் பணியில் எனக்கு இங்குள்ள அரசாங்கக் கல்லூரி மாணவர்கள் முதலிலிருந்து மிகவும் உதவியாக இருந்தனர் என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும்.

அரசர்களாலேயே சுமக்க முடியாத இந்தப் பெரிய காரியமாகிய சுமையைப் பணம் படிப்பு, அதிகார வசதிகள் இல்லாத சிறியவர்கள் நான்கைந்து பேர் தம் பொறுப்பில் ஏற்றுச் சிரமப்பட்டுக்கொண்டிருக்க, உலக அனுபவமும், படிப்பும், அதிகாரமும் நிரம்ப உள்ளவர்கள் எங்களுக்கு உறுதுணையாக நின்று, எங்களை ஊக்குவித்து வந்தனர். இவ்வாறு நாங்கள் சற்று வலிமை பெற்று, இரண்டாண்டுகள் சொற்போர்கள் நடத்திய பிறகு, செய்கை யில்லாத வெற்று வாதங்களால் பயனில்லை யென்று தெரிந்துகொண்டு, எப்படியாவது சில திருமணங்கள் நடத்த வேண்டுமென்று முடிவு செய்துகொண்டு, ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மன், நியாபதி சுப்பாராவ் பந்துலு, கொம்மு ராமலிங்க சாஸ்திரி, பசவராஜு கவர்ராஜு ஆகியோரும் நானுமாக ஐவரும், ஓர் இரகசியக் குழுவாகச் சேர்ந்து, எங்கள் முயற்சிகளைப் பிறரிடம் சொல்வதில்லை என்று உறுதி யெடுத்துக் கொண்டு, மறைவாகச் செயல் முறைகளை வரையறுக்கத் தொடங்கினோம்.

இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்ட மகளிர் மறுமண எதிர்ப்பாளர்கள், எங்கள் முயற்சிகள் செயல்பட இருக்கின்றன என்று நடுக்கம் கொண்டு, ஒரு நாள் மார்க்கண்டயேஸ்வாமி கோயிலில் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து என்னைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். கூட்டத்திற்குச் செல்லும் பொழுது என்னை உதைக்க வேண்டுமென்று பிராம்மணர் சிலர் முடிவு செய்துகொண்டு வந்தனராம்! இந்தச் செய்தி மாணவர்கள் செவிக்கெட்டிய உடனே கூட்டம் தொடங்கிய அரைமணிக் கெல்லாம் கோயில் முழுவதும் இருநூறு மாணவர்கள் நிறைந்துவிட்டனர். பலருடைய கையில் தடிகள் இருந்தன. சில மாணவர்கள் கூட்டத்தினர் இடையிலும் என்னைச் சுற்றியும் அமர்ந்து கொண்டனர். அன்றிலிருந்து பட்டணத்தில் கட்சிப் பூசல்கள் மேலும் பெருகிவிட்டன.

விருபாட்ச பீடத்தைச் சார்ந்த எங்கள் சங்கராசார்ய சுவாமிகள் விஜயநகரத்தி லிருந்து புறப்பட்டு வழிநெடுகிலும் காணிக்கைகளும், பாதபூஜைகளும் ஏற்றுக்கொண்டு எங்கள் கோதாவரி மாவட்டத்திற்கு வந்துகொண்டிருந்தார். ராஜமகேந்திரவரத்தில் நடந்து கொண்டிருக்கும் விதவை மறுமண முயற்சி பற்றிக்

கேள்விப்பட்டு எங்கள் சுவாமிகள் அந்த வேலையில் ஈடுபட்டவ ரனைவரையும் சாதிப்பிரஷ்டம் செய்ய வேண்டுமென்று ஆணை யிட்டாராம்! பீடாதிபதி அவர்கள், செல்வம் அபகரிக்கும் நோக் கத்துடன் செய்துவரும் அக்கிரமங்களைப் பற்றி எங்கள் விவேக வர்தனி பல விதங்களில் எழுதி, மக்களின் கண்களைத் திறந்துவிடத் தொடங்கியது. இந்தச் சுவாமிகள், கணவனைவிட்டு ஓடிப் போய் ஜகந்நாதபுரத்தில் விபசாரம் நடத்திக்கொண் டிருந்த பிராம்மணப் பெண் ஒருத்தியிட மிருந்து நிரம்பப் பணத்தைப் பெற்று, மனைவியைக் கைவிட்டதற்காக அவளுடைய கணவனுக்குச் சாதிப் பிரஷ்ட அறிக்கையை அனுப்பி, அவனைத் தூயனுக்குவிப்பதற்கு ஏராளப் பணம் பிடுங்கப் பார்த்தார்; பொல்லாப் பிரகட வெங்கன்ன எனும் வயதான ஒருவர் ஐம்பது வயதான ஒரு பெண்மணியுடன் தவறான முறையில் பழகி வருவதாகக் குற்றம் சுமத்தி, சாதிப்பிரஷ்ட அறிக்கையை அனுப்பி, பெருமளவு செல்வம் அபகரிக்க முயன்றார்; குலத்தை விட்டு ஓடிப்போய், துலுக்கப் பேட்டையில் குடியிருந்து குழந்தைகளைப் பெற்றெடுத்த பிராம்மணப் பெண்ணொருத்தியின் மகனைச் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார். இவை எல்லாவற்றையும் விவேகவர்தனி வெளியிட்டதன் காரணமாக ராஜமகேந்திரபுர வாசிகள், சுவாமிகள் எங்கள் ஊருக்கு வந்தபொழுது, பாதகாணிக் கைகள் கொடுக்காமல் ஒதுங்கிவிட்டனர். குலத்தினின்று வழுவிச் சென்ற பெண்ணின் மகனை அந்தச் சிஷ்யனை அனுப்பிய பிறகே அவருக்குப் பாதகாணிக்கைகள் சமர்ப்பிக்கப் பட்டன.

இதற் கிடையில், கல்வி வாசனை நுகர்ந்த கைம்பெண்டிர் சிலர் தம்மைக் கைம்மைத் துயரிலிருந்து காப்பாற்றுமாறு எனக்குக் கடிதங் கள் எழுதினர். பருவமடையாத விதவைக் கன்னியரின் திருமணங் களோடு தொடங்கினால் பெருமளவில் பொது மக்கள் ஆதரவு பெற்று விரைவில் பரவு மென்று எண்ணி யிருந்தோம். விதவைக் கன்னி யருக்குத் திருமணம் நடத்த முன்வந்தவர்கள், முதலில் அத்தகைய திருமணம் நடந்த பிறகு தாம் இரண்டாம் தரமாகச் செய்து கொள் வதாகச் சொன்னார்களே தவிர, முதலாவதாகச் செய்து கொள்ளக் கூடிய துணிவுள்ளவர் யாரும் காணப்படவில்லை.

இது இப்படி இருக்க, திருப்பூரு (கிருஷ்ணா ஜில்லா) டிப்யூட்டி தாசில்தாராக இருந்த தர்பா பிரம்மானந்தம் அவர்கள் 1881 நவம்பர் 5 ஆம் தேதி எனக்கு இவ்வாறு எழுதினார்: 'அந்தப் 12 வயதான பிராம்மண இளம் விதவையின் தாயார், நீர் உம்முடைய ஆட்களை அனுப்பினால் உடனே தன் மகளை உங்களிடம் அனுப்புவதாக

வாக்களித்திருக்கிறாள். நம்பிக்கை யுள்ளவர்களை, நேர்மையும் நெஞ்சுறுதியுமுள்ள ஆட்களை அனுப்பவும். அவர்கள் விஷயத்தை மிக மிக இரகசியமாகப் பாதுகாக்க வேண்டும். உங்கள் ஆட்கள் கடிதத்துடன் வழிபோக்கர்களைப் போல இங்கு வந்து என்னைப் பார்க்கச் சொல்லவும்.'

இந்தக் காரியத்தில் மிகப் பரிவோடு, முதலிலிருந்து எங்களோடு பணியாற்றிக்கொண்டிருந்த ஸோமம்சி பானுசங்கரராஜு அவர்களை என் கடிதத்துடன், பிரம்மானந்தம் அவர்களிடம் 15 ஆம் தேதி யன்று அனுப்பி வைத்தேன். அந்த இளம்பெண் எந்தக் கிராமத்தி லிருக்கிறா ளென்றோ, அவளுடைய தாயாரின் பேரென்ன வென்றோ அனுப்பிய நண்பரிடமும் சொல்லாமல், பிரம்மானந்தம் அவர்களைச் சந்தித்த பிறகு எல்லாவற்றையும் அவரே விளக்குவாரென்று மட்டும் கூறி அனுப்பினேன்.

என் நண்பர் ராஜமகேந்திரவரத்தை விட்டுச் சென்ற இரண்டு நாட்கள் கழித்து, பிரம்மானந்தம் அவர்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. அந்தக் கடிதத்தில் இருந்த செய்தி: 'உடனே சென்ற விநு கொண்ட தாலுகாவில் தாசில்தாராகப் பதவி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நேற்று எதிர்பாராமல் எனக்குக் கடிதம் வந்தது. நான் நாளை விநுகொண்டாவிற்குச் செல்வதற்காக இந்த இடத்தை விட்டுப் புறப்படுகிறேன். ஏமாற்றம் கொள்ளாமல், நாளை இளம் விதவை இருக்கும் கிராமத்திற்குச் சென்று அந்தப் பெண்ணின் தாயாருடன் பேசி அவளை அழைத்துக்கொண்டு போகச் சொல்லி உங்கள் ஆட்களிடம் சொல்லவும்.'

எங்கள் ஆட்கள் நடுவழியில் இருந்தார்கள். எங்கள் நண்பர் போக வேண்டிய கிராமம், எங்கள் பட்டணத்திலிருந்து 150 மைல் தொலைவிலுள்ளது. ரெயில் பாதைகளோ இல்லை. தந்தி கொடுப்பதற்கும் வழியில்லை. நான் என் நண்பர்களுடன் கலந்தாலோசித்து அந்த இளம்பெண் வாழும் கிராமத்தின் பெயரையும், தாயாரின் வீட்டுப் பெயரையும், செய்ய வேண்டிய காரியத்தையும் தெரிவித்து எங்கள் நண்பருக்கு ஒரு கடிதம் எழுதி, அரக்கு முத்திரை யிட்டு ஒரு பணியாளிடம் கொடுத்து அனுப்பினேன். எங்கள் நண்பர் போக வேண்டிய இடத்திற்குப் போய் விசாரித்ததில் பிரம்மானந்தம் அவர்கள் நெடுந்தொலைவுக்குப் போய்விட்டதாக அறிந்தார். தாம் போக வேண்டிய கிராமம் எதுவென்று அவருக்குத் தெரியாது. தாம் வந்த காரியத்தை வேறு ஒருவரிடம் சொல்லவும் முடியாது; சொல்லப் போனால் தாம் யாரென்றும் சொல்ல முடியாது. புத்திசாலியும்,

காரியம் சாதிக்கும் திறனுமுள்ளவராதலால் அவசரப்பட்டுத் திரும்பி விடாமல், அந்த ஊரிலேயே காத்திருந்தார். நாங்கள் அனுப்பிய ஆள் சென்று, எங்கள் கடிதத்தைக் கொடுத்தான். உடனே போக வேண்டிய கிராமத்திற்கு அவர்கள் சென்றனர்.

அந்த இளம்பெண்ணின் தாய் தந்தையர், கிராம அதிகாரிகளா யிருந்த பெரிய வீட்டினர். இந்தச் செயலில் தாயார் ஒருவரைத் தவிர உறவினர் ஒருவருக்கும் விருப்பமில்லை. இந்த விஷயம் சற்றே காற்றுவாக்கில் வெளியே தெரிந்தாலும் மூட கிராமத்தினர் சிலர் முரட்டுத்தனத்திலும் இறங்குவர். எங்கள் நண்பருக்கு உதவி செய்யக் கூடியவர்கள் அக்கம் பக்கத்தில் எவருமே இல்லை. இத்தகைய இக்கட்டான நிலையில், என்னுடைய நண்பர் தாம் போகும் இடத்தை வண்டிக்காரனிடம்கூடச் சொல்லாமல், இரவு இரண்டாவது ஜாமத்தில் அந்தக் கிராமத்தைச் சேர்ந்து, அவர்கள் வீட்டை அடைந்து அந்த இளம்பெண்ணின் தாயை எழுப்பி, இரகசியமாகத் தாம் வந்த விஷயத்தைச் சொல்லவே, அந்த அம்மாள் பிரம்மானந்தம் அவர்கள் வராமல் தம் மகளை அனுப்ப முடியாது என்று சொல்லிவிட்டார்கள். என் நண்பர் அன்றிரவு அந்தம்மாவை எப்படியோ வேண்டிக்கொண்டு, ஒத்துக்கொள்ளச் செய்து, விடிவதற்கு முன்பே அந்த இளம்பெண்ணை அழைத்துக்கொண்டு, பின்னாலிருந்து யாராவது வந்து பிடித்துக் கொள்வார்களோ என்ற பீதியுடன், அவசர அவசரமாகப் பயணம் செய்து, அந்தப் பெண்ணை 27ஆம் தேதியன்று எங்கள் வீட்டில் கொண்டுவந்து சேர்த்தார். அந்த மறுநாளே இந்தச் செய்தி ஊரெங்கும் பரவவே, புனித தலத் திற்குப் போவதுபோல அந்த இளம்பெண்ணைப் பார்ப்பதற்கு மக்கள் எங்கள் வீட்டிற்குத் திரண்டு வரலாயினர்.

பிறகு நாங்கள் வரன் வேட்டையில் இறங்கினோம். அதற்குள் ளாகத் திருமணம் செய்துகொள்ள உறுதி பூண்டிருந்த மாணவர்கள் சிலரின் தாய் தந்தையர் பயந்துபோய், கட்டாயப்படுத்திக் கல்யா ணத்தை முடித்துவிட்டனர். பல ஆண்டுகளாக எங்கள் வீட்டிலே இருந்து கல்வி கற்று, விசாகப்பட்டணத்தில் காவல் நிலையத்தில் இருபது ரூபாய் சம்பளத்திலிருந்த, இருபத்திரண்டு வயதான ஓர் இளைஞனின் மனைவி எதிர்பாராமல் இறந்துவிட்டாள். நான் அவருக்குக் கடிதம் எழுதவே அவர் இந்த இளம்பெண்ணை மணப் பதற்கு ஒப்புக்கொண்டார். அவருக்குப் பெண் கொடுக்க பலர் முன் வந்து படையெடுப்பினும் மறுத்துவிட்டு, விதவையை மணந்து

அநேக கஷ்டங்களை அனுபவிப்பதற்கு விரும்பிய அவருடைய தைரியமும், பரோபகாரச் சிந்தையும் பாராட்டத் தக்கன.

கல்யாணச் செலவுக்கென நாளமு காமராஜு அவர்கள் ரூபாய் ஆயிரம் எங்களுக்குக் கொடுத்தார். மணமகன் கோகுலபாட்டி ஸ்ரீராமுலு என்று தெரிந்த உடனே அவருடைய உறவினர் முதலானவர்கள் வந்து, திருமணம் செய்துகொள்ளக் கூடாதென்று புத்திமதி சொல்லி, வெற்றி காணுமல் திரும்பிச் சென்றனர். கல்யாணம் நடக்குமென்று நிச்சயமாகத் தெரிந்த பின்னர் எங்கள் பட்டணமே புயலிடைப்பட்ட பெருங்கடல்போல கொந்தளிக்கத் தொடங்கியது. என் நண்பர்கள்கூட என்னுடன் பேசுவதற்கே அஞ்சினர். மகளிர் மறுமண விஷயத்தில் தம் உயிரையே கொடுப்பதாகப் பெருமையாகப் பேசியவர்கள் யாவரும், கல்யாணத்திற்கு வருவது ஒரு பக்கமிருக்க, எங்கள் தெருவில் நடப்பதற்கே பயந்து சுற்று வழியில் போகலாயினர். உறவினர்கள் அனைவரும் என்னை, சாதியிலிருந்து விலக்கப் பட்டவனைப்போலப் பார்க்கத் தொடங்கினர். மணநாளன்று எங்கள் வீட்டில் மட்டுமல்லாமல் வீட்டைச் சுற்றியும், தெரு நெடுகிலும் காவல் நிலையத்தினர் காக்க வேண்டி வந்தது. இத்தகைய பெருங் கொந்தளிப்புக் கிடையில் 1881 டிசம்பர் 11ஆம் நாள் இரவு ராஜமகேந்திரவரத்தில் முதல் பெண் மறுமணம் நடைபெற்றது.

அந்தக் கல்யாணத்திற்குச் சிலர் தவிர்க்க முடியாத இடையூறுகளின் காரணமாகவும், சிலர் இயற்கையான கோழைத்தனத்தின் காரணமாகவும் வர முடியாமற் போனுலும், தைரியமும், நாட்டுப் பற்றும் உடையவர்களான என் நண்பர்கள் பலர், கலியாண நாட்களில் தாம்பூலம் பெற்றுக் கொண்டதோடல்லாமல், விருந்திலும் கலந்துகொண்டனர். அத்தகையவர்களில் தலைமையாக இருந்தவர் பசவராஜு கவர்ராஜு அவர்கள். பத்துப் பேர் ஒரே சமயத்தில் இறைவனடி சேர்ந்துவிட்டால் அப்பொழுது எத்தகைய கொந்தளிப்பு இருக்குமோ அத்தகைய நிலை இந்தக் கல்யாண நாளன்று அவர் வீட்டில் இருந்தது. மனைவி வீட்டாரும், தம் உறவினர்களும் ஒரேயடியாக அட்டகாசம் செய்து, அழுதுகொண்டும், சாபமிட்டுக் கொண்டும் போய்ச் சேர்ந்தனர்.

கவர்ராஜுவைப் போலவே விருந்தில் கலந்துகொண்டவர்களனைவரும் இத்தகைய சிரமங்களைத் தாங்கிக்கொண்டவர்கள்தாம். பலர் பிராயச்சித்தங்கள் செய்து, எங்களைவிட்டுப் பிரிய வேண்டியவர்களாயினர். இத்தகைய பயங்கரமான சமயத்தில் தைரியத்தை இழந்து விட்டதற்காக நான் அவர்களைக் குறைகூற மாட்டேன்.

இந்தக் குழப்பத்திற்கெல்லாம் மூலகர்த்தாவான என் உயிருக்குக் கூட ஆபத்து விளைவிக்கக் கருதினர் சில கொடியவர்கள். இருப்பினும் மாணவர்களும், காவல் நிலையத்தாரும் எனக்கு மெய்க் காப்பாளராக இருந்தமையால் எனக்கு எந்தவிதமான ஆபத்தும் நேரிடவில்லை. எங்களுக்கு அந்தக் காவல் துறையினரால் கிடைத்த உதவி இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது. குழப்பம் எதுவும் நடக்காமல் தடுப்பதற்காக எங்கள் வீட்டைச் சுற்றிக் காவல் நிலையத்தினர் அறுவது பேர் நின்று காவல் புரிந்தனர். மாவட்டப் போலீஸ் சூப்பிரன்டெண்டென்ட் அவர்களே இருந்து ஏற்பாடுகளைக் கவனித்து வந்தார். இணை (ஜாயின்ட்) மாஜிஸ்டிரேட் அவர்களும் தாமே பாதுகாப்பு ஒழுங்கினை மேற்பார்வையிட்டு வந்தார். அதனால் அன்றைய திருமணம் வெற்றியுடன் நடந்தேறியது.

முதல் திருமணம் குறையொன்றுமில்லாமல் நடந்த செய்தி எங்கள் மாவட்டம் முழுவதும் பரவவே தத்தம் விதவைப் பெண்களுக்குத் திருமணம் நடத்த எண்ணம் கொண்டவர் பலர் எங்கள் பட்டணத்திற்கு வரத் தொடங்கினர். அதனால், முதல் திருமணம் நடந்த நான்காவது நாளே இரண்டாவது திருமணம் நடைபெற்றது. இன்னமும் பல திருமணங்கள் நடைபெறுமென்று பலர் எதிர்பார்த்திருந்தனர். திருமணம் முடிந்த பின்னர் தம்பதியரை வாழ்த்தியும், எங்களைப் பாராட்டியும் நாலாப் பக்கத்திலிருந்தும் தந்திச் செய்திகளும் கடிதங்களும் வரத் தொடங்கின.

முதல் திருமணம் நடந்த நான்காவது நாள், 12 வயது இளம் விதவை ஒருத்தியை அழைத்துக்கொண்டு அவளுடைய தாயார் வந்து, தம் கணவர் அந்த இளம்பெண்ணைக் கல்யாணத்திற்கென என்னிடம் அனுப்பியதாகச் சொன்னார். நாங்கள் அவர்கள் பேச்சை நம்பி, நுழைவுத் தேர்வுக்குப் படித்துக்கொண்டிருந்த ஒரு மாணவரை வரவழைத்து, பெண் பார்க்கச் சொல்லி, அவர் ஒப்புக் கொண்ட பின்னர் மன்றலுக்கு ஏற்பாடுகள் செய்தோம். அவர் மங்கள ஸ்நானத்திற்காக உட்கார்ந்திருக்கும் பொழுது, இந்தச் செய்தி அவருடைய தந்தைக்கு எட்டி, அவர் புலம்பிக் கொண்டே ஓடோடி வந்து, மணமகனை இழுத்துக் கொண்டு போவதற்கு முயன்றார். எங்களைச் சேர்ந்தவர் சிலர் அவரைப் பிடித்து அழைத்துச் சென்று தாலி கட்டி முடிக்கும் வரைக்கும் ஆறுதல் கூறிச் சமாதானப்படுத்தி, மெதுவாக என்னிடம் அனுப்பி வைத்தனர். மறுநாள் இரவு ஊர்வலக் கோலாகலத்தில் ஹிந்துக்களிலே பெரிய மனிதர்கள் மட்டுமல்லாமல், மாவட்ட நீதிபதி, இணை மாஜிஸ்டிரேட்,

கல்லூரித் தலைவர் முதலான ஐரோப்பியர் பல்லக்குகளின் பக்கத்தில் நடந்து வந்தனர்.

இரண்டாவது மணமகளின் தந்தையாரின் அனுமதி யில்லாமலே தாயார் அழைத்து வந்து விட்டாரென்று எங்கள் எதிர்க்கட்சியினர் எப்படியோ தெரிந்து கொண்டு, அவரைக் கொண்டு எங்கள் மீது வழக்குத் தொடர்ந்து எங்களைத் தண்டிக்கும்படிச் செய்யவேண்டு மென்று முயன்றனர். அவர்களுடைய தீய முயற்சிகளை நாங்கள் தக்க காலத்திலேயே தெரிந்து கொண்டு, தாயார் மூலமாக உண்மை அறியப் பெற்று, மணமகளின் தாயாரை அனுப்பி அவர்தம் கணவரை வரவழைத்து, கோர்ட்டுக் கச்சேரி ஏறுவதிலிருந்து தப்பித்துக் கொண்டோம்.

இந்த விவகாரம் முடிந்த அடுத்த நாளிலிருந்து மூட மக்களின் தொல்லைகள் பெருகலாயின. இந்த நல்ல காரியங்களில் ஓரளவு பங்கேற்றவர்களில் வாடகை வீடுகளில் குடியிருந்தவர்களைக் காலி செய்யச் சொல்லி விரட்டி விட்டனர். கிணறுகளில் நீர் இறைக்க விடாமல் தடுத்தனர். வீட்டுக்கு நீர் கொண்டுவரும் பிராம்மணர் களைக் கொண்டு வராதபடி நிறுத்திவிட்டனர். நல்ல காரியங்களுக்குப் பிராம்மணர்களையும், புரோகிதர்களையும் வராதபடித் தடுத்தனர். உறவினர்களை அவர்கள் வீடுகளுக்குப் போகாதபடிச் செய்தனர். சற்றுத் துணிவுடன் நிலையாக நின்றவர்களில் சிலருக்கு எங்கள் வீட்டில் இடம் கொடுத்தேன். திருமணங்கள் நடந்த சில நாட்களில் சங்கராசார்ய சுவாமிகளிடமிருந்து 30 பேருக்குச் சாதிப்பிரஷ்ட அறிக்கைகள் கூட வந்தன.

இந்தத் தொல்லைகள் இப்படி இங்கிருக்க, பல்வேறு இடங்களி லிருந்து, உற்சாகப் படுத்தியும், பாராட்டியும் கடிதங்கள் வரத் தொடங்கின. சென்னையிலிருந்து பல நண்பர்கள் உடனே வரவேண்டு மென்றும், இந்தச் சூடு ஆறுவதற்கு முன்னுலேயே சில சொற்பொழிவுகள் நிகழ்த்தினுல் கட்டாயமாகச் சில திருமணங்கள் நடக்கு மென்றும் எனக்கு அழைப்பு அனுப்பினர். நல்லகொண்ட கோதண்டராமய்யா அவர்கள், சென்னை பார்க்க வேண்டுமென்ற ஆசை தமக்கிருப்பதாகவும், தம்மை அழைத்துச் சென்ருல் தாமே சமைத்துப் போடுவதாகவும் என்னைக் கேட்டுக்கொள்ள நானும் ஒப்புக்கொண்டேன்.

அச்சமயம் சென்னைப்பட்டணம் செல்வதற்குப் புகை வண்டியோ, இருப்புப் பாதையோ இல்லை. கால்வாய் வழியாகப் படகில் ஒருநாள் பயணம் செய்து காகிநாடா சேர்ந்து, அங்கிருந்து வாரத்திற் கொரு

முறை போகும் நீராவிப் படகுகளில் ஏறி இரண்டு நாட்கள் பயணம் செய்து சென்னை சேரவேண்டும். நீராவிப் படகு போக வேண்டிய டிசம்பர் 30 ஆம் தேதி யன்று காற்று மழை தொடங்கியது. அத்தகைய சமயத்தில் கடலில் பயணம் செய்யவேண்டா மென்று பைடா ராமகிருஷ்ணய்யா முதலானவர்கள் என்னைப் பலவாறு வேண்டிக் கொண்டனர். ஒரு முறை முடிவெடுத்த பிறகு, எடுத்த முடிவைக் கைவிடும் இயல்பு இல்லாதவனுதலால், பிடிவாதத்தோடு காற்று மழையிலேயே படகேறி, என் சகப்பிரயாணியோடு கடலில் ஐந்து மைல்கள் பயணம் செய்து நீராவிப் படகினருகில் சென்று சேர்ந்தேன். இருப்பினும் எங்கள் படகு நீராவிப் படகை நெருங்கி வருவது ஆபத்தானது என்றெண்ணி, நீராவிப் படகின் அதிகாரி எங்களை ஏற்றிக்கொள்ள மறுத்து விட்டதால், நாங்கள் இருவரும் தெப்பலாக நனைந்து, இரவு 8, 9 மணிக்குக் கரைக்கு வந்து சேர வேண்டி வந்தது

சுவாமி அவர்களனுப்பிய சாதிப்பிரஷ்ட அறிக்கைகள் பெரும் புலிகளைப் போல அச்சுறுத்தவே, அதுவரையில் முன் அடியெடுத்து வைத்தவர்களும் பின்வாங்கி, எங்கள் ஊக்கச் சொற்களுக்குச் செவி சாய்க்காமல் பழைய ஆசாரத்தில் மூழ்கியவர்களிடம் சென்று தஞ்சம் புகலாயினர். ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்கள் சுவாமிகள் மேல் வழக்குத் தொடர்ந்தாரே தவிர, அது தள்ளப்பட்டு விட்டது. முதல் திருமணம் முடித்து கொண்ட கோகுலபாட்டி ஸ்ரீராமுலு அவர்களை இந்த விஷயத்தில் துச்சமாக பேசினுர்களென்று சில பிரமுகர்கள் மேல், தர்பா வேங்கட சாஸ்திரி மானநஷ்ட வழக்கு தொடர்ந்து, அது தோற்று விட்டதால் பெரியவர்களுடன் விரோதம் மூண்டதே தவிர வேறு பயனில்லாமல் போய்விட்டது. எங்கள் எதிர்ப்பாளர்கள் வெற்றித் திமிர் கொண்டு எங்கள் கட்சியினரை மேலும் இழிவாகப் பேசி, கேலி செய்யத் தொடங்கினர்.

வழக்கு தள்ளப்பட்ட பின்னர் ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்கள் வைணவ மதத்தைச் சேர்ந்து பிராயச்சித்தம் செய்யப் போக, விதவையர் சார்பில் பணியாற்றியதற்காகவே பிராயச்சித்தம் செய்து கொண்டதாக எதிர்தரப்பினர் சொல்லிக் கொண்டனர். வைணவ மதத்தில் சேரவேண்டி வந்ததற்காகவே தாம் பிராயச்சித்தம் செய்து கொண்டதாகவும், தாம் முன்போலவே விதவைத் திருமண விஷயத்தில் அக்கறை காட்டப் போவதாகவும் அவர் விவேகவர்தனியில் கடிதம் எழுதினுர். ஆனுல் பிறகு கல்யாணங்கள் அத்தகைய மணங்கள் நடந்த பொழுதுமட்டும் வரவில்லை. இருந்

தாலும் கல்யாணத் தொடர்பான விஷயத்தில் அக்கறை காட்டிக் கொண்டுதான் இருந்தார்.

விதவை மறுவிவாக விஷயத்தில் காப்புத்தூண் என்று சொல்லக் கூடிய பைடா ராமகிருஷ்ணய்யா அவர்கள், விதவைத் திருமணக் கட்சியை விட்டுவிட்டு, பிராயச்சித்தம் செய்துகொள்ளப் போகிருர் என்று பேரளவில் வதந்தி பரவியது. அத்தகைய விபரீதம் நடக்காமலிருப்பதற்கென நான் எல்லா விதங்களிலும் முயற்சி செய்தேன். இந்த விஷயத்தைக் குறித்து எங்களுக்கு மிக மிக உதவியாக நின்ற, காகிநாடா சப் ஜட்ஜாக இருந்த கிருஷ்ணசுவாமிராவ் பந்த்துலு அவர்களுக்கு ஒரு கடிதம் எழுத அவரிடமிருந்து இவ்வாறு பதில் வந்தது :

'பைடா ராமகிருஷ்ணய்யா அவர்கள் ஆசார்யாரின் அதிகாரத்துக்கு அடிபணிவதற்குத் தம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டார். பைடா ராமகிருஷ்ணய்யா இதுவரையில் செய்தது போல இனி உதவி செய்யமாட்டார்.'

இத்தகைய இக்கட்டான காலங்களிலும் இரகசியமாக எங்களுக்குப் பல வகைகளிலும் துணை நின்றவர்கள் சிலர் இருந்தனர். அத்தகையவர்களில் தலையானவராய் இருந்த நியாபதி சுப்பாராவ் பந்த்துலு அவர்கள், எங்களுக்கு ஆரம்ப காலத்திலிருந்து ஆலோசனைகள் சொல்லிக் கொண்டு பலவகையிலும் உதவி செய்து வந்தார். அவர் ராமகிருஷ்ணய்யா அவர்களைப் பிராயச்சித்த கர்மத்திலிருந்து திரும்பும் தூதினை ஏற்று, காகிநாடாவிற்குச் சென்று அவருடன் பேசி, 'பிராயச்சித்தம் செய்து கொள்வதற்கு முன்னர் உங்களைப் பார்க்க வேண்டுமென்று நான் அவரிடம் உறுதி பெற்றுக் கொண்டேன்' என்று எழுதினுர்.

பந்த்துலு அவர்கள் எழுதியது போல ராமகிருஷ்ணய்யா பிராயச்சித்தம் செய்து கொள்வதற் கென்று ராஜமகேந்திரவரம் வந்து என்னைப் பார்த்தார். அவருக்கு நான் சொல்லவேண்டிய தெல்லாம் சொன்னேன். அவர் இனிமேல் திருமணங்கள் நடக்கா தென்றும், நடக்குமாஞல் தாம் உதவி செய்வதாகவும் சொன்ஞர். குறைந்தது ஒரு வருஷ காலம் பொறுத்துப் பார்க்க வேண்டுமென்றும், அதுவரை திருமணம் நடக்கும் அறிகுறிகள் தென்படவில்லை யெனில் பிராயச்சித்தம் செய்து கொள்ளலாமென்றும் நான் சொன்னேன். என் பேச்சைத் தவிர்க்க இயலாமல் பிராயச்சித்தம் செய்வதை நிறுத்தி வைப்பதாக என்னிடம் சொல்லி அவர் போய்விட்டார். அதன் பிறகு சில மாணவர்கள் வந்து, ராமகிருஷ்ணய்யா பிராயச்சித்தம்

செய்து கொள்ளப் போகிருரென்று சொன்ஞர்கள். நான் உடனே அவருடைய வீட்டுக்குச் சென்றேன். பிராயச்சித்தத்திற்காக எங்கள் எதிர்ப்புத் தலைவர்களும், சில வைதீகர்களும் ராமகிருஷ்ணய்யா அவர்களைச் சூழ்ந்திருந்தனர். ராமகிருஷ்ணய்யா அந்தத் தலைவர் களிடம் பேசி அனுப்பிவிட்டு, நான் எங்கள் வீட்டுக்குத் திரும்பிய பின்னர், படகேறிச் சென்று பொப்பர் லங்காவில் பிரயாச்சித்தம் செய்துகொண்டு வந்து, அன்றே காகிநாடாவிற்குப் போய்விட்டார். அதன் பிறகு ராமகிருஷ்ணய்யா மாதச் செலவுகளுக்கெனப் பணம் அனுப்புவதை நிறுத்திவிட்டார். நான் அந்த விஷயத்தை யாருக்கும் தெரிவிக்காமல், அவர் பணம் அனுப்பிக்கொண்டிருந்த காலத்தில் நடந்ததைப் போலவே பணியாட்களின் சம்பளம் முதலானவற்றைக் கொடுத்துக் காரியங்களை நடத்திக் கொண்டிருந் தேன்.

கோகுலபாட்டி ஸ்ரீராமுலு திருமணம் முடித்துக்கொண்டு விசாக பட்டிணம் சென்ற சில நாட்களிலேயே அவருக்கு இரத்தபேதி கண்டு, வரவர அதிகமாயிற்று. ஜனவரி மாதம் மூன்ருவது வாரத்தில் அவர், உயிருக்கு ஆபத்தான நிலையிலிருக்கிருரென்று நண்பர்கள் எனக்குக் கடித மெழுதித் தந்தியும் அனுப்பியிருந்தனர். அப்பொழுது எனக்கு ஏற்பட்ட மனவேதனை சொல்லி முடியாது. திருமணம் முடிந்த ஒரு மாதத்திற்குள்ளாகவே முதல் விதவை மணம் செய்து கொண்ட மனிதருக்கு ஏதாவது ஏற்பட்டு விட்டால் மக்கள் அதை இந்தத் திருமணத்தின் மேல் சுமத்திவிடுவர். அதன் பின்னர் யாரும் விதவையை மணம் செய்து கொள்ள மிகவும் தயங்குவர். அவர் விஷயத்தில் மிகவும் கவனம் செலுத்த வேண்டுமென்று பல நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதி, எங்கள் புரோகிதரை முதலில் அனுப்பி, பிறகு எங்களைச் சேர்ந்து எங்கள் வீட்டிலேயே இருந்து வந்த நட்ளகொண்ட கோதண்டராமய்யா அவர்களை அனுப்பி னேன். அவர் ஜனவரி 29 ஆம் நாள் விசாகப்பட்டணம் சேருவதற் குள்ளாக ராமுலுவின் நோய் கடவுள் அருளால் குணம் கண்டு, அவர் சுயநிலைக்கு வரத் தொடங்கிஞர்.

லக்ஷ்மீநரசிம்மம் அவர்களின் வழக்கு தோற்ற மறுநாள் சங்கரா சாரிய சுவாமிகளைப் பெரும் கோலாகலத்தோடு எங்கள் வீட்டு வாசலிலிருந்து புறப்பட்டு, இரவு நேரத்தில் ஆயிரம் விளக்குகள் புடை சூழ ராஜமகேந்திரவரத் தெருக்களில் ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். சுவாமிகள் ராஜமகேந்திரவரத்தை விட்டுப்போகாமல், நாள்தோறும் மேளதாளத்தோடு தெருக்களில் ஊர்வலமாகச்

சென்று, காணிக்கைகள் பெற்றுக் கொண்டு, சில மாதங்கள் தங்கியிருந்தார். சுவாமிகள் விதவைத் திருமணத்தை எந்த அளவு எதிர்த்து வந்தாலும், போலி பிரம்மசாரிகளான அவருடைய சீடர்கள் மாலைகள் அணிந்த வண்ணம் இரவு நேரங்களில், மந்திர உச்சரிப்பு இல்லாமலேயே கல்யாணங்களை இரகசியமாக நடத்திக் கொண்டே இருந்தனர். கல்லூரியிலிருந்த மாணவர்கள் சிலர் இந்த இரகசியத்தைத் துப்பறிந்து, ஓர் இரவு காத்திருந்து, ஒரு பிராம்மண விதவையுடன் குடித்தனம் நடத்திக்கொண்டிருந்த ஒரு பிரம்மசாரிச் சீடனைப் பிடித்துக் கொண்டு, அந்த அதிசயத் தம்பதியரைத் தெருவுக்கு இழுத்து வந்து, எல்லாருக்கும் காட்டி அவமானப் படுத்தினர். அதனால் சுவாமிகளின் சீடர்கள், மாணவர்களைப் பழி வாங்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தனர்.

இரண்டு நாட்கள் கடந்த பின்னர் நடுப்பகல் நேரத்தில் சுவாமிகளின் சீடர்கள் கோதாவரியில் குளித்துக்கொண்டிருக்கும்பொழுது மாணவர்கள் இருவர் அங்குக் குளிப்பதற்குச் சென்றனர். அவர்களைப் பார்த்த சீடர்கள் மாணவர்களனைவரையும் ஒரு மொத்தமாகத் திட்டவே, 'தவறு செய்தவர்களைத் திட்டவேண்டுமே தவிர, ஒரு மொத்தமாகச் சேர்த்துத் திட்டுவது நியாயமல்ல' என்று கண்டித்த மாணவனைக் கண்டபடி அடித்துப் போட்டனர். இரண்டாவது மாணவன் ஓடிச் சென்று இந்த விஷயத்தைப் பட்டணத்தில் சொல்ல, மாணவர்கள் பலர் ஒன்று திரண்டு, அந்தக் கொடிய சீடர்களைத் தண்டிக்க வேண்டுமென்று உறுதி யெடுத்துக்கொண்டு, கும்பலாகக் கூடி, சுவாமிகள் தங்கியிருந்த வீட்டின் முன்னர் திரியத் தொடங்கினர். அந்தச் சீடர்கள் பயந்துபோய்த் தெருவுக்கு வராமல், காவல் நிலையத்தினர் இருவரை வாயிலில் காவலுக்கு அமர்த்திக் கொண்டனர். சீடர்கள் நள்ளிரவு வரை வீட்டைவிட்டு வெளி வராததால் மாணவர்கள் வெறுப்படைந்து, அன்று தம் வீடுகளுக்குத் திரும்பினர். மறுநாள் காலையில் மாணவர்கள் வழக்கம் போல் கல்லூரிக்குச் சென்றனர். மாணவர்களின் சந்தடி தெரியாமற் போகவே சீடர்கள் தைரியம் கொண்டு, பொழுது மறைவதற்கு இரண்டு மூன்று மணியிருக்கையில், கோதாவரிக் கரையிலுள்ள மணல் மேட்டை நோக்கி நடந்தனர். இந்த விஷயத்தை ஒரு மாணவன் கண்டறிந்து மற்றவர்க்குச் செய்தி அனுப்பினன். அந்தச் சீடர்கள் மீளும்பொழுது, கோதாவரிக் கரையிலே இருந்த தானியக் கிடங்குகளை நெருங்கிக்கொண்டிருக்கையில், எதிரில் யமதூதுவரைப் போல் சில மாணவர்கள் தென்பட்டனர். குலை

நடுக்கம் கொண்ட சீடர்கள் நாலாப் பக்கத்திலும் பார்வையை ஓட விட, வெவ்வேறு பக்கத்திலிருந்தும் மாணவர்கள் கும்பல் கும்பலாக வருவதைக் கண்டனர். சீடர்கள் தப்பி ஓடுவதற்குத் தங்கள் கால் வலிமையைக் காட்டலாயினர். மாணவர்கள் அவர்களைப் பிடித்துக் கொண்டு செருப் பாயுதத்தைப் பயன்படுத்தி அவர்களுக்குப் புத்தி மதி சொல்லி, 'இனி என்றும் நாங்கள் உங்கள் தாசகர்கள்' என்று சொல்லுமாறு செய்து விட்டுவிட்டனர். முதலில் ஓட்டம் பிடித்தவர் களின் அவதியைப் பார்த்து பின்னுலிருந்தவர்கள் கோதாவரியி லிறங்கி, கழுத்தாழம் வரைக்கும் மூழ்கிப் போயினர். மாணவர்களில் சிலர் அவர்களைப் பின் தொடர்ந்து பிடித்துக்கொண்டு, நீரில் முக்கி வெளியே எடுத்து, அவர்கள் தலைகளைத் தெப்பலாக நனைத்து மகிழ்ந்து, தம் மாணவத் தோழனை அநியாயமாக அடித்ததற்கு வட்டியும் அசலுமாகத் தீர்த்துக் கொண்டனர்.

முதன் முதலில் அடி வாங்கிச் சென்ற இரண்டு சீடர்களும் ஓட்ட மாக ஓடிச் சுவாமிகளின் சந்நிதானத்தை அடைந்து, ஜகத்குருவின் சீடர்களுக்கு நேர்ந்த கஷ்டங்களை விண்ணப்பம் செய்துகொண்டு, காவல்துறையினரின் துணையுடன் மீண்டும் போர்க்களத்தை அடைந்தனர். அப்பொழுது அங்கு ஐந்நூறுக்கும் மேற்பட்ட மாண வர்கள் கூடியிருந்தனர். ஆற்றிலிருந்த மாணவர்கள் காவல் துறை யினரைப் பார்த்து, சீடர்களை விட்டுவிட்டு நீரில் மூழ்கி நீந்தி, மற்ருெரு துறைக்கு நீந்திக் கரையேறி வீடு சேர்ந்தனர். அந்தச் சீடர்களை உடனழைத்துக்கொண்டு காவல் துறையினர் சுவாமி களிடம் சேர்ந்தனர்.

அன்று இரவு, கல்லூரி மாணவர்கள் சுவாமிகளின் சீடர்களை உதைத்துக் கொன்றுவிட்டனரென்று பட்டணமெங்கும் வதந்தி பரவியது. அதனுல் விதவைத் திருமண எதிர்ப்பாளர்கள் தெருவில் தலைகாட்டுவதற்குத் துணி வில்லாமற் போய்விட்டனர். நான் அந்த நேரத்தில் சில்லென்ற காற்று வாங்குவதற்காகத் துறையில் ஒரு படகில் உட்கார்ந்திருந்ததால், பொழுது போய் வீடு திரும்பும் வரையில் எனக்கு இந்த விஷயமே தெரியாது. முதலில் எங்களைச் சேர்ந்திருந்து இப்பொழுது மகளிர் மறுமண எதிர்க் கட்சிக்குத் தலைவராக இருந்த ஒரு பிரபல குடும்பத்தவர், அந்த நேரத்தில் நான் அமர்ந்திருந்த இடத்திற்குச் சற்றுத் தொலைவிலேயே இருந்திருக்க, யாரோ இந்தச் சீடர்கள் விஷயத்தைக் காதில் போடவே பயந்து போய், தம் வேலையாள் கையிலிருந்த விளக்கை அணைத்துவிட்டு, முக்காடிட்டுத் தலைமறைவாக, ராஜபாட்டையை விட்டுச் சந்து

பொந்துகளில் சென்று வீடு சேர்ந்து திரும்பிப் பார்த்தார். சுவாமி களுக்குப் பக்கபலமாக இருந்தவர்களெவரும் அவருக்கு ஆறுதல் கூறுவதற்கு அன்று இரவு தரிசனத்துக்கு வராமல், உடனே ஊரை விட்டுப் போகவேண்டுமென்று ஜகத்குருவுக்குச் சொல்லி அனுப் பினர். மறுநாள் காலையில், மாணவர்கள் கல்லூரியிலிருந்து வருவ தற்கு முன்பே, சுவாமிகள் தம் பீடத்தை எங்கள் ஊரிலிருந்து கிளப்பி, நதியைக் கடந்து சென்று, காணிக்கைகள் செலுத்த முடியாமல் அவதிப்படும் எங்கள் நகரத்தினரைக் கடந்து வரும் படியாச் செய்துவிட்டார். சுவாமிகளுக்கு நேர்ந்த இந்த அவதியினுல் எங்கள் எதிர்தரப்பினர்ச் செருக்கு சற்று அழியவே, சிறிது காலம் அவர்கள் எங்களை அதிகமாகத் தொல்லைப் படுத்தாமலிருந்தனர்.

இங்கு நாங்கள் எங்கள் தொல்லைகளைப் பட்டுக்கொண்டிருக்க, சென்னைப்பட்டணத்தில் எங்கள் நண்பர்கள் பல்லெ செம்சலராவ் பந்த்தலு, திவான் பகதூர் ரகுநாத ராவ் ஆகியோர் எங்கள் கட்சியை வலுவாக்க வேண்டுமென்று பத்திரிகைகளில் அறிக்கைகள் வெளியிட்டதால், பெயர் பெற்றவர்கள் இருபது முப்பது பேர் எங்களுடன் சமபந்திச் சாப்பாடு கொள்வதற்குத் தயாராக இருப்ப தாகக் கடிதங்கள் எழுதினர். 'ஹிந்து' பத்திரிகையில் ஒவ்வொரு வாரமும் மூன்று நான்கு கடிதங்கள் வெளியிடப்பட்டன. அவற்றில் அதிக அளவின அவ்வளவாக ஊக்கம் அளிப்பனவாக இல்லை யென்ருலும், ஊக்கம் தருவதாக இருந்தவையே அப்பொழுது எங்கள் பணிக்குப் போதுமானவையாகக் காட்சியளித்தன.

எங்களுடன் சமபந்தி விருந்திற்கு ஏற்பாடு செய்து எங்களை உற்சாகப்படுத்துவதற்கே செம்சலராவ் பந்த்துலு எங்களை அங்கு வரச்சொல்லி அழைத்தார். நான் அந்த அழைப்பை ஏற்று, ஈஸ்ட்டர் (பெருவெள்ளி) விடுமுறையில் அங்குச் செல்ல நிச்சயித்து அவருக்குத் தெரிவித்தேன். மார்ச்சு 12ஆம் தேதி மயிலாப்பூரிலிருந்து அவர் இவ்வாறு எழுதினுர்: 'ரகுநாத ராவ் ஏப்ரல் 30 வரையில், உங்கள் பயணத்தை நிறுத்தி வைக்கும்படிக் கேட்டுக்கொள்ளுமாறு என்னி டம் கூறினுர். இருந்தாலும் நீங்கள் உடனே வரவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டிருந்தால் நான் உங்களை என் வீட்டிலாவது இருத்திக்கொள்வேன்; இல்லையெனில் ஒரு தனி வீடாவது அமர்த்தி வைப்பேன்.'

எங்களுக்கு அப்பொழுது கோடை விடுமுறை தொடங்குமாதலால், சிலகாலம் தங்கியிருந்து சொற்பொழிவுகள் நிகழ்த்தலாமெனவே, 1881 மே மாதத்தில் போவதே நல்லதென்று நினைத்தேன். முதல்

மணமக்களையும், என் மனைவியையும், சமையலுக்கு ஒரு பிராம்மணனையும் உடனழைத்துக்கொண்டு, விசாகபுரியில் நீராவிப் படகேறி, நான்காவது நாளில் சென்னைப்பட்டணம் சேர்ந்தேன். செம்சலராவ் பந்த்துலு அவர்கள் எங்களை, மயிலாப்பூரில் கச்சாபிகேஸ்வரர் கோயிலுக்கருகில், எங்களுக்கென்று அமர்த்தப்பட்ட வசதியான வீட்டில் குடி வைத்தார். பந்த்துலு அவர்கள் அனுப்பிய குதிரை வண்டியில் சென்று சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தேன். ஒருமுறை வண்ணாரப்பேட்டையில் சொற்பொழிவு நிகழ்த்தும்பொழுது, முரட்டு வைணவர்கள் சிலர் என்னைச் சுற்றிக்கொண்டு என்னை நொறுக்கி விடப் பார்த்தனர். ஆனால் என் நண்பரான பனப்பாக்கம் அனந்தாசார்யுலு அவர்கள் என்னை அங்கிருந்து தப்பிக்க வைத்துத் தம் வண்டியில் ஏற்றிக்கொண்டு தொலைவில் கொண்டுபோய் விட்டார்.

இன்னொரு முறை பெத்துநாயக்கன் பேட்டையில் (Black Town) சொற்பொழிவு நிகழ்த்தும்பொழுது பண்டிதர்கள் அநேகர் சேர்ந்து சொற்பொழிவின் முடிவில், விதவை மறுமணம் செய்துகொண்டால் அவளுடைய முதற் கணவனின் சிரார்த்தத்தை யார் செய்வார்களென்றும், இது போன்ற பல கேள்விகளையும் எழுப்பினர். நான் அவற்றிற்கெல்லாம் சாத்திர பூர்வகமான பதில்களைச் சொன்னேன். இந்த வகையில் என்னைத் தோற்கடிக்க முடியாமல், 'உங்களுக்குச் சாத்திரங்களில் நம்பிக்கையிருக்கிறதா?' என்று கேள்வி கேட்டனர். 'இல்லை, ஆத்மாவினை பாதுகாப்பிற்காகவும், சாத்திர நம்பிக்கையுள்ளவர்களை முன்னிட்டும் நான் சாத்திர மேற்கோள்களைக் காட்டுகிறேன்.' என்று சொன்னேன். இந்தக் கூட்டங்களுக்கு முன்னால் ஆண்டர்சன் மண்டபத்தில் விதவாவிவாகம் குறித்துச் சொற்பொழிவு நிகழ்த்த ஏற்பாடு செய்யப்பட்டது. சாத்திர மேற்கோள்களைக் காகிதத்தில் எழுதிக்கொண்டு செம்சலராவ் பந்த்துலு அவர்களின் வண்டியில் அவருடன் புறப்பட்டேன். அது, முதல் சொற்பொழிவாதலால் விதவைத் திருமணம் குறித்து மக்களுக்குத் தவறான எண்ணத்தை உண்டாக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் பண்டிதர்கள் ஏதேதோ எழுதி, பெரிய காகிதங்களில் அச்சடித்துப் பட்டணம் முழுவதும் வழங்கியிருந்தனர். நாங்கள் வண்டியில் போகும்பொழுது யாரோ ஆள், ஒரு காகிதத்தை வண்டியில் வீசியெறிந்தான். நான் அதைப் படிக்கத் தொடங்கினேன். அதில் தேவடியா மகன்கள், முண்டைகள் என்ற சொற்களையும், கண்டபடித்

திட்டும் வசைமொழிகளையும் தவிர சாத்திர மேற்கோள்கள் எதுவுமே காணப்படவில்லை.

கிறித்துவக் கல்லூரியைச் சார்ந்த ஆண்டர்சன் மண்டபத்தை, அடைந்தபொழுது நான் அந்தக் காகிதத்தைப் படித்து முடித்திருந் தேன். கோபாவேசத்தினால் என் இரத்தம் கொதித்து என் மனம் என் வசமில்லாமல் கொந்தளிக்கத் தொடங்கியது. இரண்டு மணி நேரம் வாய்க்கு வந்தபடி ஏதேதோ பேசினேன். பலமுறை கரகோஷம் மண்டபம் முழுவதும் எதிரொலித்து வந்தது. நான் நிகழ்த்திய சொற்பொழிவில், படித்தவர்கள் மெச்சத் தக்க சாத்திர அம்சங்களோ, கொள்கை விளக்கங்களோ எதுவும் இல்லை. பாமர மக்கள் விரும்பக் கூடிய பரிகாச வாக்கியங்களே சிறப்பாக அமைந் திருந்தன. இருந்தாலும், என் சொற்பொழிவுகளைக் கேட்டு வந்த அனைவரும் இதுவே இதயத்தைக் கவர்ந்ததாக இருந்ததென்று கூறினர்.

நாங்கள் சொற்போர்களில் கலந்துகொண்டிருந்த காலத்தில் பூணூல் அணிவிழாவிற்கெனச் சொந்த கிராமத்திற்குச் சென்ற திவான் பகதூர் ரகுநாத ராவ் சென்னை மீண்டார். அவரும் செம்சல ராவ் பந்த்துலுவும் கலந்துபேசி ஏற்கனவே சமபந்தி விருந்தில் பங்கு கொள்வதாக வீர முழக்கமிட்டிருந்த சீர்திருத்தப் பித்தர்கள் அனை வருக்கும், குறிப்பிட்ட நாளில் சீர்திருத்த விருந்திற்கு வந்தருள வேண்டுமென்று பல நாட்களுக்கு முன்னரே அழைப்பிதழ்கள் அனுப்பியிருந்தனர். அவற்றிற்கு பதிலெழுதவே பலருக்கு நேரம் கிடைக்கவில்லை. பலர் தவிர்க்க முடியாத காரணங்களால் வர இயலாமைக்கு மன்னிப்புக் கோரி எழுதினர். சப் ஜட்ஜாக இருந்த கணபதய்யா அவர்கள் ஒருவர் மட்டும் தம்மால் வர இயலும் என்று எழுதியிருந்தார். அப்பொழுது ரகுநாத ராவ் அவர்களும், நண்பர் களும் நடக்க வேண்டியதை ஆலோசித்து, ஸ்ரீ பார்த்தசாரதி கோயிலிலிருந்து பிரசாதத்தை வரவழைத்து, எங்களுடன் விருந்துண் டனர். அந்த விருந்துக்கு வந்தவர்கள், திருமணத் தம்பதியர் தவிர, ரகுநாத ராவ், செம்சல ராவ் பந்த்தலு, கணபதய்யா, தம்பூரி நரசய்யா, நுன்னவ புச்சய்யா பந்த்துலு ஆகியவர்களும், நானும் ஆக எண்ம ராவோம். விருந்து முடிந்த பின்னர் செம்சலராவ் பத்த்துலு எங்கள் அனைவருக்கும் விலையுயர்ந்த ஆடை அணிவித்து, பயணச் செலவுக் கென்று நூறு ரூபாய் ரொக்கம் கொடுத்து வழியனுப்ப, ஜூன் மாத இடையில் நலமாக மீண்டும் ராஜமகேந்திரவரம் வந்து சேர்ந்தோம்.

இப்பொழுது எங்கள் சங்கத்திற்கு நிதி வசதியில்லை, மாதச் சந்தா கிடையாது. காஞ்சி கிருஷ்ணசாமி ராவ் பந்த்தலுவிடம் முறையிடவே அவர் கருணை கொண்டு, ராமகிருஷ்ணய்யா அவர்களை ஊக்குவித்து, திவான்பகதூர் ரகுநாத ராவ், பல்லெ செம்சல ராவ் பந்த்துலு ஆகிய இருவரையும் டிரஸ்டிகளாக அமர்த்தி ஜூன் மாத இறுதியில் ரூபாய் பத்தாயிரத்தைச் சென்னைக்கு அனுப்புமாறு செய்தார். இந்த விஷயத்தில் எங்களுக்குக் கிருஷ்ணசுவாமி ராவ் பந்த்துலு செய்த பேருதவியை நாங்கள் எப்பொழுதும் மறக்க இயலாது.

இந்த ரூபாய் பத்தாயிரத்தை அனுப்பும் காலத்தில் மீண்டும் திருமணங்கள் நடைபெறும் என்ற நம்பிக்கை ராமகிருஷ்ணய்யாவுக்கு எள்ளளவும் கிடையாது. இருந்தாலும் செம்சல ராவ், ரகுநாத ராவ் ஆகியோருக்கு எழுதிய கடிதத்தில், இரண்டு ஆண்டுகள் வரைத் திருமணங்கள் நடக்கவில்லையெனில் தம் பணத்தைத் தமக்கு அனுப்பிவிட வேண்டுமென்றும், திருமணங்கள் நடக்குமானால் சென்னைச் சங்கத்தினர் இரண்டு திருமணங்களுக்கு ரூபாய் இரண் டாயிரம் செலவிட்டுக்கொள்ளலாமென்றும், திருமணம் ஒவ்வொன்றுக் கும் ரூபாய் ஆயிரம் வீதம் எனக்கு அனுப்பிக்கொண்டிருக்க வேண்டு மென்றும், செலவுக்காகக் கடந்த ஜூன் மாத முதல், மாதத்திற்கு ரூபாய் எழுபத்தைந்து வீதம் எனக்கு அனுப்பிக்கொண்டிருக்க வேண்டுமென்றும் எழுதினர்.

நாங்கள் எவ்வளவோ தெம்புடனும், உற்சாகத்துடனும் பணி யாற்றத் தொடங்கினலும் முதலில் எங்கள் முயற்சி வெற்றி யடை வதாகத் தெரியவில்லை. அதற்கு முன்பு தம் விதவைக் கன்னி யருக்கு மணம் நடத்த வேண்டுமென்று எங்களை வேண்டிக் கொண் டவர்களிடம் சென்று, நாங்களே வருந்திச் சொல்ல, அவர்கள் எங்கள் மீது சினந்து, முறையற்ற சொற்பொழிவுகள் நிகழ்த்தியதற்காக எங்களைத் திட்டத் தொடங்கினர். இன்னும் சிலர் எங்களைத் தங்கள் வீட்டிற்குள்ளேயே அனுமதிக்க மறுத்தனர்.

பெத்திபட்ல யக்ஞன்ன என்பவரும், தொடக்கப் பள்ளியில் ஆசிரிய ராகப் பணியாற்றிவந்த தாடூரி ராமாராவ் என்பவரும் ராஜமகேந்திர வரம் வந்து என்னிடம் பேசினர். முதலாமவர் தம் தங்கையரை வைதிக வரன்களுக்குக் கொடுத்து மணமுடிக்கவும், இரண்டாமவர் மாத்வ விதவையை மணமுடிப்பதற்கும் ஒப்புக் கொண்டனர். எங்கள் கல்லூரி மாணவன் ஒருவன் வைதிக வரனுகத் தயாராக இருந்தான். மாத்வ விதவையும் கிடைக்கும் போலவே இருந்தது. மாத்வ குடும்

பத்தா ரொருவர்-உம்மெத்தால வேங்கடபதிராவ் என்பவர், 1882 ஜூன் 24 ஆம் தேதி எனக்கு இப்படி ஒரு கடிதம் எழுதினர் :

'என் மகளான சனகவரபு லக்ஷ்மீயம்மாவின் கணவன் இறந்து விட்டான். சுமார் பதினுறு வயதாகியுள்ளது. எங்கள் மதத்தைச் சேர்ந்த இளைஞனொருவன் இதற்கு ஒப்புக் கொண்டால், எனக்குச் செலவில்லாமல் மேற்படி லக்ஷ்மீபாயம்மாவைத் திருமணம் நடத்தி வைப்பதாக இருந்தால் எனக்கு மிகவும் மகிழ்ச்சிதான்.'

காரியம் நிறைவேறும் தறுவாயில் உறவினர்களுக்குத் தெரியவந்த தால், வேங்கடபதிராவ், யக்ஞன்ன ஆகிய இருவரும் பயந்து பின் வாங்கினர். வேங்கடபதிராவ் அவர்களின் மகளும், யக்ஞன்ன அவர்களின் தங்கையரும் எனக்கு அதற்கு முன்பே கடிதங்கள் எழுதி யிருந்தனர். எனவே, அந்த இளம் விதவையருடன் கடிதத் தொடர்பு கொண்டு, காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்று முடிவுசெய்து கொண்டேன். ஒரு பெண் பெத்தாபுரத்திலே இருந் தாள். இன்னெரு பெண் காகிநாடாவில் இருந்தாள். அவர்கள் பேருக்கே கடித மெழுதினுல் இரகசியம் அம்பலமாகிக், காரியம் கெடுவது திண்ணம். இரகசியமாகப் பணியாற்ற, விதவை மண விஷயத்தில் சீர்திருத்த ஆர்வம் கொண்டவர்களான, செயல் திறனு முள்ள நண்பர்கள், பெத்தாபுரத்தில் ஒருவரும், காகிநாடாவில் ஒருவரும் தேவைப் பட்டனர். எங்களுக்கு மிகமிக நெருங்கியவரான கும்மடிதல மனேகரம் அவர்கள், பெத்தாபுரத்தில் போலீஸ் இன்ஸ் பெக்டராகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். கவர்ராஜு அவர்கள் சென்னைக்குப் போக வேண்டிய அவசியம் ஏற்படவே, காகிநாடா வில் வேலையைப் பார்க்கும் பொறுப்பை அவரிடம் விட்டேன்.

1882 ஆகஸ்டு 24 ஆம் தேதி, காகிநாடாவி லிருந்து அவர் இவ்வாறு எழுதினர் : 'லச்சிராஜு ராமாராவ் ஆகியோரைப் பார்த் தேன். தன்னைத் தன் இனத்தவர் யாருக்கேனும் கட்டிக் கொடுக்கு மாறு விருப்பம் தெரிவித்து அந்தப் பெண் உங்கள் பேருக்கு எழுதிய கடிதம் அவரிடம் இருக்கிறது. திருமணத்தை இந்த மாதத்தில் நடத்தி விடலாம் என்று நான் நினைக்கிறேன். நாளையாவது, அடுத்த சனிக்கிழமையாவது உங்களிடம் போக வேண்டுமென்று மணமக னிடம் சொன்னேன். மீண்டும் ஒரு மணம் நடந்துவிட்டால் மேலும் சில நடக்குமென்ற நம்பிக்கை யுள்ளது. மிகவும் சிரமப்படுகிறீர்கள் ; ஆதலால் மூளைக்கு அதிகமாகத் தொல்லை கொடுக்க வேண்டாம். இந்தப் புத்தகத்தை அந்தப் புத்தகத்தை மொழிபெயர்க்க வேண்டு மென்ற எண்ணத்தைச் சில காலத்திற்கேனும் தள்ளி வைக்கவும்.

வேறு யாரையாவது விவேகவர்தனியைப் பார்த்துக் கொள்ளச் சொல்லவும். '

என் நண்பர் எழுதியது போல நான் உடல் நலம் குன்றி யிருந்ததும், மிகவும் துன்பப் பட்டதும் உண்மையே என்றாலும், செயல் புரியும் உற்சாகமே என் மூலம் பல காரியங்களை நிறைவேற்ற உதவியது. விதவை மறுமண முயற்சிகள் ஒரு பக்கத்தி லிருக்க, நான் சில புதிய நூல்களை எழுதி வந்தேன். விவேகவர்தனியையும் நடத்தி வந்தேன்.

கலைக் கல்லூரி மாணவர்கள் சந்தா போட்டுக் கொண்டு, புத்தகங்கள் பலகைகள் வாங்கி, பகலெல்லாம் பாடுபட்டு வரும் ஏழைகளின் கல்வி முன்னேற்றத்திற்கென ஒரு பள்ளிக்கூடத்தில் இராப் பள்ளி வைத்துப் பாடுபட்டுக்கொண்டிருக்கும் பொழுது, அந்தப் பள்ளிக்கூடத் தலைவர், இராப்பள்ளி தமதே என்று சொல்லிப் புத்தகங்கள் முதலானவற்றைத் தமக்கு உரிமையாக்கிக் கொண்டார். என் நண்பர்கள் முதலானவர்களிடம் சந்தா திரட்டச் செய்து, மாணவர்கள் வேறோர் இடத்தில் இராப் பள்ளி நடத்துவதற்கு ஏற்பாடு செய்தேன்.

மனோகரம் பந்த்துலு அவர்களின் தம்பி கும்மடிதல சாம்பசிவராவ் அவர்கள் ராஜமகேந்திரவரத்திலிருந்து அடிக்கடித் தந்தையாரிடம் சென்றுவந்து, என் கடிதங்களை அந்தப் பெண்ணுக்குக் கொடுக்கவும், அந்தப் பெண்ணின் கடிதங்களை எனக்குக் கிடைக்கச் செய்யவும் மிகவும் உதவியாக இருந்தார். இவர்தான் ஒருமுறை அந்தப் பெண்ணைச் சாமர்லகோட்டையி லிருந்து படகி லேற்றி அழைத்துக் கொண்டுவர ஏற்பாடு செய்தார். ஆனால் அந்த முயற்சி வெற்றிபெற வில்லை. பிறகு அந்தப் பெண்ணே தன்னை அழைத்துச் செல்வதற்குப் பல வழிகளை அறிவுறுத்தினாள். அவள் சொன்ன ஒரு வழியை ஒட்டிப் பல்லக்கு ஒன்றினை அமர்த்தி, இரண்டு பணியாட்களை உடனனுப்பி, எங்கள் நண்பரான நல்லகொண்ட கோதண்டராமய்யாவை, மனோகரத்துக்கு எழுதித் தந்த கடிதத்துடன், பல்லக்கில் பெத்தாபுரம் அனுப்பி, அந்தப் பெண்ணை இரவு நேரத்தில் குறிப்பிட்ட ஓரிடத்தில் சந்தித்து, பல்லக்கில் ஏற்றிக் கொண்டு, விடிவதற்குள் எங்கள் வீட்டில் கொண்டுவிடுவதற்கான எல்லா ஏற்பாடுகளும் செய்தோம். இந்த விஷயம் எப்படியோ அந்தப் பெண்ணின் உறவினர்களுக்கு முன்னரே தெரியவே, அவர்கள் எச்சரிக்கையாக இருந்ததாலும், அங்குச் சென்ற எங்கள்

ஆட்களின் திறமையின்மையாலும் அவர்கள் போன வழியிலேயே வெறும் கையோடு திரும்பி வரவேண்டியவர்க ளாயினர்.

இதனுல் நாங்கள் வேருெரு வழியைச் சிந்தித்து மிகவும் திறமை மிக்கவருன, எங்கள் அச்சகத்தில் வேலை பார்த்துவந்த முனி சாமியைப் பெத்தாபுரத்திற்கு அனுப்பினேம். அவர் வழிப்போக் கனைப் போல நடித்து, இரவு அவர்கள் வீட்டுத் திண்ணையிலேயே படுத்திருந்து, தான் கொண்டு சென்ற செய்தியை அந்தப் பெண் ணுக்குத் தெரிவித்து, மிகத் திறமையுடன் காரியத்தைக் கவனிக்க லானுர். அமாவாசை இரவு இரண்டாம் ஜாமத்திற்குப் பிறகு மேகம் சூழ்ந்து தூற்றல் விழுந்துகொண் டிருக்கும்பொழுது, தாயார் முதலான வர்களை ஏமாற்றித் தெருவுக்கு வந்து அந்தப் பெண், எங்கள் ஆளிடம் தான் வருவதற்குத் தயாராக இருக்கும் செய்தியைச் சொன்னுள். அவர் உடனே அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு கும்மிருட்டில் மழையில் நனைந்தபடி சிறிது தொலைவு ஓடியும், சில தூரம் அந்தப் பெண்ணை நடத்தியும், சிறிது நேரம் சுமந்தபடியும், பொழுது விடிவதற்குள் இரண்டு காததூரம் கடந்து, அங்கு வண்டி அமர்த்திக்கொண்டு, மறுநாள் நடுப்பகலுக்குள் எங்கள் வீட்டில் சேர்த்துவிட்டார்.

அந்தப் பெண் வீட்டை விட்டுப் புறப்பட்ட நான்கைந்து நிமிடங் களில் தாயார் முதலானவர்கள் அவள் வெளியேறிய செய்தியை அறிந்து, எல்லா வழிகளிலும் தேடி, எங்கேயும் காணுமல், வழக்கறி ஞர்களைக் கலந்தாலோசித்து, தம் நகைகளை எடுத்துக் கொண்டு ஓடி விட்டாளென்று திருட்டுப் பட்டத்தைச் சூட்டிப் போலீசாரிடம் புகார் செய்து, அவளைப் பிடித்துக் கொண்டு வருவதற்கு அன்றிரவே வாரண்ட்டு பிறப்பித்தனர். வாரண்ட்டை எடுத்துக்கொண்டு போகும் பணியாள் முதலில் காகிநாடாவுக்குச் சென்று, நான்கைந்து நாட்கள் அங்கிருந்து, ராமகிருஷ்ணய்யாவின் வீடுகளில் அந்தப் பெண் ஒளித்து வைக்கப்பட்டிருக்கிருளா என்று விசாரித்து, அங்கு இல்லை யென்று நிச்சயமாகத் தெரிந்த பின்னர் ராஜமகேந்திர வரத்திற்குப் போக வேண்டுமென்று சொல்லிவிட்டு இரகசியமாக எனக்கு அன்றே செய்தியைத் தெரிவிப்பதற்கு ஆள் அனுப்பி விட்டார்.

அந்த விஷயம் தெரியவந்த உடனே, வாரண்ட்டிலிருந்து விடுவிப் பதற்கு நான் போலீஸ் சூப்பரின்டண்டென்ட் அலுவலகத்திற்குப் போக, அவர் காகிநாடா போனதாகத் தெரிந்தது. வீட்டுக்கு வந்து அந்தப் பெண்ணைச் சாக்கிரதைப்படுத்திவிட்டு, போலீஸ் இன்ஸ்

பெக்டரைக் கலந்துகொண்டு, நான் மீண்டு வரும்வரையில் வாரண்ட்டின் மீது அந்தப் பெண்ணைப் பிடிக்காமலிருக்க ஏற்பாடு செய்தானதும், மறுநாள் பிற்பகல் காகிநாடா சேர்ந்து, சாமர்ல கோட்டைக்குப் போக இருந்த துரையவர்களைக் கால்வாயில், படகில் சந்தித்து விண்ணப்பித்துக் கொண்டேன். அந்தப் பெண்ணைப் பிடிக்காமலிருக்கப் போலீஸ் அதிகாரிகளுக்கு உத்திரவு அனுப்பு வதாகச் சொல்லி எனக்கு விடை கொடுத்தார்.

நான் அவரிடமிருந்து நேராக ஹிந்துக் கல்லூரிக்குச் சென்று அங்கு ஆசிரியராக இருந்த மணமகனைப் பார்த்து, என்னுடன் வருமாறு அழைக்க அவர், இந்த வழக்கைப் பற்றிக் கேள்விப்பட்ட தாலும், பயத்தினாலும் என்னுடன் வராமலிருக்கச் சில சாக்குகளைச் சொல்லத் தொடங்கினார். நான் எல்லாவற்றுக்கும் தக்க சமாதானங் கள் சொல்லி, அவரை வலுக்கட்டாயமாகப் படகருகில் அழைத்துச் சென்று என் அறையில் உட்காரவைத்துக் கொண்டேன். என் பேச்சைத் தட்டிவிட முடியாமல் அவர் என்னுடன் வந்து, மறுநாள் பொழுது விடிந்த பிறகு மேடபாடு அருகில் படகிலிருந்து இறங்கி வந்த வழியே ஓட்டம் பிடித்தார். நான் மட்டும் ராஜமகேந்திரவரம் சேர்ந்து காகிநாடாவிலிருந்த நண்பர்களுக்குத் தந்தி கொடுத்து, மணமகனை மீண்டும் அனுப்புவது பற்றிக் கடிதங்களும் எழுதினேன்.

மணமகள்மேல் குற்றச்சாட்டு, அவள் திருமணம் செய்துகொள்ள இருப்பதால் தோன்றிய வெறுப்பில் விளைந்ததென்று காணப் படுவதால் அவளைப் பிடிக்க வேண்டாமென்று போலீஸ் அதிகாரி களுக்குச் சூப்பிரன்டண்டென்ட்டிடமிருந்து உத்திரவு வந்தது. நான் அரசாங்க டாக்டரை எங்கள் வீட்டுக்கு வரவழைத்து, மணமகளைப் பரீட்சிக்கச் சொல்லி, மணமகள் 16 ஆண்டுகள் கடந்தவளென்று சர்டிபிகேட் வாங்கிக் கொண்டேன். 1882 அக்டோபர் 22ஆம் நாள், மிகவும் கஷ்டத்துக்கிடையில் கடவுள் கிருபையில், மூன்றாவது விதவை மணத்தை நடத்திவிட முடிந்தது. இந்த மணத்திற்கு நாங்கள் முதல் மணத்தைவிடப் பத்து மடங்கு அதிகமாகக் கஷ்டப்பட வேண்டியிருந்தது. பெருமளவில் பொருட் செலவு செய்து இந்த மணத்தை முதலாவதைக் காட்டிலும் மிக விமரிசையாக நடத்தினோம். இந்த மணத்துடன் எதிர்க்கட்சி யினரின் கர்வம் பாதி அடங்கியது. இருந்தாலும் பின்னர் நடை பெற்ற நான்காவது மணத்துடன்தான் அவர்களுடைய கர்வம் முற்றிலும் அழிந்து பட்டது.

அக்டோபர் 24 ஆம் தேதியன்று கல்கத்தாவிலிருந்து ஈசுவர சந்திர வித்தியாசாகரர் இவ்வாறு எழுதியிருந்தார் :

அன்பார்ந்த ஐயா, உங்கள் பகுதியில் நிறைவேறிய மூன்ருவது பிராம்மண விதவை மணத்தைப் பற்றிய செய்தி தெரிவித்தமைக்கு நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த மகிழ்ச்சி யான செய்தி யறிந்து இங்குள்ள ஒறிந்து விதவைத் திருமண அன்பர்கள் மட்டற்ற குதூகலம் கொண்டுள்ளனர். துயரத்திற் குள்ளான அபலைகளின் சார்பில் தாங்கள் எடுக்கும் கருணை மலிந்த முயற்சிகள் சீரான வெற்றி பெறவேண்டுமென இறைஞ்சும்,

தங்கள் அன்பன்,

**ஈசுவர சந்திர சர்மா.**

காகிநாடாவிலிருந்த இளம்விதவையும் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று பெரிதும் ஆசைகொண்டிருந்தாள். அந்த இளம் பெண்ணின் எதிர் வீட்டில், தஞ்சாவூர் சலபதிராவ் எனும் ஒரு பெரியவர் குடியிருந்தார். அவர் விதவைத் திருமண விஷயத்தில் மிகவும் ஈடுபாடு கொண்டவர் ஆதலால், அந்தப் பெண் தம் வீட்டுக்குத் தனியாக வந்தபொழுது திருமணத்தைப் பற்றி அவர் சொல்ல அவளும் தன் விருப்பத்தைத் தெரிவித்திருந்தாள். அந்தப் பெண் விஷயத்தில் பணியாற்ற வேண்டுமென்று இவரைத்தான் நாங்கள் கேட்டுக்கொண்டோம்.

அந்தப் பெண் ஒருநாள் விடியற்காலையில் தனியாக அவரைச் சந்தித்து, அன்றிரவு கல்யாண வீட்டார் தம் தெருவிலிருந்து ஊர்வல மாகப் புறப்படும்பொழுது தான் வெளியேறுவதற்கு வாய்ப்புக் கிட்டு மென்றும், அப்பொழுது தன்னை அழைத்துச் செல்ல ஏற்பாடுகள் செய்ய முடியுமாஞல் ராஜமகேந்திரவரம் போவதாகவும் சொன்ளுள். அவர் அப்பொழுது மூன்ருவது (விதவை) மணம் செய்துகொண்ட என் நண்பனுடன் கலந்தாலோசித்து, பல்லக்குச் சுமக்கும் பணியாட் களைத் தயார்ப்படுத்தி, பல்லக்குவரை அழைத்துச் செல்ல அமர்த்திய ஆளை முன்னரே அந்தப் பெண்ணுக்குக் காட்டிஞர்.

அன்றிரவு 9 மணிக்கு, ஓரிடத்தில் அற்புதமான மந்திர வித்தைக் காட்டப்படுமென்று அறிக்கைகள் வரவே, சலபதிராவ் அந்தப் பெண்ணின் அண்ணன், தாய் மாமன் ஆகியோரை அந்தக் காட்சியைக் கண்டுவருமாறு தூண்டிவிட்டார். இரவு சுமார் 10 மணி அளவில் கல்யாண ஊர்வலம் அவர்கள் வீட்டு முன்ஞலிருந்து புறப்பட்டது. அமர்த்தப்பட்ட ஆள் கல்யாணப் பல்லக்கின் பின்ஞல் நடந்துகொண்டிருந்தார். கல்யாணப் பல்லக்கு தம் வீட்டு

முன்னால் வரவே உள்ளிருந்தவர்களெல்லாம் வீட்டு வாயிலில் வந்து நின்று தாசியரின் நாட்டியத்திலும், இசையிலும் மெய்ம்மறந்திருந் தனர். அப்பொழுது அந்தச் சந்தடியில் பெண் வெளிவந்து, தன் வருகைக்காக எதிர்பார்த்திருந்த ஆள் பின்னால் நடந்து, பல்லக்கில் ஏறிக்கொண்டாள். உடனே பல்லக்குச் சுமப்பவர்கள் அந்தப் பெண்ணைச் சுமந்துகொண்டு புறப்பட்டனர். விடியற்காலையில் பல்லக்கு வந்து எங்கள் வாயிற்படியில் நிற்கவே நாங்கள் அந்தப் பெண்ணை உள்ளே அழைத்துச்சென்று பாதுகாப்பான இடத்தில் இருத்தினோம்.

அந்தப் பெண்ணின் தாய்மாமன்கள் அன்றிரவே, அந்தப் பெண் ராஜமகேந்திரவரம் போனாளென்று முடிவுசெய்து, இங்குத் தாசில் தாராக இருந்த தம் உறவினர்க்கும், போலீசாருக்கும் தந்தி அனுப் பினர். ஆனால் யாரும் ஆபத்தைத் தேடிக் கொள்ளாமல் பேசாம லிருந்தனர். அந்தப் பெண்ணின் அண்ணனும், தாயும், தாய் மாமன்களில் ஒருவரும் மூன்றாவது நாள் பிற்பகல், எங்கள் வீட்டுக்கு வந்தனர். தாயார் அமுதவண்ணம், மகளைத் தன்னுடன் வீட்டுக்கு வரச்சொல்லி வேண்டிக்கொண்டாரெனினும், அந்தப் பெண் உறுதி தளராமல் மறுத்துவிட்டாள். தாய்மாமன் என்னைத் தனியாக அழைத்து, நல்ல வரனைப் பார்த்துத் திருமணம் நடத்திவிடும்படிச் சொல்லி, அக்காவையும், மருமகளையும் அழைத்துக்கொண்டு போய் விட்டார். அந்தம்மாவின் அண்ணன் அதற்கு முன்னால் பல முறை என்னுடன் பேசியும், கடிதப் போக்குவரத்தும் வைத்துக்கொண்டவர் தான் என்றாலும், சாதிப் பிரஷ்ட அறிக்கை வந்தபிறகு நடுக்கம் கண்டு, தாங்கிக்கொள்ள முடியாமல் தடுமாறிவிட்டார்.

புலவர்த்தி சேஷய்யா எனும் வைதிக மாணவர்க்கு அந்த இளம் பெண்ணை 1883 ஜனவரி 3ஆம் நாளன்று மணமுடித்தோம். மக்கள் நலச் செயல்களில் உற்சாகம் கொண்டு, எனக்கு உதவியாக இருந்த மாணவர்களில் இவர் ஒருவர். மற்றொருவர் விதவைத் திருமணம் செய்துகொண்ட நல்லகொண்ட கோதண்டராமய்யா ஆவார். இத்தகைய மாணவர்கள் பலருக்குக் கல்லூரிச் சம்பளம் முதலிய வற்றைக் கொடுத்து, உதவி செய்து வந்தேன். அந்தக் காலத்தில் மாணவர்கள் எங்களுக்குச் செய்த உதவியை நான் என்றும் மறக்க இயலாது. சிலர் உலக நன்மைக்குப் பயன்படுமென்றால் நெருப்பில் குதிக்கச் சொன்னாலும் பின்வாங்க மாட்டார்கள். எந்தக் காரியத் தைச் செய்துவரச் சொன்னாலும் எதிர்த்துப் பேசாமல் சொன்னபடிச்

செய்துவந்தனர். இத்தகையோர் துணையினால்தான் நாங்கள் பல காரியங்களைக் குறைவின்றி நிறைவேற்ற முடிந்தது.

இளம்விதவையரிடமும், விதவைப் பாதுகாப்பாளரிடமும் பேசி உற்சாகப் படுத்தி, சீர்திருத்தப் போக்குப் பரவச் செய்வதற்கென மாதம் எட்டுரூபாய் சம்பளம் கொடுத்து, சம்சார வெங்கன்ன அவர்களை நியமித்தேன். அவர், 'இந்த விதவையிடம் பேசினேன், அந்த விதவையிடம் பேசினேன்; இந்தப் பாதுகாப்பாளரை, அந்தப் பாதுகாப்பாளரை ஊக்கப்படுத்தி ஒத்துக்கொள்ள வைத்தேன்' என்று சொல்லிக்கொண்டு அக்டோபரிலிருந்து என்னிடம் மூன்று மாதம் சம்பளம் வாங்கிக் கொண்டார். அந்த விதவை விஷயம், இந்த விதவை விஷயம் அப்படி யிருக்க, பதினெட்டு வயதான அவர் மகளே நான்காவது மாதத்தில் எங்கள் வீட்டிற்கு ஓடிவந்து, தனக்கு ஒரு கணவனை அருளவேண்டு மென்று என்னை வேண்டிக் கொண்டாள். தந்தை, மகள் பின்னுடியே ஓடிவந்து ஓலமிட்டுத் தம் மகளை அனுப்பிவிட வேண்டுமென்றும், தமக்குச் சமைத்துப் போட வேறு திக்கில்லை யென்றும் கேட்டுக் கொண்டார். சமைத்து வைக்க வேறொரு வேலைக்காரியை அமர்த்திக் கொள்ளச் சொல்லியும், இல்லை யெனில் உத்தியோகம் பார்க்கும் தம் மகனிடம் சென்று இருக்கு மாறும் அறிவுரை சொல்லி, அவரை வேலையி லிருந்து நிறுத்தி அனுப்பிவிட்டு, அவர் மகளை எங்கள் வீட்டிலேயே நிறுத்திக் கொண்டேன்.

முஞ்சுலூரி வெங்கட்ராமய்யா என்பவர் பிராயச்சித்தம் செய்து கொண்டு திரும்பிப் போகும் பொழுது, இருபது வயதான தம் தம்பியை எங்கள் வீட்டில் நிறுத்திவிட்டுப் போனார். நான் அவரை அச்சகத்தில் அச்சுக் கோக்கும் பணியில் அமர்த்தி, மாதத்திற்கு ஆறு ரூபாய் சம்பளம் கொடுத்து வந்தேன். கோபாலம் எனும் பெயர் கொண்ட இவர் தமக்குத் திருமணம் செய்து வைக்கச் சொல்லி என்னைத் தொந்தரவு செய்து வந்தார். அவருக்குச் சம்பளம் ரூபாய் எட்டாக உயர்த்தி, 1883 ஜனவரி 30 ஆம் நாள் புதிதாக வந்த விதவையைத் திருமணம் செய்து வைத்தேன்.

அந்த ஆண்டு கோதாவரி மகாமகம். அதுவரைக் கூந்தல் வைத் திருந்த இளம்விதவையரைப் பாதுகாப்பாளர்கள் ராஜமகேந்திரவரத் திற்கு அழைத்து வந்து, கோதாவரிக் கரையில் கூந்தலை மழித்து, அவர்கள் தோற்றத்தை அருவருப்பாக்கி விடுவர். அந்த ஆசாரத்தை யொட்டி, பதினேழு வயதான ஒரு வைதிக விதவையின் தாயும், அண்ணனும் ராஜமகேந்திரவரத்துக்கு அவளை அழைத்து வந்து,

கோதாவரிக் கரையிலிருந்த ஒரு சத்திரத்தில் இறங்கி யிருந்தனர். காலையில் தலை மழிக்க இருக்க, அன்றிரவு எப்படியோ அந்தப் பெண் தமரை ஏமாற்றித் தப்பித்து வந்து என்னிடம் சரண் புகுந்தாள். தான் படும் அவதியிலிருந்து விடுதலை பெற எவ்வளவு ஏழை யாயினும் ஒருவனைக் கல்யாணம் செய்துகொள்ளத் தயாராக இருப்ப தாக அந்தப் பெண் என்னிடம் மிகவும் பரிதாபமாகக் கூறினாள்.

எங்கள் பழைய புரோகிதர் பிராயச்சித்தம் செய்து கொண்டு ஓடிப் போகவே மனைவியை இழந்தவரான செலுக்கூரி நாராயணமூர்த்தி என்பவரைப் புரோகிதராக அமர்த்திக் கொண்டோம். அன்று, 23 வயதான அவருடைய மருமகனொருவன் அமலாபுரத்திலிருந்து ராஜமகேந்திரவரம் வழியாகக் காகிநாடா செல்லும் பொழுது, தாய் மாமனைப் பார்க்கப் போனார். தாய்மாமன் விதவையை மணம் செய்து கொள்ளுமாறு தூண்டவே அவரும் ஒப்புக்கொண்டார். புதிதாக ஒரு விதவை வந்தாளெனக் கேள்விப்பட்ட எங்கள் புரோகிதர், அவளைத் தாமாவது, தம் மருமகனாவது கல்யாணம் செய்து கொள்ளலாமென்று எண்ணி, தம் மருமகனையும் அழைத்துக் கொண்டு என்னிடம் வந்து தம் விருப்பத்தைச் சொல்லவே, நான் அந்தப் பெண்ணைப் பார்த்து, 'இவர் புரோகிதர், இவர் சமையல் பிராம்மணர். இவர்களில் யாரையாவது கல்யாணம் செய்து கொள்ள இஷ்டம் இருக்கிறதா?' என்று கேட்டேன். இளைஞனை இரண்டா மவனையே செய்து கொள்வதாக அவள் சொன்னாள். நான் தாலியைச் செய்யச் சொல்லி, அன்றிரவே அவர்களுக்குக் கல்யாணம் நடத்தினேன். ஆறுவதான இந்தத் திருமணம் 1883 மார்ச்சு 13 ஆம் நாள் நடைபெற்றது.

ஐந்தாவது திருமணத்தின் போது சமையல் பிராம்மணன் ஓடிப் போய்விடவே, என் மனைவியே கோதாவரியிலிருந்து நீர் கொண்டு வந்து, சமையல் முதலான எல்லா வேலைகளையும் செய்து மிகவும் கஷ்டப்பட வேண்டியதாயிற்று. இந்தக் காரியங்களில் என்னைப் போலவே என் மனைவியும் ஈடுபாடு கொண்டவளாக, எல்லாக் கஷ்டங்களையும் மகிழ்ச்சியோடு பொறுத்துக் கொண்டு, என்னைப் பின்பற்றி மனைத்தக்காள் என்ற பெயருக்கு எடுத்துக்காட்டாக விளங்கி வந்தாள். சமையல் முதலானவற்றைக் கவனிக்கக் கூடிய ஆசாரமான பிராம்மணனுக்கே இந்தக் கல்யாணத்தை நடத்தியதால் நாங்கள் சமையல் பிராம்மணர்களின் அச்சுறுத்தல்களிலிருந்து தப்பிக்க முடிந்தது.

பிராம்மணர்களிடையே மறுமணங்கள் அடிக்கடி நடப்பதைக் கேள்வியுற்ற ஒரு வைசிய விதவை தம் மகளான பத்து வயது இளம் விதவையை அழைத்து வந்து கல்யாணம் செய்துவைக்க வேண்டு மென்று சொல்லி என் காலில் விழுந்தார். திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லி என்னிடம் வந்து வந்து போய்க் கொண் டிருந்த 20 வயதான போடா ஸ்ரீராமுலு என்னும் கோமட்டி (செட்டி) இளைஞனுக்கு அந்த இளம்பெண்ணை 1883 ஏப்ரல் 11 அன்று மணம் செய்து வைத்தேன். இதுவே வைசிய விதவைக் கல்யாணங்களில் முதலாவது. பல்லக்கை காவல் துறையினர் சூழ்ந்து வர, கல்மாரி பெய்த காலம் மறைந்து, ஏழாவதான இந்தக் கல்யாணம் நடக்கும் பொழுது மாணவர் உதவியே தவிர, காவல்துறையினர் உதவி தேவை யில்லாமல் தம்பதியர், இரவு வேளையில் பயமில்லாமல் தெருக்கள் வழியாக ஊர்வலமாகச் செல்லக் கூடிய காலம் வந்தது.

ராஜமகேந்திரவரத்தில் அடுத்தடுத்துத் மறுமணங்கள் நடை பெறுவது கண்டு சென்னையி லிருந்த எங்கள் நண்பர்கள் பல்லெ செம்சல ராவ், திவான் பகதூர் ரகுநாத ராவ் ஆகியோர் ஓரிரண்டு திருமணங்களைச் சென்னைப்பட்டணத்தில் நடத்த வேண்டு மென்று கேட்டுக் கொண்டனர். நான் அவர்கள் ஆணையைத் தலைமேற் கொண்டு சென்னையில் விதவா விவாகம் நடத்துவதற்கு முயலுவதாக எழுதினேன்.

ராஜமகேந்திரவரத்தைச் சேர்ந்த மாணவர் ஒருவர் புதிதாக மணம் முடித்துக் காலமாகிவிட்டார். அவருடைய தமக்கையார் அவ்வப் பொழுது எங்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தார். அவரை ஒரு முறை, அவருடைய தம்பி மனைவி எங்கிருக்கிறு ளென்று கேட்க, குண்டூர் மாவட்டத்தில் ஒரு கிராமத்தி லிருப்பதாகச் சொல்லி, தம் மைத்துனி மட்டுமல்லாமல் அவளுடைய தங்கையரும் விதவையராகி விட்டதாகச் சொன்னுர். அவர்களுக்குக் கல்யாணம் செய்துவைக்கக் கூடாதா என்று கேட்க, தமக்குப் பயணச் செலவுக்கும், சிறிது அன்பளிப்பும் கொடுத்தால், அந்தப் பெண்களின் தாயாரிடம் பேசி அழைத்துக் கொண்டு வருவதாகச் சொன்னுர். நானும் ஒப்புக் கொண்டு வழிச்செலவு கொடுக்கவே அவர், பெண்களின் தாயாரை அழைத்து வந்தார். தாயாரிடம் பேசி அவருடைய ஒப்புதலைப் பெற்று இரண்டு விதவைக் கன்னியரை வரவழைத்தேன்.

தணுக்கு சலபதிராவ் என்பவரும், பேத்தபூடி பிரகாச ராவ் என்ப வரும், ஆக இரு வரன்கள் ஏற்கனவே எங்கள் வீட்டில் இருந்து வந்தனர். இளம்விதவையரில் பெரியவளுக்கு வயது 12; சிறிய

வளுக்கு 10 வயது. இந்த மணப் பெண்களிருவரையும் என்னிட மிருந்த வரன்களுக்குக் கொடுத்து, சென்னையில் திருமணங்கள் நடத்த முடிவு செய்து, அங்கிருந்த நண்பர்க் குழாமிற்கு இந்த நற்செய்தியைத் தெரிவித்து, இரண்டு மணப் பெண்கள், இரண்டு வரன்கள், புரோகிதர், சமையல் பிராம்மணர் ஆகியவர்களை அழைத்துக் கொண்டு மனைவியுடன் நீராவிப் படகிலேறுவதற்காக நான் காகிநாடா சென்றேன். ரகுநாத ராவ் அதற்கு முன்பே தம் இனத்தவர் சமையல் செய்தாலொழிய சாப்பிட முடியாதென்று எழுதியிருந்தார். அதனால் காகிநாடாவிலிருந்த ஒரு மாத்வ தம்பதியரையும் பயணத்துக்கு ஏற்பாடு செய்தோம். என் கடிதம் சேர்ந்த உடனே செம்சலராவ், ரகுநாத ராவின் கடிதம் கிடைக்கும் வரை புறப்பட வேண்டாமென்று காகிநாடாவிற்குத் தந்தி அனுப்பினர். அதனால் நாங்கள் அன்றைய நீராவிப்படகை விட்டுவிட்டு ஒருவாரம் காகிநாடாவில் இருக்கவேண்டியதாயிற்று. ரகுநாதராவிடமிருந்து வந்த கடிதம் இது :

'அன்பார்ந்த ஐயா,

நாங்கள் சங்க உறுப்பினர்களின் சிறப்புக் கூட்டம் ஒன்றைக் கூட்டினோம். வந்திருந்த 30 உறுப்பினர்களில் 18 பேர் பிராம்மணர்கள். அவர்களனைவரும் திருமணத்துக்கு வந்து தாம்பூலம் பெற்றுக் கொள்ள இசைவு தெரிவித்துள்ளனர். விருந்தைப் பொறுத்த வரையில், பிராம்மண உறுப்பினர்களில் மிகச் சிலரே விருந்தில் கலந்துகொள்ளத் தயாராக உள்ளனர்...இந்தத் திருமணத்தைச் சென்னையில் நடத்துவது புத்திசாலித்தனமல்ல என்று எங்களுக்குப் படுகிறது. ஆனால், கலந்து கொள்வோரின் எண்ணிக்கைக் குறைவைப் பற்றி உங்களுக்குக் கவலையில்லையெனில், நீங்கள் தாராளமாக வரலாம். எளிதில் ஒரு வீட்டை ஏற்பாடு செய்து விடுகிறோம்.'

இந்தக் கடிதம் வந்த உடனே பதிலெழுதி விட்டு, ஜூன் 2 ஆம் நாள், 'பதின்மூன்று பேர் இன்று நீராவிப் படகில் புறப்படுகிறோம். வீட்டை ஏற்பாடு செய்யவும்' என்று தந்தி அனுப்பிவிட்டு, அன்று மாலை நீராவிப் படகில் புறப்பட்டோம். 4 ஆம் தேதி விடிகாலையில் சேரவேண்டிய படகு, பிற்பகல் இரண்டு மணிக்குச் சென்னையை அடைந்தது. எங்களுக்காக நீராவிப் படகருகில் யாரும் வரவில்லை. நாங்களே படகைப் பேசி, கரைக்கு வந்து சேர்ந்தோம். அங்கேயும் எங்களுக்காக யாரும் காத்திருக்கவில்லை. வீடு அமர்த்தினரா இல்லையா, நாங்கள் என்ன செய்யவேண்டுமோ, எங்கே போக

வேண்டுமோ ஒன்றும் தெரிந்த பாடில்லை. எங்களவர்களையெல்லாம் அங்கேயே நிறுத்திவிட்டு, அருகிலேயே இருந்த செம்சலராவின் அலுவலகத்திற்குச் சென்று, எங்கள் அவல நிலையைத் தெரிவித்தேன். அவர் வியப்படைந்து, நடந்ததற்கு மிகவும் மனம் நொந்து, ரகுநாத ராவின் வீட்டின் பக்கத்திலேயே வீடு அமர்த்தப் பட்டுள்ளதென்று சொல்லி, ஒரு பணியாளை உடனனுப்பினர்.

அந்த வீடு பெரிதாக இருந்ததென்றாலும் சில மாதங்கள் வெறுமனே கிடந்ததால் வௌவால்களின் புழுக்கைகளும், எலிகள் தோண்டிக் கிளரிய மண்குவியல்களும் நிறைந்து குடியிருக்கத் தகுதியில்லாம லிருந்தது, எங்களுக்கு வேண்டிய சாமான்களையெல்லாம் வர வழைத்து, வீட்டைத் தூய்மை செய்து, பிறகு சமையல் செய்து சாப்பிடும்பொழுது இரவு மணி எட்டு ஆயிற்று.

வந்த அன்று ரகுநாத ராவ் அவர்களின் தரிசனம் கிடைக்கவில்லை. மறுநாள் காலை அவரைக் காண்பதற்கென்று போனேன். ஆனால் வாயிலிலிருந்த அவருடைய பணியாட்கள் அவரைப் பார்க்க வசதிப் படாதென்று சொன்னதால் நான் திரும்ப வேண்டியவனானேன். இரண்டாம் நாள் மறுபடியும் பார்க்கப் போனபொழுது அவருடைய பணியாட்கள் யஜமான் பூஜையிலாழ்ந்துள்ளாரென்றும், பார்க்க இயலாதென்றும் தடுத்ததால் மீண்டும் என் வீட்டுக்குத் திரும்பி விட்டேன். 7 ஆம் தேதியன்று முன்பு போலவே அவருடைய தரிசனத்திற்காகப் போக அவருடைய காவலாட்கள் பழையபடியே சாக்குகள் சொல்லினர். ஆனால், அவர்களுடைய சொற்களைப் பொருட்படுத்தாமல் உள்ளே சென்று, படியேறி அவர் உட்கார்ந் திருக்கும் அறைக்குச் சென்றேன்.

என்னைப் பார்த்து எழுந்து எதிர்நோக்கி வந்து, என்னை உள்ளே அழைத்துச் சென்று நல்லாசனத்தில் அமர்த்தி, என் வருகையை அறிந்ததாகவும், அவசரமான வேலைகளிருந்ததால் மூன்று நாட்க ளாகியும் என்னைப் பார்க்க முடியாமற் போனதற்கு வருத்தப்படுவ தாகவும் சொல்லி மன்னிப்பு கேட்டுக் கொண்டார். நான் வந்த விஷயத்தைத் தொடங்கி, அடுத்த நாள் திருமணம் நடத்துவதாக முடிவு செய்திருப்பதாகவும், அழைப்பிதழை அவர் பெயரில் அனுப்பு வது உடன்பாடில்லையென்றால் என் பெயரிலேயே அனுப்புவதாகவும் தெளிவாகச் சொன்னேன். அவர் சற்று நேரம் சிந்தித்துவிட்டு அழைப்பிதழை எழுதி, தம் கையெழுத்தைப் போட்டு, நானிருக்கும் பொழுதே தம் அச்சகத்திற்கனுப்பினர். சென்ற வேலை முடிந்ததால் அவரிடம் விடைபெற்று வீடு மீண்டேன். செம்சல ராவ் பந்துலு

ஒவ்வொரு நாளும் வந்து என்னிடம் பேசிவிட்டுப் போய்க்கொண்டிருந்தார். அச்சடிக்கப்பட்ட அழைப்பிதழில் ரகுநாத ராவின் பெயர் காணப்படவில்லை. திருமணத்திற்கு வருகை தந்து சிறப்பிக்குமாறு சங்கத்தினர் அனைவரையும் கேட்டுக் கொள்வதாக அச்சடிக்கப் பட்டிருந்தது. பட்டணத்தில் செய்தித் தாள்களுக்கும், நண்பர்களுக்கும், தக்கவர்களுக்கும் அவர்களே அழைப்பிதழை அனுப்பினர். பந்தலைப் போடுவது, தோரணங்கள் கட்டுவது முதலானவற்றையெல்லாம் ரகுநாத ராவே முன்னின்று நடத்தி, பாத்திரம் பண்டங்கள் உணவுப் பொருள்கள் அனைத்தையும் அவரே சிறப்பான முறையில் ஏற்பாடு செய்துவிட்டார்.

சென்னை சேர்ந்த பின்னர் மணமகளின் தாயார் தம் இரண்டாவது மகளைப் பிரகாச ராவுக்குக் கொடுக்க மறுத்து விட்டதால் ஒரு திருமணம் மட்டுமே சென்னையில் நடந்தது. விதவைத் திருமணம் நடப்பது சென்னையில் இதுவே முதல் முறையாதலால், மக்கள் ஏராளமாகத் திரண்டு வேடிக்கை பார்க்க வந்தனர். பெரிய மனிதர்கள் பலரும் வருகை தந்து சிறப்பித்து, மிகவும் உற்சாகம் காட்டினர். 1883 ஜூன் 8 ஆம் நாள் தொடங்கிய இந்தத் திருமண விழா 12 ஆம் தேதியன்று மகிழ்ச்சிகரமாக நிறைவேறியது.

ஆகஸ்ட்டு 13 ஆம் நாள், இரண்டாவது வைசியத் திருமணம் நடைபெற்றது. இதுவே ஒன்பதாவது விதவை மறுமணமாகும். 1883 டிசம்பர் மாதத்தில் ஒரு வயதான வைதிக விதவை என்னிடம் வந்து, தம் பாதுகாப்பில் 13 வயதான விதவைப் பேத்தி இருக்கிறாளென்றும், தாய் தந்தையரில்லாத அந்த இளம்பெண்ணுக்கு மணம் செய்து வைத்து, தாமும் பேத்தியிடமே இருப்பதாகச் சொன்னார். நான் புலவர்த்தி சேஷய்யாவை அந்தம்மாவுடன் தாட்டிபாக்கத்திற்கு அனுப்பினேன். அந்தப் பெண்ணையும், பாட்டியையும் யாருக்கும் தெரியாமல் அழைத்துக்கொண்டு, அவர்களுடைய சாமான்களைச் சுமந்து வருவதற்குக் கூலிக்காரர் கிடைக்கக் கஷ்டமாயிருந்ததால், காரியத்தில் வெற்றி காண்பதே முக்கியமாகக் கொண்டு, காவடியொன்றை வாங்கி, சாமான்களை அதில் போட்டுச் சில மைல் தூரம் தாமே சுமந்து வந்து சேஷய்யா, அவர்களை எங்கள் வீட்டில் சேர்த்தார். 1884 ஜனவரி 5 ஆம் நாள் நல்லகொண்ட கோதண்டராமய்யாவுடன் திருமணம் நடத்தப்பட்டது, இந்தப் பெண்ணுக்குத் தான். மணமகன் முதற்பிரிவினன் (அந்தணன்); மணமகள் வைதிக மரபில் (புரோகிதர்) பிறந்தவள். இனப்பாகுபாடு பார்க்காமல் நடத்திய திருமணங்களில் இதுவே முதன்மையானது. முதல்

திருமணம் செய்து கொண்டவர்களைத் தவிர ஏனையவர்க்கெல்லாம் குடியிருப்பதற்கு வீடுகள் கொடுக்கப்பட்டு வந்தன.

1884 ஏப்ரல் மாதத்தில் மசூலாவி (பந்தர்)லிருந்து செருவு சுப்ரண்ய சாஸ்திரி எனும் வழக்கறிஞர், ஓரளவு கடிதப் போக்கு வரத்துக்குப் பின்னர், தாம் விதவையைத் திருமணம் செய்து கொள்வதற்குத் தயாராக இருப்பதாகவும், தமக்குப் பண உதவி தேவையில்லை யென்றும், மற்றொரு தம்பதியார்க்குப் பணஉதவி தேவையுள்ள தென்றும் எழுதினர்.

நண்பர்கள் போக வேண்டாமென்று அறிவுரை கூறியும், நோய் வாய்ப்பட்டு உடல் மெலிந்திருப்பினும், வெயில் தாங்க முடியாத அளவு வெம்மையுடனிருப்பினும், சீர்திருத்த வித்தினை பிற இடங் களில் ஊன்றுதற்கு வாய்ப்புக் கிட்டியபொழுது வாளாயிருப்பது தருமமல்ல என்றெண்ணி, வருகின்றேனென்று சுப்ரமண்ய சாஸ்தி ரிக்கு எழுதி, கொதிக்கும் கோடையில், மணல் பாதையில் முரட்டு வண்டிகளில் குடும்பத்துடன் புறப்பட்டுப் பந்தருக்குப் பயணம் தொடங்கினேன்.

நாங்கள் பந்தருபுரம் வந்து சேர்வதற்குள், என் வருகை முன்னரே தெரிந்திருந்த காரணத்தால், வெள்ளம் வந்தாற்போல ஊர் மக்களிடையே குழப்பம் நிறைந்து அல்லோல கல்லோலப் பட்டது. தாம் பட்டணத்தில் மேற்சொன்ன சீர்திருத்த மணத்திற்கு முதல்வனுக இருப்பதாக எழுதிய பிராம்மண வீரர், விதவைத் திருமணம் ஒரு பக்கத்தி லிருக்க, நான் தேடிக்கொண்டு அவர் வீட்டுக்குப் போன பொழுது என்னுடன் பகிரங்கமாகப் பேசுவதற்கே அஞ்சி, என்னை மறைவிடத்திற்கு அழைத்துச் சென்று, தாம் அப் பொழுது நோய்வாய்ப் பட்டிருப்பதால் திருமண முயற்சிகளை நிறுத்தி வைத்திருப்பதாகவும், உடல் நலமடைந்த பின்னர் மீண்டும் முயற்சி தொடங்கும் பொழுது எழுதுவதாகவும் கூறிவிட்டார்.

நான் அத்துடன் ஏமாற்ற மடையாமல் பட்டணத்திற்கு வந்த தற்குச் சில சொற்பொழிவுகளேனும் நிகழ்த்துவதென்று முடிவு செய் தேன். என் முதல் சொற்பொழிவை வல்லூர் ஜமீந்தாரின் மாபெரும் சபாமண்டபத்தில் நிகழ்த்தினேன். என் முதல் சொற்பொழிவைக் கேட்க வேண்டுமென்ற ஆவலினாலும், என் முகம் எப்படி யிருக்கிற தென்று பார்க்கும் ஆசையினாலும் மண்டப முழுவதும் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. எல்லாரும் கடைசி வரையில் என் சொற்பொழிவை அமைதியாக இருந்து கேட்டனர்.

வட்லமன்னுட்டி வேங்கடாசல பந்த்துலு அந்தப் பட்டணத்தில் விதவை விவாக எதிர்ப்பாளர்களின் தலைவர். அவர் ஒரு பெரிய பண்டிதரைக் கொண்டு விதவைமணம் பற்றிய என் வாதங்களை எதிர்த்து ஒரு கண்டன நூலை எழுதச் செய்தார். நான் வேங்கடாசலம் பந்த்துலுவைத் தரிசிக்கக் கருதி ஒருநாள் விடியற் காலையில் அவர் வீட்டுக்குப் போன பொழுது அவர் ஜபம் செய்துகொண்டிருந்தார். அவர் என்னை உள்ளே வரவழைத்து, தம் பக்கத்தில் அமரவைத்துக் கொண்டு, இத்தகைய பொதுச் சொற்பொழிவுகளால் பயனில்லை யென்றும், சாத்திரப் பொருள்வாதம் தேவையானதென்றும், பண்டிதர் சபை கூடுவதுதான் பயனுள்ளதென்றும் கூறினுர். நானும் அவர் சொன்னதை ஒப்புக் கொண்டு சிறிய சபையில் சாத்திர அடிப்படையில் சொற்போர் நடத்துவதே பயன் படும் என்று சொன்னேன்.

அவர் அதற்கு ஒப்புக்கொண்டு, மறுநாள் பிற்பகல், தம் வீட்டு மண்டபத்திலேயே கூட்டத்திற்கு ஏற்பாடு செய்து, இருதரப்பிலுமிருந்த பெரிய மனிதர்களுக்கும், பண்டிதர்களுக்கும் அழைப்பு அனுப்பினுர். கண்டன நூலை எழுதிய சாஸ்திரியார், பண்டிதர்களின் சார்பில் வாதம் செய்வதற்கு என் எதிரில் அமர்ந்தார். கலியுகத்திற்குப் பராசர ஸ்ம்ருதி சிறந்த பிரமாண நூலானதால், 'நஷ்டே ம்ருதே' எனத் தொடங்கும் சுலோகத்தின் பொருளை வரையறுப்பதொன்றே தலையான செயலென்று நான் சொல்லவே, சாஸ்திரியார் என்னேடு உடன்பட்டு, அந்தச் சுலோகத்திற்குப் பொருள் சொல்லத் தொடங்கினுர். அவர் சொன்ன பொருள்களுக்கு நான் மாற்றுப் பொருள்கள் சொல்லத் தொடங்கினேன். ஒரு கால்மணி நேரம் சாத்திரப் பொருள் விளக்கத்திற்குப் பிறகு சாஸ்திரியார் ஒரு நிமிடம் பேசாமலிருந்துவிட்டு, சபையார் பக்கம் திரும்பி, 'ஐயா, இவர் தம் வாழ்க்கையை இதற்கே செலவழித்து மிகவும் பாடுபட்டுள்ளார். எனக்குச் சிறிது அவகாசம் கொடுத்தாலொழிய இவரோடு வாதம் நடத்த முடியாது' என்று சொல்லிவிட்டு மௌனம் பூண்டுவிட்டார். பல பண்டிதர்களுடன் பல இடங்களில் வாதம் நடத்தி யிருந்தாலும், தம் இயலாமையை ஒப்புக்கொண்டு, உண்மைக்கு மதிப்பு கொடுத்தவர் இவரைத் தவிர வேறு யாரையும் நான் பார்த்ததே யில்லை.

பந்தரிலிருந்து திரும்பி வந்ததும், நான் நண்பர்களுடன் கலந்தாலோசித்து, 1884 ஜூன் 22 அன்று, மகளிர் மறுமணச் சார்புள்ள நண்பர்கள் யாவரையும் ஒன்று திரட்டிப் புதிய சங்கம் ஒன்றை உருவாக்கினேன். இந்தப் புதிய சங்கம், ராமகிருஷ்ணய்யா, நான்,

கவர்ராஜு, ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம், நியாபதி சுப்பாராவ் பந்த்துலு முதலிய பதினாறு பேரையும் பொது உறுப்பினர்களாகக் கொண்டு உருவாயிற்று. இது பழைய சங்கத்தின் தொடர்ச்சியாக உருவானதே என்றும், சங்கத்தினரின் ஆதரவில் மணம் செய்து கொண்டவர்களனைவரும் உறுப்பினர்களாகக் கருதப் படுவார்களென்றும் முடிவு செய்யப் பட்டது. ஏழுபேர் கொண்ட செயற்குழு அமைப்பதென்றும், அவர்களில் ஆறுபேர் உறுப்பினர்களாலும், ஒருவர், மணம் செய்து கொண்டவர்களாலும் தத்தம்மிடையே யிருந்து தேர்ந்தெடுக்கப் படவேண்டு மென்றும் முடிவாயிற்று.

ரகுநாத ராவ், செம்சல ராவ் ஆகியோார் மன்றல் விருந்தில் கலந்து கொள்ள வில்லை யெனினும், சென்னையில் நடந்த எட்டாவது மணத்திற்குப் பிறகு அவர்கள் இனத்தினரான மாத்வர்களால் பாதிக்கப் படலாயினர். அவர்களின் ஆசாரியரான வடநாட்டு மடத்தின் சுவாமிகள் சென்னைக்கு வந்து, சிறிது காலம் அங்கேயே தங்கலானர். தாங்கள் ஓர் எளிய விஷயத்தில் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டி வந்ததென்றும், தாமும் ரகுநாத ராவும் பழையபடியே விதவைத் திருமண விஷயத்தில் உதவி செய்ய இருப்பதாகவும் செம்சல ராவ் ஒரு கடிதம் எழுதினர். இந்த விஷயத்தைப் பற்றி ரகுநாத ராவ் பெயருக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன். ஆனல் அவரிடமிருந்து பதிலொன்றும் கிடைக்கப் பெறவில்லை.

அந்த ஆண்டு குளிர்கால விடுமுறையில் நான் மீண்டும் சென்னை சென்று ரகுநாத ராவினைக் கண்டேன். அவர் என்னைப் பார்த்து, 'நான் பிராயச்சித்தம் செய்து கொண்டேன் என்று உங்களுக்கு எழுதிய முட்டாள் யார்? எங்கள் சுவாமிகள் இப்பொழுது இங்கேயே இருக்கிறர். இந்தச் சமயத்தில் ஒரு திருமணம் ஏற்பாடு நடக்குமானல், அவர் வீட்டு எதிரிலேயே திருமணம் நடத்தி அவருக்குப் புத்தி வரும்படிச் செய்திருப்பேன்' என்று பற்களை நறநற வென்று கடித்துக்கொண்டு, இடி இடிப்பது போல முழங்கினர். வீராவேசம் உருவம் பெற்றுவந்தது போன்ற அவருடைய தோற்றத்தைப் பார்த்து, அவருடைய பேச்சைக் கேட்ட பொழுது மெய்சிலிர்த்து, அவருக்கிருக்கும் உற்சாகத்தில் எனக்குக் கால்பங்கு இருந்தாலும் நானெவ்வளவோ வேலை செய்திருக்கலாமே என்று என்னுள் எனக்கே வெட்கம் பிடுங்கித் தின்றது.

நான் வீட்டுக்குத் திரும்பிய பொழுது மாணவர் சிலர் வந்து என்னைப் பார்த்து, 'ஒரு கிழப் பிராம்மணர் உங்களுக்காக வந்து வந்து போய்க்கொண்டிருக்கிறர்' என்று சொன்னர்கள். மறுநாள்

காலையில் அவர்கள் அந்தக் கிழப் பிராம்மணரை என்னிடம் அழைத்து வந்தனர். சித்தூர் ஜில்லாவில் ஒரு கிராமத்தில் இரு இளம்விதவையர் இருப்பதாகவும், அவர்களுக்குத் திருமணம் செய் வதற்குத் தாய்தந்தையர் ஒப்புக்கொண்டன ரென்றும் அவர் கூறினர். அவர்களைத் திருமணம் செய்து கொள்வதற்கு வரன்களும் தயாராகவே இருப்பதாக அவர் சொன்னர். 'அப்படியானல் செம் சல ராவிடமோ, ரகுநாத ராவிடமோ சென்று மணத்தை நடத்தக் கூடாதா?' என்று கேட்டேன். 'அவர்கள் பேசுவார்களே தவிர காரியத்தில் ஒன்றும் செய்ய மாட்டார்கள்' என்று அவர் கூறினர். 'நான் என்ன செய்ய வேண்டும் உங்களுக்கு?' என்று கேட்கவே, 25 ரூபாய் கொடுத்தால் தாம் சென்று, இரண்டு மணப்பெண்களையும், அவர்களுடைய பெற்றேர்களையும், வரன்களையும் அழைத்து வருவ தாகவும், அவர்களுக்குத் திருமணம் நடத்தவேண்டுமென்றும் அவர் சொன்னர். அவரை என் வண்டியி லேற்றிக்கொண்டு செம்சல ராவின் வீட்டுக்கு அழைத்துச் சென்று, நடந்ததை யெல்லாம் சொல்லி, 25 ரூபாய் கொடுக்குமாறு சொன்னேன். இத்தகையவர்கள் பணத்தை மோசடி செய்வார்கள் என்று அவர் சொன்னபோதும், அந்த நஷ்டத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று கூறி, பணம் கொடுத்து அந்தக் கிழப் பிராம்மணரை அனுப்பி வைத்தேன்.

பிறகு நேராக ரகுநாத ராவின் வீட்டுக்குச் சென்று, 'நீங்கள் நேற்று, மணமக்கள் கிடைப்பார்களானல் சுவாமிகளின் வீட்டு முன்னலேயே கல்யாணம் நடத்தி வைப்பே னென்று சொல்லி அனுப்பினிர்கள். கடவுள் உங்கள் ஆசையை வெகு சீக்கிரத்திலேயே நிறைவேற்ற எண்ணியிருக்கிருர் போலும். மணமக்களை அழைத்து வர ஒரு மனிதரை இப்பொழுதுதான் அனுப்பிவிட்டு வருகிறேன்,' என்று சொன்னேன். நான் சொல்லி முடித்த உடனே அவர் முகம் களையிழந்து வெளுத்துப் போயிற்று. அவர் கைகளைக் கூப்பி என்னை வணங்கி விட்டு, 'இந்த விஷயத்தில் வேலை செய்ததற்கு இதுவரை பலவகைத் தொல்லைகள் அனுபவித்தேன். இனிமேல் இதில் என்னல் பங்கு கொள்ள முடியாது, மன்னிக்கவும்' என்று தெளிவாகச் சொல்லி விட்டார்.

கிழவர் 4, 5 நாட்களில் மணமகளிர் இருவரையும், அவர் தம் பெற்றேர்களையும், மணமகன்கள் இருவரையும் அழைத்துக்கொண்டு வந்து என்னிடம் ஒப்படைத்துத் தம் வழியே போய்விட்டார். பிறகு விசாரித்ததில், அந்த வயதான பிராம்மணர் மணமகளிரின் தாய்ப் பாட்டனர் என்று தெரியவந்தது. செம்சல ராவ், ரகுநாத ராவ்

ஆகிய இருவரும் என்னிடம் வந்து, இந்தத் திருமணத்தைச் சென்னை யில் நடத்த வேண்டாமென்றும், தாம் இருவரும் இதிலிருந்து விலகி யிருப்பதாக மக்களுக்குத் தெரிந்தால் இந்தச் கட்சிக்கு நஷ்டம்தான் ஏற்படுமென்றும், தம் இரகசியம் வெளிப்படா வண்ணம் திருமணங் களை ஊருக்கு வெளியே நடத்தி, தம்மை அவமானத்திலிருந்து காப்பாற்ற வேண்டுமென்றும் பலவிதமாக வேண்டிக் கொண்டனர். அவர்களுடைய ஆசையை நிறைவேற்றுவது நல்லதென்றே பட்டது.

விடுமுறை முடியும் தறுவாய் நெருங்கிக் கொண்டிருந்ததால் நான் திரும்ப வேண்டிய நாள் குறுகிக் கொண்டிருந்தது. 'உங்கள் ஊரில் திருமணங்கள் நடத்த முன்வருவீர்களா?' என்று கேட்டுப் பல பேருக்கு எழுதினேன். பல்லாரியிலிருந்து, ராவ்பகதூர் சபாபதி முதலியார் எல்லாச் செலவுகளையும் ஏற்றுக்கொண்டு தாம் நடத்த முன்வருவதாக எழுதினர். 1885 பிப்ரவரி 12 ஆம் தேதி, 15 வயதான மணமகளைச் சித்தூரி சுப்பாராவும், 12 வயதான மண மகளை ஜூடப்ரோலு ராமா ராவும், பல்லாரியில் மணந்துகொண்டனர். இவை ராமகிருஷ்ணய்யாவின் பண உதவியால் எங்கள் மூலம் நடத்தப்பட்ட 11ஆவது, 12ஆவது விதவை மறுமணங்களாகும்.

இந்தத் திருமணங்கள் யாவும் பைடா ராமகிருஷ்ணய்யா மிகக் கருணையுடன் எங்கள் சங்கத்திற்கு அருளிய ரூபாய் 10,000த்தைக் கொண்டு நடத்தப்பட்டன. இவருடைய உதவி மட்டும் இல்லாம லிருந்தால் நாங்கள் இவற்றில் ஒரு திருமணங்கூட நடத்துவதற்குத் தகுதியற்றிருப்போம். இந்தப் பத்தாயிரம் ரூபாய் தவிர முதலிரண்டு கல்யாணங்களுக்கான எல்லாச் செலவுகளையும் அவர் ஏற்றுக் கொண்டார். தவிர, சில வீடுகளை மறுமணத் தம்பதியருக்குக் குடி யிருப்பதற்கென்று, சங்கத்தினர் வசம் கொடுத்திருந்தார். இவர் தம் புகழ் இந்த உலகில் நிலையாக நில்லாமற் போகாது.

அப்பொழுது கல்யாணங்கள் நடத்துவதற்கு மட்டுமல்லாமல், மாதச் செலவுகளுக்கும் பணம் தேவைப்பட்டது. எங்கள் கல்லூரி கோடை விடுமுறைக்கென மூடப்பட்ட பின்னர், சந்தா திரட்டு வதற்குக் குடும்பத்தோடு கிளம்பிச் சென்னைக்குப் போனேன். வண்டி ஏற்பாடு செய்து கொண்டு, சந்தாவிற்கெனப் பெரியமனிதர்கள் வீடு களுக்குப் போய்வரலானேன். பிட்டாபுரம் ராஜா அவர்களின் தத்துப் புத்திரர்கள் இருநூறு ரூபாய் கொடுத்தனர். 20, 15, 10 ரூபாய்கள் மூன்று பேர் கொடுத்தனர். வண்டியில் புறப்பட்டு ஒரு பெரியமனிதர் வீட்டிற்குச் சந்தாவிற்கெனப் போனேன். மிகப் பெரிய பணக்காரரும் விதவைத் திருமணங்களில் அதிக அக்கறை காட்டிக்கொண்டு,

நான் போகும் பொழுதெல்லாம் அதிக கௌரவம் காட்டிவந்த வருமான அந்தப் பெரியவர், என் பெயர் தாங்கிய சீட்டு உள்ளே போன அரை மணி கழித்து வெளியே வந்து, தாம் மிக அவசர வேலையில் மூழ்கியிருப்பதாக நின்றபடியே இரண்டு வார்த்தைகள் சொல்லிவிட்டு, மீண்டும் உள்ளே சென்றுவிட்டார். அவருக்கு உண்மையிலேயே அவசர வேலை இருந்திருக்கலாம். ஆனால் நான் அதைப் பெரிய அவமானமாகக் கருதிக் கோபத்துடன் வெளி யேறினேன். அதட்டிக் காரியம் முடிப்பதற்கே தவிர, யாரிடமும் கைநீட்டிப் பிச்சை கேட்பதற்குப் பழகாதவன் நான். இனிமேல் யாரிடமும் பிச்சைக் கேட்பதில்லை என்ற முடிவு எடுத்துக் கொண்டு, அதற்குப் பிறகு யார் வீட்டிற்கும் போகாமல், படகேறி ராஜமகேந்திர வரத்திற்குத் திரும்பிவிட்டேன்.

எங்கள் சங்கத்தினர் மாத சந்தா கொடுப்பது தவிர, அவர்களில் சிலர் பெரிய தொகைகள் கொடுத்தும் உதவினர். எங்கள் விண்ணப்ப இதழைப் படித்த புரவலர்களில் பெங்களூரில் உயர்நீதி மன்றத்தில் நீதிபதியான, ஏ. ராமசந்திர அய்யர் திருமணம் ஒவ்வொன்றிற்கும் நூறுரூபாய் அனுப்பியதுடன், ஆறு மாதங்களுக் கொரு முறை நூறுரூபாய் சந்தா அனுப்பி வந்தார். ராவ் பகதூர் ஏ. சபாபதி முதலியார் திருமணம் ஒவ்வொன்றிற்கும் நூறுரூபாய் அனுப்பி வந்தார். டிசம்பர் 20ஆம் தேதியன்று நடந்த 13வது திருமணத்திற்கு ராமகிருஷ்ணய்யா இரகசியமாக முந்நூறு ரூபாய் அனுப்பி வைத்தார்.

திருமணத்திற்கென்று சென்னைக்கு அழைத்துச் செல்லப்பட்டு, திருமணம் நடக்காமல் திரும்பிய தனுக்கு சலபதிராவின் மைத்துனி இருந்தாள். அந்தப் பெண்ணின் தாய், தன் மகளுக்கு வரனாகக் கொம்மராஜு கோபாலம் என்ற நியோகி பிராம்மண இளைஞனை அழைத்துக்கொண்டு வந்து திருமணம் நடத்தி வைக்குமாறு கேட்டார். அவன் படித்தவனல்லன்; தான் தோன்றியாகத் திரிந்து தாய் தந்தையர் பேச்சைக் கேட்காமல் ஓடிவந்தவன். இந்தக் காரணத்தினால் நான் அவனுக்குக் கல்யாணம் நடத்திவைக்க மறுத்து விட்டேன். அதன் பின்னர் அந்தம்மா, ஆத்மூரி லக்ஷ்மீ நரசிம்மத்திடமிருந்து பைடா ராமகிருஷ்ணய்யாவுக்கு ஒரு கடிதம் வாங்கிக்கொண்டு காகிநாடா சென்றார். அப்பொழுது ராமகிருஷ் ணய்யா எனக்கு இவ்வாறு எழுதினார்:

'அந்தப் பெண்ணின் தாய் என்னிடம் வந்தாள். கல்யாணம் நடத்திவைப்பதற்கு நானும் ஒப்புக்கொண்டேன். இதற்காக மிகவும்

முக்கியமாகத் தேவைப்படும் குறைந்த பட்சச் செலவைத் தயை செய்து தெரிவிக்கவும். இது முடிந்த பின்னர் நாம் திருமணங்கள் நடத்தி வைப்பதைத் தாற்காலிகமாக நிறுத்திவைக்க வேண்டும்.'

அவர் கடிதத்திற்கான பதிலில், 300 ரூபாய் தேவைப்படுமென்று எழுதினேன். 1886 மார்ச்சு 3ஆம் தேதி இரவு திருமண ஏற்பாடு செய்து அழைப்புக்கள் அனுப்பினேன். எல்லாரும் வந்திருந்தன ரெனினும், மணமகன் வராமற்போனதால் திருமணம் நின்றுபோனது இதுவே முதல் முறை அல்ல. சென்னையில்கூட ஒரு திருமணம் இவ்வாறே நின்றுவிட்டது. ஒரேயடியாக நின்றுவிடாமல், ராஜ மகேந்திரத் திருமணம், பிறகு நடந்தேறியதென்றாலும் ராமகிருஷ் ணய்யாவின் வாழ்நாட் காலத்தில் நடக்கவில்லை.

மார்ச்சு 17அன்று ராமகிருஷ்ணய்யா இவ்வாறு கடிதம் எழுதினார்: 'ஆருயிர் நண்பர்க்கு, கடந்த 15 நாட்களாக என் கழுத்தில் வெடித்த ஒரு கட்டியினால் தொல்லைப்பட்டு வருகிறேன்...'

கடிதம் எனக்குக் கிடைத்த இரண்டு, மூன்று நாட்களிலேயே அவர் காலமாக நேர்ந்தது.

அந்தக் காலத்தில் விதவைக் கன்னியரை அழைத்து வருவதாகவும் வழிச் செலவிற்கென்றும் என்னிடம் பணம் வாங்கிக்கொண்டு மோசம் செய்து வந்தனர் சிலர். அறிவின்மையால் செய்யப் பட்டவை மன்னிக்கப் படலாம். தீயகுணத்தால் செய்யப் பட்டவை யும் ஓரளவு மன்னிக்கப் படலாம். ஆனால் சமூகத் தொண்டர் களென்றும், தன்னலமற்ற தியாகிகளென்றும் சொல்லிக்கொண்டு பண ஆசையால் செய்யப்பட்ட தவறுகள் பொறுத்துக்கொள்ள முடியாதவையாகும்.

1884 ஜனவரியில், நல்லகொண்ட கோதண்டராமய்யாவின் திருமணம் நடக்கும் வரையில் சங்கத்தினர்க்கும், திருமணம் செய்து கொண்டவர்க்குமிடையே ஒற்றுமைக்குக் குறைவில்லாமல் இருந்தது. கோதண்டராமய்யாவின் திருமணம் நடந்த இரண்டு மூன்று மாதங் களில் கலகத்திற்குச் சில காரணங்கள் தோன்றின. இதற்கு அடிப் படைக் காரணம் பண ஆசைதான் என்பது என் கருத்து.

இந்த விதவை மணங்களை நான் மேற்கொண்டபொழுது, பாமரர்கள் மற்றும் பூர்வாசாரப் பற்றுள்ளவர்களான எதிர்க் கட்சியினரின் இகழ்ச்சிக்கும், தொல்லைக்கும் நான் பாத்திரமானேனே தவிர, என்னால் லாபமடைந்து, சமூகத் தொண்டினால்தான் தாங்கள் பல கஷ்டங்களுக்கும் ஆளாக வேண்டி யிருப்பதாகப் பலமுறை சொல்லிக்

கொள்பவர்கள் எனக்குத் தொல்லை கொடுப்பார்கள் என்று நான் சற்றும் நினைக்கவே யில்லை.

எங்கள் தெருவிலிருந்த சயனுலு என்பவரின் வீட்டை வாங்கிய பொழுது, நான் அதில் மூன்று குடும்பங்களை அமர்த்தக் கருதி, முதலில் கோதண்டராமய்யா கேட்டுக்கொண்ட பகுதியை, அதாவது சமையலறை, சாப்பாட்டறை, படுக்கையறை ஆகியவை இருந்த பகுதியை அவருக்குக் கொடுத்து, மற்றொரு பகுதியில் தனுகு சலபதி ராவின் குடும்பத்தையும், இடைப் பகுதியில் சேபோலு வெங்கய்யா வின் குடும்பத்தையும் குடிவைத்தேன். கோதண்டராமய்யா தாமிருந்த வீட்டைச் செப்பனிடுவதற்குத் தேவையென்று கேட்டுக் கொள்ளவே, மார்ச்சில் ரூபாய் ஆறும், ஜூலையில் ரூபாய் ஐந்தரையும் கொடுத்தேன். இவர் தம் பகுதியைத் தவிர ஏனைய பகுதிகளுக்காக ஒன்றும் கொடுக்கவில்லை.

நல்லகொண்ட கோதண்டராமய்யா இதையெல்லாம் மறந்து விட்டார். கோதாவரி கரை புரண்டுவந்து, வெள்ளம் தெருக்களில் பரவி, கோதண்டராமய்யா இருந்த வீட்டுச் சுவர், தக்க நேரத்தில் செப்பனிடாமற் போனதால், ஓரளவு இடிந்து விழவே, நான் அவரிடம் கொண்ட வெறுப்பின் காரணமாகத் தம் வீட்டைச் செப்பனிடவில்லையென்று என்மீது குற்றம் சுமத்தி, என்னைத் தூஷித்துக்கொண்டு, 1888 பிப்ரவரி 15ஆம் தேதி செயற் குழுவிற்கு ஒரு விண்ணப்பம் அனுப்பினர். அந்த மாதம் 26ஆம் தேதி விசாரணைக்கு வந்தபொழுது, நான் அவர் வீட்டு மராமத்திற்கென்று கொடுத்த பணக் கணக்கையும் அவர் எனக்குக் கொடுத்த ரசீது களையும் குழுவினர் முன்னர் வைக்கவே, அவர்கள் உண்மை யுணர்ந்து முடிவு செய்தனர்.

படிப்பில்லாத மூடர் பலபேர் சேர்ந்து செய்வதைவிட அதிகம் படித்தவர் ஒருவர் செய்யும் தீமை நூறு மடங்கு அதிகமாக இருக்கும். நீண்ட காலமாகவே நம் நாட்டில் பிச்சைப் பிழைப்பு மட்டமாகக் கருதப்படாமலும், பாடுபடாமல் உட்கார்ந்திருப்பது பெருமையென்று கருதப்பட்டு வருவதாலும் எல்லாரும் முடிந்த வரையில் பணம் பறிக்க வேண்டுமென்றே முயன்று வருகின்றனர். உறுப்பு ஊனமானவர்களைத் தவிர, உடல் செவ்வையாக அமையப் பெற்றவர்கள் யாவரும் பாடுபட வேண்டியவர்களே என்பதும், அப்படிப் பாடுபடாதவர்களுக்குத் தானங்கள் வழங்கிச் சோம்பலை வளர்த்துவிடுவது பாவமென்பதும் என் கொள்கைகள். நான் பாடு படுபவன் ; பிறரும் பாடுபட வேண்டுமென்று நினைப்பவன். உடல்

வருந்த உழைப்பதன் கௌரவத்தை உணராத முஞ்சுலூரி கோபாலம் எனும் ஐந்தாவது மணமகன், தாம் அச்சகத்தில் பணியாற்ற இயலாதென்றும், இரண்டாவது மணமகன் ராமசந்திர ராவுக்கும், நான்காவது மணமகன் சேஷய்யாவுக்கும் கொடுப்பது போலவே தமக்கும் மாதத்திற்கு எட்டு ரூபாய் வீதம் கொடுக்க வேண்டுமென்றும் என்னைக் கேட்டுக்கொண்டார். அவர்களிருவரும் படித்துக்கொண்டிருப்பதால் பணம் கொடுப்பதாகவும், படிப்பில்லாமல் உறுதியான உடலைப் பெற்றிருந்தும் கஷ்டப்படவிரும்பாத இவருக்குக் கொடுக்க இயலாதென்றும் உறுதியாகச் சொல்லிவிட்டேன். தாம் பெற்றுக் கொண்ட சம்பளப் பணம் தீர்ந்துபோன பிறகு சாப்பாட்டிற்கில்லாமல் ராமகிருஷ்ணய்யாவைத் தேடி, காகிநாடாவிற்குச் சென்று இவர் தம் கஷ்டத்தைச் சொல்லிக்கொண்டார். அவர் இவருக்குக் கொஞ்சம் ரூபாய் கொடுத்து, பிறகு என்னை ராஜமகேந்திரவரத்தில் பார்த்த பொழுது, நம்மில் சேர்ந்தவர்கள் சொன்ன சொல்லுக்குக் கீழ்ப்படியவில்லை யென்றாலும் கஷ்டப்படும்பொழுது உதவி செய்யவேண்டுமென்று சொன்னார். 'உறுதியான உடலுள்ளவர்கள் உத்தியோகம் கொடுத்தாலும் செய்யாமல், சோம்பேரித்தனமாய் காலம் கடத்த முடிவு செய்துகொண்டபொழுது உங்கள் பணமாக இருந்தாலும் நான் கொடுக்க மாட்டேன்' என்று அனுயாசமாக, கண்டிப்புடன் சொல்லிவிட்டேன்.

என்னிடம் ஒரு பெரிய குறை உள்ளது. மற்றவர்கள் கேட்பது நியாயமற்றதென்று தெரியும்பொழுது அமைதியாக அவர்களைச் சமாதானப்படுத்த முடியாமல், உரத்த குரலில், அவர்கள் பேராசை பிடித்தவர்களென்றும், அவர்கள் கேட்பது முறையற்றதென்றும் முகத்திலடிப்பதுபோல் சொல்லிவிடுவதாகும். யாராக இருந்தாலும், உண்மையான கஷ்டம் வந்தபொழுது என்னால் முடிந்த உதவியெல்லாம் செய்வேன். இந்த கோபாலத்தின் மனைவிக்கு அம்மை கண்டது. அப்பொழுது அவர் படும் அவதியை அறிந்து, உடனே அவர் வீட்டுக்குச் சென்று, பத்திய உணவுச் செலவிற்கென்று ரூபாய் நான்கு கொடுத்து, நோயாளிக்குப் பணிவிடைகள் செய்ய பிராம்மணரல்லாத பெண்ணொருத்தியை அமர்த்திவிட்டு, வேண்டிய பொருள்களையெல்லாம் வாங்கிக்கொடுத்து, நலமடைந்து முதற் குளியல் நடக்கும் வரையில் நாள்தோறும் சென்று பார்த்து வந்தேன்.

அதிகமாகப் படிப்பு இல்லாத மூடர்கள் பேராசை பிடித்தவர்களாக இல்லாமலும், வெகு எளிதில் திருப்தியடைபவர்களாகவும் உள்ளனர் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். கல்வியறிவு பெற்றவர்க

ளிடையேதான் இவை விபரீதமாக இருந்தன. ஓரிரண்டு விஷயங்களை இங்கு எடுத்துச் சொல்லவேண்டி யிருப்பதற்காக வருந்துகிறேன்.

மூன்ருவது மணம் செய்துகொண்ட ராமாராவுக்கு முந்நூறு ரூபாய் அளவில் வீடொன்று கொடுப்பதாக வாக்களித்தேன் எனினும், வந்த பணம் முழுவதும் மணத்திற்கே செலவாகிவிட்டதால் சொன்னபடிச் செய்ய இயலாமற் போய்விட்டது. ராமாராவின் எதிரிலியே என் இயலாமையை ராமகிருஷ்ணய்யாவிடம் சொன்ன பொழுது, தாம் வீடு கொடுப்பதாகச் சொன்ஞர். 1885 செப்டம்பரில், ராமாராவ் ஏறத்தாழ மூன்ருண்டுகள் கடந்தும், ராமகிருஷ்ணய்யா தம் வாக்கை நிறைவேற்றவில்லை என்று எழுதினுர். நான் அந்த மாதம், பிற விஷயங்களுக்கிடையே இந்த விஷயத்தைப் பற்றியும் ராமகிருஷ்ணய்யாவுக்கு எழுதினேன். அவர் எழுதிய பதிலாவது :

'நான் அவருக்குச் சாப்பாடும் ஏனைய பொருள்களும் கொடுத்திருக்கிறேன் ; பலமுறை உங்களைவிட அதிகமாகப் பணமும் கொடுத்திருக்கிறேன். இன்னமும் நாம் கொடுப்போமென்றும் சொல்லியிருக்கிறேன்... அவர் திருமணத்திற்குப் பிறகு ஒரு பெரிய மனையில் அமைந்த வீட்டையும் கொடுத்திருக்கிறேன். அந்த மனையில் இன்னும் இரண்டு வீடுகளேனும் கட்டலாம்...'

இந்தக் கடிதம் வரும்வரையில் ராமகிருஷ்ணய்யா இவ்வளவு தொகையை (ரூ. 1505) இவருக்காகச் செலவு செய்துள்ளாரென்பது எனக்குத் தெரியாது. இங்கு ராஜமகேந்திரவரத்தில் ஒவ்வொரு மணமகனுக்கும் இவ்வளவு தொகை செலவு செய்வதற்குச் சங்கத்தினரிடம் பணம் கிடையாது. இருந்தாலும் தங்குதடையில்லாமல் செலவு செய்ய மாட்டார்கள். ஓரளவு மனத்தாங்கல் தோன்றிய உடனே, எனக்கு விரோதிகளாயிருந்த பெரிய மனிதர்கள் சிலர் தம்மிடம் ஆலோசனை கேட்கச் சென்ற ஓரிரு மணமக்கள் உதவியால் ஏனைய மணமக்களையும் தம்மிடம் வரவழைத்துக்கொண்டு என்மேல் குற்றஞ்சாட்டி, சங்கத்தினருக்கு விண்ணப்பங்கள் அனுப்புமாறு தூண்டி வந்தனர். எனக்கு இரண்டு வகைகளில் எதிரிகள் தோன்றி இடையூறு விளைவித்துக் கொண்டிருந்தனர். ஒரு சாரார் விதவை மறுமணத்திற்கு எதிர்க் கட்சியினராக இருந்து என்னை வெறுப்பவர்கள் ; இன்னொரு சாரார், விவேகவர்தனியில் நான் அவர்கள் செயல்களை அம்பலப்படுத்துவதால், அடிபட்ட பாம்புகள்போல் பழிவாங்குவதற்காகக் காத்துக் கொண்டிருப்பவர்கள். இவர்களில் எங்கள் சங்கத்தைச் சேர்ந்தவர்களும் ஓரிருவரிருந்தனர்.

திருமணம் செய்துகொண்ட மாணவர்களில் சிலர் தமக்கு ஏற்படும் சிறு இடையூறுகளையும் கோடி மடங்காக்கிப் பறைசாற்றி முறையிட்டு வரலாயினர். அவரவர்கள் அனுபவித்த இடையூறுகள் அந்த அளவு பெரிதுபடுத்தத் தக்கன அல்ல என்று நான் சொல்ல முடியும். இந்தத் திருமணங்கள் செய்து கொண்டவர்களில் யாருக்கும் அது வரையில் சொந்த வீடுகள் இருந்ததில்லை. அத்தகையோர் அனைவருக்கும் குடியிருக்க வீடுகள் தரப்பட்டன; வீட்டில் வேலை செய்வதற்கு வேலையாட்கள் கொடுக்கப்பட்டனர்; தேவை ஏற்படும்பொழுது அவர்கள் சமையல்கூடச் செய்து வைத்து வந்தனர். சாப்பாட்டுச் செலவுகளுக்கு மட்டுமல்லாமல், கல்லூரிச் சம்பளங்கள், மற்றும் புத்தகங்கள், துணிமணிகள் வாங்கவும் பணம் கொடுக்கப்பட்டது. வைத்தியச் செலவுகளையும், வீட்டில் சுகதுக்க நிகழ்ச்சிகளுக்கான செலவுகளையும் சங்கத்தினரே ஏற்றுக்கொண்டு வந்தனர். யாருக்காவது ஓரளவு கஷ்டம் வந்தால், நானும் கவர்ராஜு அவர்களும் சென்று விசாரிப்பதுடன், வேண்டிய உதவிகள் எல்லாம் செய்து வந்தோம்.

நண்பர்தம் உதவியுடன் முயற்சி செய்து நான் ராஜமகேந்திரவரத்தில் வித்திட்டு முளைவிட்ட கைம்பெண் மறுமண இளங்கொடிக்குப் பற்றுக்கோடாக அமைந்து, நாலாப் பக்கங்களிலும் அது படர உதவிய பைடா ராமகிருஷ்ணய்யா அவர்கள் இளம்விதவையரின் துரதிருஷ்டத்தினால் 1885 மார்ச் 28 ஆம் நாள் விடியற்காலையில் பொன்னுலகை எய்திவிட்டார். அவர் முதலிரண்டு திருமணங்களுக்குச் செய்த செலவுகள், பிறகு கொடுத்த ரூபாய் பத்தாயிரம், கட்டித் தந்த வீடுகள், மகளிர் மறுமண முன்னேற்றத்திற்குச் செய்த பிற செலவுகள் அனைத்தும் சேர்ந்து ரூபாய் இருபதினாயிரம் ஆயிற்று. முதன் முதலில் கொடுப்பதாக வாக்களித்த முப்பதினாயிரத்தில் இந்த இருபதினாயிரம் போக எஞ்சிய ரூபாய் பத்தாயிரத்தை விரைவில் கொடுப்பதாக வாக்களித்திருந்தார். இறப்பதற்கு நான்கு நாட்களுக்கு முன்னர், தம்மைப் பார்க்க வந்த ஆத்மூரி லக்ஷ்மீ நரசிம்மத்தைச் சங்கத்தின் சார்பில் பொறுப்பாளராக (trustee) நியமித்து, ரூபாய் பத்தாயிரத்தைத் தம் உயில் மூலமாகச் சங்கத்திற்குக் கொடுத்து அளித்த வாக்கை அவர் நிறைவேற்றிவிட்டார்.

அவர் எழுதிய உயில்கள் இரண்டு.

முதல் உயிலில், விதவை மறுமணச் சங்கம் என்று குறிப்பிட்ட இடத்தில் ராஜமகேந்திரவரம் என்றோ, பொறுப்பாளர் என்ற இடத்தில் லக்ஷ்மீநரசிம்மம் என்றோ எழுதப்படவில்லை. விதவை

மறுமணச் சங்கம் ஒன்று மட்டுமே இருந்ததால் தனியாக ராஜ மகேந்திரவரம் என்று குறிப்பிட வேண்டிய தேவையில்லை. தம் பெயரைச் சேர்க்க வேண்டுமென லக்ஷ்மீநரசிம்மம் ராமகிருஷ்ணய் யாவுக்குக் கடிதம் எழுதிச் சேர்ப்பதற்குள்ளாகவே அவர் இறக்க நேர்ந்தது.

இரண்டாவது உயிலுடன் இணைக்கப்பட்ட பட்டியலில், இங்கிருந்த வர்களில் முதல் திருமணமும், கடைசித் திருமணமும் செய்து கொண்டவர்கள் பெயர்களைத் தவிர, திருமணம் செய்து கொண்ட மற்றவர் பெயர்கள் குறிக்கப்பட்டு, அவரவர் வசத்திலிருந்த வீடுகள் அவரவர்க்கு வழங்கப்பட்டதாக எழுதப்பட்டிருந்தது.

ராமகிருஷ்ணய்யாவின் மறைவுக்குப் பிறகு அவர் விதவை மறுமணச் சங்கத்தினர்க்கு எழுதிக் கொடுத்த உயில்கள் இரண்டை யும் ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்கள் கொண்டுவந்து சங்கத் திற்குக் கொடுத்தார். அவர் சங்கத்தின் பொருளாளரானதால் மரண சாஸனங்கள் அவர் பொறுப்பிலேயே இருந்து வந்தன.

1886 ஏப்ரல் 3ஆம் தேதி சங்கத்தின் செயற்குழுக் கூட்டத்தில், 'சங்கத்திற்கு உதவும் வகையில் ராமகிருஷ்ணய்யா அவர்கள் எழுதி வைத்த சாஸனம் பதிவு செய்யப்பட வேண்டும்' என்று முடிவு செய்யப்பட்டது. முடிவின்படி உயில்கள் இரண்டையும் எடுத்துச் சென்று பதிவு செய்வதற்குச் (ரெஜிஸ்டர்) சங்கத்தின் துணைச் செயலாளரான ஸோமம்சி பீமசங்கரம், லக்ஷ்மீநரசிம்மத்திடம் சென்று கேட்க, பத்தாயிரம் ரூபாய் குறிப்பிடப்பட்ட உயிலைத் தம்மிடமே வைத்துக்கொண்டு, எஞ்சிய உயில் ஒன்றை மட்டும் கொடுத்ததனால் பீமசங்கரம் ஓர் உயிலை மட்டும் 1886 மே 6ஆம் தேதி சப்-ரிஜிஸ்ட்ரார் முன்னிலையில் வைக்க வேண்டியதாயிற்று. ஜூன் 26 அன்று, லக்ஷ்மீ நரசிம்மம் சப்-ரிஜிஸ்ட்ரார் அலுவலகத்திற்குச் சென்று, உயிலை ராம கிருஷ்ணய்யா எழுதிக் கொடுத்ததாகச் சாட்சியம் கூறினர்.

அதற்கடுத்த நாள், அதாவது ஜூன் 27ஆம் தேதி நடந்த செயற் குழுக் கூட்டத்தில், எஞ்சியிருந்த இரண்டாவது உயிலையும் பதிவு செய்வதற்குத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்தத் தீர்மானத் தின் அடியில் நியாபதி சுப்பா ராவ் பந்துலு, ஆத்மூரி லக்ஷ்மீ நரசிம்மம், நான், ஸோமம்சி பீமசங்கரம், பசவராஜு கவர்ராஜு, மாக்கர்ல வெங்கடசுப்பா ராவ் நாயுடு ஆகியோர் கையெழுத் திட்டோம்.

ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம், ராமகிருஷ்ணய்யாவின் பத்தாயிர ரூபாய் உயிலைப் பதிவு செய்வதற்குக் கொடுக்காமற் போவதற்கும், கொடுக்

காமல் இருக்க வேண்டுமென்று முடிவு செய்திருந்தாலும் வெளியே சொல்லாமல், செயற்குழுவினரின் தீர்மானத்தின் கீழ்க் கையெழுத் திட்டதற்குமான காரணத்தை ஓரளவு சொல்ல வேண்டியுள்ளது.

நான் கல்லூரியில் நான்காவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்த பொழுது அவரிடம் நாங்கள் சில பாடங்கள் கேட்ட வகையில் அவர் எனக்கு ஆசிரியர் ஆவார். நெருங்கிய மாணவன் ஆனதால் எனக்கு அவர் பிராம்ம சமாஜக் கொள்கைகளைப் போதித்து எங்கள் வீட்டில் நான் நடத்திவந்த மாணவர்க் கூட்டங்களுக்கு வந்து கொண்டும், என்னை ஊக்குவித்தும் வந்தார். இளம் பருவத்துக் கதைகள் ஒரு பக்கத்திலிருக்க, அவர் மீண்டும் ராஜமகேந்திரவரம் வந்தபிறகுங்கூட மகளிர் மறுமணக் கோட்பாட்டில் எனக்குப் பல வழிகளில் உதவி செய்து வந்தார். இருந்தாலும் எனக்கு நெருக் கத்தைவிட நியாயமே விருப்பமானது. நான் அவரை இப்பொழுது எதிர்க்க வேண்டிவந்தது.

நான் அக்காலத்தில் விதவை மறுமண விஷயத்தில் சிறப்பாகப் பாடுபட்டு வந்தாலும், நகராட்சி மன்றம் மற்றும் சமூகப் பணிகளிலும், பத்திரிகை நிர்வாகத்திலும், புத்தகங்கள் எழுதுவதிலும், அதிகாரக் கொடுமை எதிர்ப்பு முயற்சிகளிலும், சொற்பொழிவுகளிலும், பழைய நூல்களை வெளியிடும் பணியிலுங்கூடச் சம அளவிலேயே பாடுபட்டு வந்தேன். நான் வெளியிட்டுவந்த விவேகவர்தனி, தீய நடத்தை கொண்டவரனைவரையும் கதிகலங்கச் செய்வதாக இருந்தது.

உயர்நீதி மன்றத்தினர் ஒரு முறை, லஞ்சம் வாங்குவதற்குப் பழகிக் கைதேர்ந்த ஒரு நீதிபதியை எங்கள் ராஜமகேந்திரவரத்திற்கு அனுப்பினர். இவர் லஞ்சம் வாங்கும் முறை போலூரி ஸ்ரீராமுலுவின் முறையை விடச் சற்றுக் குறைவானதாகும். இவர் சாட்சியங்களை யெல்லாம் முறையாகப் பெற்றுக்கொண்டு, தீர்ப்பு சொல்லப்போகும் நேரத்தில் இரு தரப்பினரிடமிருந்தும் அவர்கள் கொடுக்கக்கூடிய தொகையை லஞ்சமாகப் பெற்றுக்கொண்டு, வழக்குத் தாள்களை யெல்லாம் நியாய நோக்கோடு பார்த்து, நியாயம் இருக்கும் தரப் பினர் பத்து ரூபாய் கொடுத்தாலும் அத்துடன் திருப்தியடைந்து, அவர் பக்கமே தீர்ப்புச் சொல்லி, நியாயமற்ற தரப்பினர் இருநூறு ரூபாய் கொடுத்தாலும் திருப்பிக் கொடுத்து விடுவார். அதனால் அவர் தீர்ப்பு நியாயத்துக்குப் புறம்பானதென்று யாரும் சொல்ல இயலாது. அத்தகைய நீதிபதியின் லஞ்சம் வாங்கும் பழக்கத்தை நிறுத்த வேண்டுமென்று எங்கள் விவேகவர்தனி பணியாற்றத் தொடங்கியது. இவர் விஷயமாக ஹாஸ்யசஞ்சீவனியில் எழுதப்

பட்ட உரையாடல்களைப் படித்து, சில நாட்கள் லஞ்சத்தை நிறுத்தி விட்டு, ஆறு மாதங்கள் ஓய்வு எடுத்துக் கொண்டு, வேறு இடத் துக்கு வேலை மாற்றத்திற்காக முயற்சித்தாரெனினும், உயர்நீதிமன்றத் தினர் ஒப்புக்கொள்ளாததால் எங்கள் பட்டணத்திற்கே மீண்டு வர வேண்டியவரானார். இரண்டாம் முறை வந்த பிறகு சில காலம் நல்ல நடத்தையுடனிருந்துவிட்டு, விரைவிலேயே இரகசியமாகக் கை நீட்டத் தொடங்கினர். உடனே எங்கள் விவேகவர்தனி குறிப்பாக எழுதியவண்ணம் போராடத் தொடங்கியது. அந்தத் தாக்குதலைத் தாங்க முடியாமல் அவர் மீண்டும் ஓய்வு பெற்றுக் கொண்டு, மறுபடியும் எங்கள் ஊருக்கு வராமல் தப்பிச் சென்று விட்டார்.

அத்தகைய விவேகவர்தனி தன்னைச் சார்ந்தவர் தம் அக்கிர மங்களை வெளியிடாமல் ஓரவஞ்சமாக நடந்து கொள்கிறதென்று சில நண்பர்கள் என்னிடமே கூறினர். எங்கள் பத்திரிகையைச் சார்ந்தவர் தம் தீயநடத்தையை மூடிமறைப்பதற்கு வேண்டுமென்றே எப் போதும் முயன்றதில்லையென்றாலும், சிறு குறைகளைப் பொருட்படுத் தாமல் வந்தது. சிறு குறைகளைப் பொருட்படுத்தாமல் இருந்ததால் ஓரிருவர் அச்சம் தெளிந்து மனம் போனவழி நடக்கவும் தொடங்கினர். எங்கள் விவேகவர்தனி, மனிதர்களிடம் காணும் மிகச் சாதாரண மான பலவீனத்தைக் குறையன்று எப்படிச் சொல்ல முடியுமா ?

ஆத்மூரி லஷ்மீ நரசிம்மம் லஞ்சம் வாங்குவதில்லை யென்றாலும், தம் நீதிமன்றத்தில் வேலை இருப்பவரிடம், மிகவும் குறைந்த விலைக்குத் தானியங்கள் முதலிய பொருள்களை வாங்கும் பழக்கமுடையவர். தாம் மேற்கொள்ளும் பணிகளுக்குக் கட்சிகாரர்களிடம் சந்தா வசூலித்துப் பணம் திரட்டி வந்தார். தம் கிராமத்திற்குப் போக வேண்டி வந்தபொழுது வழியிலாவது, அல்லது வழி அருகாமையி லாவது நிலத் தகராறு பற்றிய வழக்குகள் எவையேனும் உள்ளனவா என்று விசாரித்து, அவ்விடங்களைத் தாம் நேரிலே பார்க்க வேண்டு மென்று சொல்லித் தாமும், தம் குடும்பத்தினரும் பல்லக்குகளில் போக வர ஆகும் செலவுகளை வழக்காடுவோரிடம் வாங்கி வந்தார். தாம்பீக நடத்தையும், பொதுமக்களின் பழக்க வழக்கங்களை அப்படியே பின்பற்றுதலும் அவருடைய குறைகளில் முக்கியமானவை. 1886 மார்ச்சு 31 ஆம் தேதி வெளியான விவேகவர்தனியில் ' தம்பா சார்ய விலஸன ' என்னும் பிரகசனத்தின் (நையாண்டி நாடகம்) முதல் பாகத்தில் முக்கிய பாத்திரங்களான தம்பாசார்யுலு, நண்பர் கள் ஜம்பு கேசுவர சாஸ்திரி, ஸ்வாமி சாஸ்திரி ஆகியோரின்

பாத்திரங்களாக வருணிக்கப்பட்டவற்றில் இரண்டு மூன்று இவரிடம் காணப்பட்டவை ஆகும்.

அவர் இதைப் படித்த பிறகுகூட வழக்கம் போலவே என்னிடம் பேசி வந்தார். ராமகிருஷ்ணய்யாவின் உயில்களை அவர் எனக்குக் காட்டிய பொழுது, மேலும் இரண்டு அல்லது மூன்று டிரஸ்டீக்களைத் தம்முடன் சேர்த்துக்கொண்டு பணியாற்றுமாறு நான் கூறிய அறிவுரையை ஆமோதிப்பது போலவே அவர் பேசினார். ராம கிருஷ்ணய்யாவின் மரணத்தைக் குறித்து ஏப்ரல் 7 ஆம் நாள் விவேகவர்தனியில் வெளியான கட்டுரையில், நான் அவரிடம் பேசிய பேச்சின் பொருள் தொனிக்கும் பகுதிகள் காணப்பட்டன.

இப்படியிருக்க மே மாத முதல் வாரத்தில் 'சத்யகாமி' என்ற பெயருடன் ஒருவர் விவேகவர்தனிக்கு இவ்வாறு எழுதினார்: 'இந்த ஊரிலிருக்கும் ஒரு பெரிய மனிதர், ராமகிருஷ்ணய்யா அவர்கள் தம் உயிலின் மூலம் கொடுத்த ரூபாய் பத்தாயிரத்தைத் தம்மிடம் கொடுக்க வேண்டுமென்று வீரேசலிங்கம் அவர்கள் கேட்ப தாகச் செய்தி பரப்பி வருகிறார். அந்தச் செய்தியில் உண்மை யாதேனும் இருக்கிறதா என்பதை உங்கள் பத்திரிகை மூலம் தெரிவிக்க வேண்டுகிறேன்.'

இந்தக் கடிதமும், நான் இதற்கு எழுதிய பதிலும் மே 19, விவேக வர்தனியில் வெளியிடப்பட்டன :

'சத்தியகாமி அவர் கூறிய செய்தியைப் பரப்பிவரும் பெரிய மனிதர் ஏதோ ஒரு கெட்ட எண்ணத்தில் மேற்கண்ட வதந்தியைக் கிளப்பி வருகிறாரே தவிர, அந்தப் பெரிய மனிதரின் சொற்களில் கடுகளவும் உண்மை இல்லை. விவேகவர்தனியில் வெளியிடப்பட்ட பொருள் தொனிக்கும் சொற்களையே நான் ஒரு முறை மகாராஜஸ்ரீ ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்களிடம், அவருடைய நன்மையும், சங்கத்தின் வளர்ச்சியும் விரும்பிச் சொல்லியுள்ளேன். அவ்வாறு நியமிக்கப்படும் டிரஸ்டீக்களில் என் பெயர் தேவையில்லையென்றும் சொல்லியிருக்கிறேன். இந்த விஷயம் பற்றி யாருக்கேனும் சந்தேகம் தோன்றியிருக்குமானால் லக்ஷ்மீநரசிம்மம் அவர்களையே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அவர் இந்த விஷயத்தில் பொய் சொல்ல மாட்டார்.

கந்துகூரி வீரேசலிங்கம்.'

மேற்சொன்ன கடிதம் வந்த பிறகு, என் பதிலுடன் அது வெளியிடப் படுவதற்கும் இடையில், 1886 மே 9 ஆம் நாள் ஒரு விசித்திர நிகழ்ச்சி நிகழ்ந்தது.

லக்ஷ்மீநரசிம்மம் தம் நண்பர் கூட்டத்தைப் பார்க்கப் போகும் பொழுதெல்லாம் சக நீதிபதிகள், 'ஜம்புக சாஸ்திரிகளே வாங்க! ஜம்புக சாஸ்திரிகளே விசேஷம் ஏதேனும் உண்டா?' என்று கேலி செய்யத் தொடங்கினராம்! மேலும், கலகப்பிரியர்களான சில பெரிய மனிதர்களும் லக்ஷ்மீநரசிம்மத்திடம் சென்று, 'தம்பாச்சார்ய விலஸனம்' உங்களை வைத்தே எழுதப்பட்டது; நீங்கள் பேசாம லிருப்பது ஆண்மைக்கு அழகல்ல' என்று அவரைத் தூண்டிவிட்டு வந்தனராம். அவர்கள் பேச்சைக் கேட்டுக் கோபாவேசம் கொண் டவராகி, நாற்பத்தெட்டு நாட்கள் பேசாமலிருந்தவர், பிறகு திடீரென்று, 'தம்பாச்சார்ய விலஸனம்' தாங்கி வந்த விவேகவர் தனியை மிக அற்புதமான முறையில் லக்ஷ்மீநரசிம்மம் எரிக்கலானார்.

அடுத்த நாள் நான், எங்கள் பத்திரிகைப் பதிப்பாளர் வாயிலாக எழுதி அனுப்பிய கடிதத்திலிருந்து இந்த அற்புத முறை தெளி வாகும் :

'மகாராஜஸ்ரீ ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் செட்டியார் அவர்களுக்கு விவேகவர்தனி பிரிண்டர் அண்ட் பப்ளிஷர் கூரெள்ள ராமய்யா வின் விண்ணப்பங்கள். இந்த மாதம் 9ஆம் தேதி மாலை விவேக வர்தனி பத்திரிகையை ஒரு கழியில் கட்டி, பழைய செருப்பையும் துடைப்பதையும் உடன் கட்டி, விவேகவர்தனியில் வெளியிட்ட வரையும், வெளியிட வைத்தவரையும், விவேகவர்தனியையும் பங்காரய்ய மேடை எனும் இடத்தில் எரிக்கப் போகிறோமென்றும், இஷ்டப் பட்டவர்கள் வந்து பார்க்க வேண்டுமென்றும் உங்கள் கோர்ட்டு, பிரஸ் ஆபீஸ் பணியாட்கள் சிலரும்,உங்கள் இலாகாவைச் சேர்ந்த சில நபர்களும் பல வகையான வசைமாரியைப் பொழிந்து கொண்டு பத்திரிகையையும், பப்ளிஷரையும், (பிரசுரிப்பவரையும்) ஆசிரியரையும் அவமானப் (insult) படுத்தும், மற்றும் அவமரியாதை (defame) செய்யும் நோக்கத்துடன் தெருக்கள் வழியாகத் தமுக்கடிக்கச் செய்தும், அந்த வேலை உங்கள் உத்தரவின்படி நடப்ப தாகவும் பறையறைந்தனர். இதுபற்றி நான் சட்டப்படி நடவடிக்கை எடுக்க எண்ணியிருக்கிறேனுகையால் இந்த விஷயத்தில் உங்களுக்கு எந்த அளவு பங்கு இருக்கிறதென்பதை நான்கு நாட்களில் தெரிவிக்க வேண்டுகிறேன். தயை செய்யவேண்டும்.'

அதற்கு லக்ஷ்மீநரசிம்மம் ஆங்கிலத்தில் கீழ்க்கண்டவாறு பதில் அனுப்பினார் :

'உங்கள் பதிவு அஞ்சலுக்கு பதில் தரும் வகையில் நான் சொல்வது : நான் விசாரித்ததில் உங்கள் கடிதத்தில் சொல்லப்பட்டி

ருக்கும் விஷயம் உண்மையல்ல என்று தெரிய வருகிறது. மேலும், நீங்கள் எழுதிய கடிதத்தில் அவதூறானதும், பழித்துக் கூறுவதுமான பகுதிகள் காணப்படுகின்றன. மற்றும் நீங்களும், உங்கள் ஆட்களில் ஓரிருவரும் மிகவும் இழித்துப் பேசியும் வருவதாக அறிகிறேன். எனவே இன்றிலிருந்து பதினான்கு நாட்களுக்குள் தக்க வகையில் மன்னிப்புக் கோரப் படவில்லையெனில், நான் உங்கள் மீதும், உங்கள் ஆட்கள் மீதும் சட்டப்படி நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ராஜமண்ட்ரி, உங்கள்...
16 மே, 1886. எ. எல். நரசிம்ஹம்.'

மேற்கடிதத்திற்குக் கீழ்க்கண்ட பதில் அனுப்பப்பட்டது :

'பதிலாக... என் கடிதத்தில் எத்தகைய அவதூறானதும் பழித்துக் கூறுவதுமான பகுதிகள் இருப்பதாகத் தெரியவில்லை என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். மற்றும், இழித்துப் பேசுவது என்று எதைக் குறிப்பிடுவதாக இருப்பினும், அப்படியொன்றும் பேசியதாக என் கவனத்துக்கு வரவில்லை. மேலும், 'உங்கள் ஆட்களில் ஓரிருவர்' என்ற தொடர் எனக்குப் புரியும்படியாக இல்லை. ஆகவே நான் மன்னிப்பு ஒன்றும் கேட்கத் தயாராக இல்லை. எனவே, நீங்கள் யார் மீது வேண்டுமானாலும் சட்டப்படி நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

20 மே, 1886. உங்கள் பணிவுள்ள...
கே. ராமய்யா.'

விவேகவர்தனி எரியூட்டு விஷயமாக நடத்தப்பட்ட வேலைக்கு வழக்கைத் தொடர்ந்து, இறுதிவரைப் பத்திரிகையை நடத்துவதென்று முடிவு செய்துகொண்டு, சாட்சியங்களைத் திரட்டி, தேவையான ஏற்பாடுகளுடன் தயாராக இருந்தேன். இதற்கிடையில் எங்கள் இருவரின் நண்பர்களும், நட்புடன் பழகியவர்கள் கோர்ட்டேறி வழக்காடுவது முறையல்லவென்றும், உட்பூசல்களால் எதிர் தரப்பினருக்கு இன்னமும் கொண்டாட்டமாகி விடுமென்றும், நாங்கள் எடுத்துக்கொண்ட பெரிய காரியங்கள் தடைப்பட்டுப் போகுமென்றும் எங்களைச் சமாதானப்படுத்தப் பாடுபட்டனர். நான் முதலிலிருந்தே பிடித்த பிடியை விடாத முரட்டுச் சுபாவம் கொண்டவனானதால், எழுத்து வடிவத்தில் மன்னிப்புக் கேட்கப் பட்டாலொழிய சமாதானத்திற்கு வழியில்லையென்று தெளிவாகச் சொல்லிவிட்டேன். சிறிது காலம் இடைத்தூதுகள் நடந்த பிறகு

லக்ஷ்மீநரசிம்மம் 1886 ஆகஸ்ட் 6 ஆம் நாள் கீழ்க்கண்ட மன்னிப்புக் கடிதத்தை அனுப்பினுர் :

'மார்ச்சு மாதம் 11ஆம் தேதி விவேகவர்தனியின் ஹாஸ்யசஞ்சீவனிப் பகுதியில் வெளியான விஷயங்கள் ஒரு நபரை எண்ணி எழுதப் பட்டது என்று என் நண்பர்கள் சிலர் என்னிடம் சொன்னதன் பேரில் எனக்குச் சினம் வந்தது. மே மாதம் 9 ஆம் தேதி மேற்படி விவேகவர்தனியை எரிக்கும் விஷயமாக நடத்திய வேலைக்கு நான் வருந்துகிறேன். மேலும் அப்பொழுது என் பணியாட்கள் சிலர் உங்களைப் பழித்துப் பேசியதாக நீங்கள் தெரிவித்தீர்கள். அப்படிச் செய்வது எந்த வகையிலும் என் எண்ணமல்ல. அவர்களைக் கண்டித்து விட்டேன்... அதற்கு 'அப்பாலஜி' (மன்னிப்பு) கேட்கிறேன்...'

பிறகு, 1886 செப்டம்பர் 8 ஆம் தேதி லக்ஷ்மீநரசிம்மத்தின் மன்னிப்புக் கடிதமும் விவேகவர்தனியின் விளக்கமும், முதலிலிருந்து பரிமாறிக் கொள்ளப்பட்ட கடிதங்களும் வெளியிடப்பட்டன.

வாதக்கனல் முழுவதும் அடங்கி விட்டதால் லக்ஷ்மீநரசிம்மம் தம் மனம் போனபடி நடந்து கொள்ளலாம் என்று எண்ணினுர். தத்தம் அக்கிரமங்களை விவேகவர்தனியில் வெளியிட்டு வந்ததால் எனக்குப் பகைவர்களானவர்களனைவரும் லக்ஷ்மீநரசிம்மத்திற்கு ஆலோசனைகள் கூற முற்பட்டனர். அந்த நண்பர்களில் சிலர், விவேகவர்தனி எரிப்பு விஷயத்தில், முதலில் ஒன்றும் தெரியாது என்று சொல்லி விட்டுப் பிறகு மன்னிப்புக் கேட்பது அவமானத்திற்குரியதென்று அவரைக் கிண்டல் செய்து, பழி தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று தூண்டிவிட்டனர். ராமகிருஷ்ணய்யா கொடுத்த 10 ஆயிரத்தில் ஒரு பகுதியும் திருமணங்களுக்குப் பயன்படாமல் செய்துவிட்டால் இனிமேல் விதவைமறுமணம் ஒன்றுகூட நடக்காதென்றும், அப்படிச் செய்வதே என்னை வெல்வதற்குரிய வழியென்றும் லக்ஷ்மீநரசிம்மக் கனவான் ஏற்கனவே எண்ணியிருந்தார்! ஆகா! இதென்ன அறிவீனம்! திருமணங்கள் நடக்காமல் போகுமாலுல் எனக்கென்ன மானக்குறைவு வருமோ? பழிவாங்க வேண்டுமென எண்ணினுல் எனக்குக் கெடுதல் செய்யவேண்டுமே யொழிய, அநாதையரை உய்விக்கும் சமூகத் தொண்டிற்குக் கேடு செய்வது என்ன நியாயமோ?

தன்னல விழைவின் காரணமாக, விதவைத் திருமணம் செய்து கொண்டவர் சிலர் இந்தத் தவருன திட்டத்திற்குத் துணையாயினர். 10 ஆயிர ரூபாய் மூலம் வரும் வட்டியனைத்தையும் உங்களுக்கே

கொடுக்கிறேனென்று ஆசை காட்டி, லக்ஷ்மீநரசிம்மம் ராஜமகேந்திர வரத்திலுள்ள விதவையரை மணந்த மணாளர்களைத் தம் பக்கம் சேர்த்துக்கொண்டு, ராமகிருஷ்ணய்யாவின் உயிலில், 'திருமணங் கள் செய்துகொண்ட விதவையரின், அவர்தம் கணவன்மாரின், மற்றும் அவர்தம் குழந்தைகளின் பாதுகாப்பிற்காக' என்று இருந்த பகுதியை, இதுவரையில் திருமணம் முடித்துக் கொண்டவர்களுக்கு மட்டுமே என்று புதிய பொருளை உருவாக்கி, 'விதவைத் திருமணங் களை நடத்துவதற்கு' என்று எழுதிய பகுதியை முற்றிலும் பொருட் படுத்தாமல், இதுவரையில் திருமணங்கள் செய்துகொண்டவரின் பாதுகாப்பிற்கும், சில்லறைச் செலவுகளுக்கு மட்டுமே வட்டியைச் செலவிடலாமென்றும் ராமகிருஷ்ணய்யா தம்மிடம் இரகசியமாகக் கூறியதாக ஒரு புதிய கதையைக் கட்டிவிட்டு, அக்டோபர் 5 ஆம் தேதியிட்ட தம் அறிக்கையை, வெளியூர்களிலுள்ள மணாளர்களுக்கு அனுப்பினார்.

இந்த அறிக்கையை, முதல் திருமணம் செய்துகொண்ட கோகுல பாட்டி ஸ்ரீராமுலுவுக்கு அனுப்பிய பொழுது அவர் எழுதிய பதிலில், 'நன்கொடையாளருடைய முக்கிய எண்ணத்தின்படிப் பத்தாயிரம் ரூபாய்க்குக் கிடைக்கும் வட்டியை இதுவரையில் திருமணம் செய்து கொண்டவருக்குச் சமமாகப் பங்கிட்டுத் தருவதுபற்றி என் கருத்தைக் கேட்டு அறிக்கையை அனுப்புவதற்கு மிக்க நன்றி. உங்கள் அறிக்கையிலிருந்து, நன்கொடையாளர் உங்களிடம் எப்பொழுது அப்படிச் சொன்னாரென்பதற்குச் சான்று தெரியவில்லை. இறக்கும் சமயத்தில் அவர் எண்ணம் அதுவேயென்று நீங்கள் மனப்பூர்வ மாகச் சொல்லி, அந்த எண்ணத்தை நீங்கள் நிறைவேற்றக் கருதி யிருந்தால் இப்பொழுது திருமணங்களைச் செய்துகொண்டவர்தம் கருத்துக்களைத் திரட்டும் முயற்சியில் நீங்கள் இறங்கியதற்குரிய காரணம் எனக்கு விளங்கவில்லை. நீங்கள் இப்பொழுது கருத்துக் களைத் திரட்டத் தொடங்கியிருப்பதால், நன்கொடையாளர்தம் எண்ணம் அதுவாக இருக்குமா, இல்லையா யென்ற ஐயம் எனக்குத் தோன்றுகிறது. வட்டியை 12 குடும்பங்களுக்கு மட்டுமே பங்கிட்டுத் தந்தால் இனிமேல் நாம் திருமணங்கள் நடத்த முடியுமா? தொகையை ஒருவரேயின்றி அதிகமான பேருடைய பொறுப்பில் ஒப்படைத்து, வரும் வட்டியை அசலுடன் சேர்த்துக்கொண்டு, தேவையான பொழுது உண்மையில் கஷ்ட நிலையில் இருப்பவருக்கு மட்டும் வட்டியைக் கொண்டு உதவி செய்து, வட்டியில் எஞ்சிய பகுதியைக் கொண்டு திருமணங்கள் நடத்த வேண்டுமென்பது என் கருத்து.'

இவருக்கும், மற்றும் இங்கிருந்த மணமக்களுக்குமிடையே இருந்த வேறுபாடு மேற்கண்ட கடிதத்திலிருந்து தெளிவாகும். தக்க உத்தியோகங்களிலிருந்த கோதண்டராமய்யா, சேஷய்யா ஆகியோர் திருமணங்களுக்கில்லாமல் வட்டி முழுவதையும் தமக்குள்ளே பங்கிட்டுக்கொண்டு விழுங்க வேண்டுமென்று இந்தப் புதியவழியைக் கண்டுபிடித்தனர். அதன் பிறகு லக்ஷ்மீநரசிம்மம், உயிலில் குறிப்பிடப்பட்ட விதவைத் திருமணச் சங்கம் ராஜமகேந்திரவரச் சங்கமே அல்லவென்று சொல்லும் அளவிற்குத் துணிந்துவிட்டார். உயிலின் மூலம் அப்படியிருக்க, அதன் நகல்கூடச் சங்கத்தார் எவரிடமும் இல்லை. அதனால் டிசம்பர் 19 அன்று நடந்த செயற்குழுவில், 'பி. ராமகிருஷ்ணய்யாவினுடைய ரூபாய் 10,000 பற்றிய உயிலின் அச்சுப் பிரதிகள் செயற்குழு உறுப்பினருக்கு வழங்கப்படவேண்டு' என்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. லக்ஷ்மீநரசிம்மம் அந்த உயிலைத் தம் வைதிக அச்சகத்திலேயே அச்சடித்துச் சங்க உறுப்பினர்க்கு அனுப்பி வைத்தார்.

விதவைத் திருமணச் சங்கமென்று உயிலில் சொல்லப்பட்டது ராஜமகேந்திரவரச் சங்கம்தானா? பைடா ராமகிருஷ்ணய்யாவின் நிதியைப் பயன்படுத்துவதற்கு எது சிறந்த வழி? இந்த இரண்டு கேள்விகளையும் விவாதிப்பதற்கு ஜனவரி 9ஆம் தேதி செயற்குழுவின் சிறப்புக் கூட்டம் அழைக்கப் பட்டது. ஆனால், அன்று லக்ஷ்மீ நரசிம்மம் வராமற் போனதால் கூட்டம் 13 ஆம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது. 13 ஆம் தேதியும் லக்ஷ்மீநரசிம்மம் கூட்டத்திற்கு வரவில்லை. அவரில்லாமலே கூட்டம் நடத்தப்பட்டு, பத்தாயிரம் ரூபாய் நிதியைப் பற்றிப் பைடா ராமகிருஷ்ணய்யாவின் உயிலில் சொல்லப்பட்ட விதவைத் திருமணச் சங்கம், ராஜமகேந்திரவரச் சங்கமே என்றும், நிதியிலிருந்து வரும் வட்டியை, இதுவரையில் திருமணம் ஆனவர்களுக்கும், இப்போதைய புரோகிதருக்கும், வல்லூரி புன்னம்மாவுக்கும், அவர் தம் வருங்காலக் கணவருக்கும் குழந்தைகளுக்கும் செலவு செய்து, எஞ்சியதைக் கொண்டு எதிர் காலத்தில் திருமணங்களை நடத்தி, அவற்றுக்காகும் செலவுகளுக்குப் பயன்படுத்த வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

அன்று மாலையே விதவைத் திருமணச் சங்கத்தின் நண்பர்களும் அதன் நலம் பேணுவோரும் கூட்டம் ஒன்று கூட்டி, மேற்கொண்ட தீர்மானங்களின் பொருள் பொதிந்த தீர்மானங்களையே நிறை வேற்றினர். 1887 ஜனவரி 15, 16, 22 தேதிகளில் சங்கத்தின் பொதுக்

குழுக் கூட்டம் மூன்று நாட்கள் நடைபெற்றது. மூன்றும் நாள் கூட்டம் முக்கியமானது. அந்தக் கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன: 'பொறுப்பாளர் (Trustee) திரு. எ. எல். நரசிம்மம், ரூபாய் 10,000 நிதியை மிகச் சிறந்த முறையில் நிர்வகிக்க மேலும் இரண்டு பொறுப்பாளர்களை உடன் சேர்த்துச் கொள்ளவேண்டும். அந்த இரண்டு பொறுப்பாளர்களில் ஒருவர் செயற்குழு உறுப்பினர்களால் தம்மிடையேயிருந்து தேர்ந்தெடுக்கப் பட்டவராக இருக்கவேண்டும்; மற்றொருவர் விதவைத் திருமணச் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர் அல்லது பொது உறுப் பினரிடையேயிருந்து தற்போதைய பொறுப்பாளரால் தெரிந்தெடுக் கப்படவேண்டும்.'

கூட்டத்தின் முடிவில் லக்ஷ்மீநரசிம்மம் எழுந்து, 'சங்க உறுப் பினர்களே! நான் உங்கள் கருத்துக்களைக் கேட்பேனே தவிர அதையொட்டியே நடந்துகொள்ள வேண்டுமென்ற கட்டாயம் எனக்கில்லை' என்று சொல்லி விடைபெற்றுக் கொண்டார்.

1887 ஜனவரி 22 ஆம் நாள் நிறைவேற்றப்பட்ட நான்கு தீர்மானங் களும் பொறுப்பாளர் லக்ஷ்மீநரசிம்மத்தால் மதிக்கப்பட்டு செயல் படுத்தப்படவில்லை. சங்கம் வலுவற்ற நிலையிலிருந்ததை அறிந்து, லக்ஷ்மீநரசிம்மம் அந்தத் தொகையைக் கொண்டு சித்தூர் மாவட்டத் தில் ஒரு கிராமத்தை வாங்கி, 'ராஜா' என்ற பட்டத்தைத் தமக்குச் சூட்டிக் கொண்டு, தாம் சாகும் வரைப் 10 குடும்பத்தினருக்கு ஆண்டுதோறும் முந்நூறு ரூபாய் அனுப்பி வந்தார்.

1886, 1887ஆம் ஆண்டுகளில் சங்கத்தினரால் ஒரு திருமணத் தையும் நடத்த இயலவில்லை. இதற்கிடையில் சங்கம் சில விபத்து களுக்கு ஆளாயிற்று. 1888 ஏப்ரல் 19 ஆம் தேதி இரண்டாம் மணமகனை ராமசந்திர ராவ் காலமானர். அந்த மாதம் 23ஆம் தேதி, நான்காம் மணமகனை சேஷய்யாவின் மனைவி சேஷம்மா பரலோகமடைந்தாள். அதே மாதத்தில் முதல் மணமகனை கோகுலபாட்டி ஸ்ரீராமுலு கிறித்துவ மதத்தைத் தழுவி விட்டார்.

1888 ஜூலை 6 ஆம் தேதி கொம்மராஜு கோபாலத்தின் திருமணம் நடந்தேறியது. அவருக்குக் கொடுக்கப்பட்ட மணமகள் வல்லூரி புன்னம்மா. இந்தக் கல்யாணத்திற்காக ராமகிருஷ்ணய்யா தம் மரணத்திற்கு முன்பே ரூபாய் 300 கொடுத்திருந்தார். 1888 அக்டோபர் 17 ஆம் தேதி கோதண்டராமய்யாவின் இரண்டாம் கல்யாணம் நடந்தது. புதிதாக வழங்க வேண்டிய தேவை யில்லாமல் இவருக்கு ஏற்கனவே வீடு இருந்தது. முதல் மனைவியி

னுடைய நகைகளும் இருந்தன. இவர் சங்கத்தின் தொடர்பில்லாமல் சுதந்திரமாகவே தம் திருமணத்தை முடித்துக் கொள்வதாகச் சொல்லியிருந்தாலும், கடனென்று சொல்லி மீண்டு தீர்க்கப்படாத தொகை, ரூ. 75 சங்கத்திலிருந்து கல்யாணச் செலவுகளுக்குப் பயன் படுத்தப்பட்டது. தம் திருமணத்தைத் தாமே நடத்திக் கொண்ட தாக எழுதி லக்ஷ்மீநரசிம்மத்தின் மூலம், சபாபதி முதலியார் சங்கத் திற்குத் திருமணம் ஒவ்வொன்றிற்கும் தருவதாகச் சொன்ன நூறு ரூபாயையும் கோதண்டராமய்யா வரவழைத்து கொண்டார்.

தம் வீட்டின் ஒரு பகுதியில் கோதாவரி வெள்ளத்தினுல் ஓரளவு சேதம் ஏற்பட்ட பிறகு ராமகிருஷ்ணய்யாவின் உயிலின்படி, மூன்று பாகமாக இருந்த வீட்டை ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் இரண்டு பாகமாகப் பிரித்துக் கொடுத்திருந்தும் அப்படிப் பிரித்துக் கொடுக் கவே யில்லையென்றும், வீட்டைப் பிரித்துக் கொடுக்கவில்லை என்று சொல்வது உண்மையல்ல என்று செயற்குழு தீர்மானம் செய்த பிறகு நீதிமன்றத்துக்குப் போவதாகப் பயமுறுத்தியும், தாம் கடனுக வாங்கிக் கொண்ட தொகையைத் தீர்க்க வேண்டியதில்லை என்று தகராறு வளர்த்தும், தமக்குப் பணம் கொடுக்காமற் போனுல் மறுமணத் தரப்பிலிருந்து விலகி, பிராயச்சித்தம் செய்து கொள்வதாக அச்சுறுத்தியும், உள்ள சங்கத்திற்கு எதிராக அல்பாயுளில் மறைந்து போன மற்ருெரு சங்கத்தை ஏற்படுத்தியும், தமக்குப் பண உதவி செய்யாதவர்களையும், தமக்குச் சாதகமாகப் பேசாதவர்களையும் திட்டுவதற் கென்று பத்திரிகை ஒன்றைத் தொடங்கியும் கோதண்ட ராமய்யாவும், எதிர்தரப்பினரினுல் தூண்டப்பட்ட மற்ற ஓரிருவரும் வருந்தத்தக்க தொல்லைகளைக் கொடுத்து, எனக்கும் சங்கத்தினர்க்கும் ஓரளவுச் சிரமத்தை உண்டாக்கிக் கொண்டு வந்தனர்.

இந்த விதவைத் திருமணச் சங்கத்தில் ராஜமகேந்திரவரத்தைச் சேர்ந்த பெரியோர்களில் முக்காலே மூவ்வீசம் (15/16) பகுதியினர் சேர்ந்திருந்தனர். இருந்தாலும், ஏற்கனவே சொல்லப்பட்ட திரு மணங்கள் இரண்டைத் தவிர, ஐந்தாண்டுக் காலத்தில் புதிய திருமணம் ஒன்றுதான் நடைபெற்றது. 1889 மார்ச்சு 29 ஆம் தேதி இந்தக் கோமட்டி (செட்டியார்) திருமணம் நடந்தது. இனிமேல் புதிய தம்பதியருக்குக் கொடுப்பதற்கு வீடுகள் இல்லை. வீடுகள் கட்டிக் கொடுப்பதற்குப் பணம் கிடையாது. சிலர் சந்தா கொடுப் பதை நிறுத்திக் கொண்டனர். ஆண்டிற்கு ஆறு ரூபாய் கொடுப்பது சிரமமாக இருக்குமென்று, மூன்று ரூபாயாகக் குறைக்கப்பட்டது. மூன்று ஒன்ருக ஆக்கப்பட்டது. அந்த ஒரு ரூபாயையும் பலர்

ஒழுங்காகக் கொடுக்காமலிருந்தனர். மாதச் சம்பளம் கொடுப்பதே சிரமமாகி விட்டதால் புரோகிதரையும், சமையல் பிராம்மணரையும் நிறுத்தி விட்டனர்.

திருமணங்களை என் சொந்தப் பணத்தில் எனக்குத் தோன்றிய வகையில் நானே சங்கத்தின் ஆதரவில் நடத்தி வைக்கலானேன். 1892 இல் இரண்டு திருமணங்கள், 1893 இல் இரண்டு திருமணங்கள், இப்படியாக 1897 இல், நான் சென்னைக்குப் போவதற்கு முன் பத்துத் திருமணங்களை நடத்தி வைத்தேன். இந்தத் திருமணத் தம்பதியருக்கு வீடுகள் தரும் பழக்கத்தையும், நகைகள் போடும் பழக்கத்தையும் வைத்துக் கொள்ளாமல், கால் மெட்டி, தாலி, தாம்பூலம், வாத்தி யங்கள், சாப்பாடு முதலியவற்றிற்கென ரூபாய் 100க்கு மேற்படாமல் செலவு செய்து வந்தேன். 27 ஆவது திருமணத்தை நடத்திவிட்டு நான் ராஜமகேந்திரவரத்தி லிருந்து சென்னைக்குப் போனேன். அங்கு 35 ஆவது திருமணம் நடந்து கொண்டிருக்கும் பொழுது ஆத்மூரி லக்ஷ்மீநரசிம்மம் என்னைப் பார்க்க வந்தார். பணமில்லாமல் நற்காரியங்கள் நின்று போகாவென்றும், ராமகிருஷ்ணய்யாவின் பணத்தோடு நடத்தப்பட்டவற்றைவிட இரண்டு மடங்காக அவருடைய பண உதவியில்லாமலே நடத்தப்பட்டன வென்றும் நான் அவரிடம் விளக்கமாகச் சொன்னேன். பணம் கிடைக்கும் என்ற ஆசையில்லை யாதலால் இப்போதைய மணமக்களிடம் பேராசை யிருப்பதில்லை. எனக்கு அவர்களால் தொல்லையில்லை. வரவரத் திருமணச் செலவை நூறிலிருந்து ஐம்பதுக்கும், ஐம்பதி லிருந்து இருபதுக்கும் குறைத்து விட்டேன். இப்பொழுது நடத்தப் படும் சில திருமணங்களுக்கு ஆகும் செலவுகளை மணமக்களே ஏற்று வருகின்றனர்.

இந்தப் பத்தாண்டுகளில் (1881-1890) நான் தீவிரமான ஆஸ்த்மா இருமலால் தொல்லைப்பட்டு வந்தேன். இருந்தாலும் பகல் 10 மணிக்குக் கல்லூரிக்குச் சென்று, மாலை 5 மணி வரையில் வேலை பார்த்து வந்தேன். மாணவர் சங்கங்களுக்குச் சென்று சொற்பொழி களாற்றி வந்தேன். இன்னிசுபேட்டைப் பள்ளி, மற்றும் பட்டணப் பள்ளியின் செயல் குழுக்களிலிருந்து பணியாற்றி வந்தேன். முகம்மதிய கல்விச் சங்கத்திலும், முகம்மதியர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில், செயலாளராக இருந்து, மாணவர்கள் உணவு விடுதியை நிர்வகித்து வந்தேன். நகராட்சி மன்றம் (Municipal Council), தாலுக் போர்ட்டு, டிஸ்ட்ரிக்ட் போர்ட்டு ஆகியவற்றில் உறுப்பினராக இருந்து பணியாற்றி வந்தேன்.

அப்பொழுது நகராட்சி மன்ற உறுப்பினர்களில் சிலர் லஞ்சத்தின் வாயிலாகச் சுகபோகங்கள் அனுபவித்து வந்தனர். விளக்குக் கம்பங்கள் தேவையான இடங்களிலல்லாமல் தம் வீடுகளின் முன்னர் பொருத்துமாறு உறுப்பினர்கள் செய்து வந்தனர். விளக்குகளின் குத்தகைக்காரர் தெருவிளக்குகளுக்கான எண்ணெயைக் குறைத்து உறுப்பினர் சிலரின் வீட்டு விளக்குகளுக்கு ஊற்ற வேண்டியு மிருந்தது. தெருக்கள், பாதைகள் ஆகியவற்றைச் செப்பனிடுவதற் கென்று முறையாகக் கொடுக்கப்பட்ட பொதுமக்களின் பணத்தில் பெரும்பகுதி இந்தக் கொடியவர்களின் பைகளுக்கே போய்க் கொண் டிருந்தது. பிரபலமானவர்கள் தம் தெருத் திண்ணைகளை அகலப் படுத்தியும், வீடுகளை முன்னேக்கி நகர்த்திக் கட்டியும், தெருக்களை அவ்வளவுக்கவ்வளவு குறுக்கி வந்தனர். நகராட்சிச் சட்ட விதிகள் ஏழைகளைத்தான் பாதித்து வந்தனவே ஒழிய, பணக்காரர்கள் சட்ட விதிகளையே பாதித்து வந்தனர். நகராட்சி மன்றத்தின் ஆதிக்கத்தின் கீழிருந்த இலவச வைத்தியசாலைகளில் பணம், தேவையான அளவு செலவிடப் பட்டாலும், நோயாளிகளுக்கு மருந்துகள் சரியாகத் தரப் படாமல், அந்தப் பணத்தில் பாதி அளவு சிறு உத்தியோகஸ்தர் களின் கைக்குப் போய்க் கொண்டிருந்தது. இந்த அக்கிரமங்களை யெல்லாம் முடிந்த வரையில் நிறுத்துவதற்குப் பாடுபட்டு வந்தேன். இந்த விஷயமாக நடந்த இரண்டு மூன்று நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

நான் ஒருநாள் இலவச வைத்தியசாலைக்குச் சென்றேன். அங்கு நோயாளிகளுக்குக் கணக்கின்படி பாலும் ரொட்டியும் தவிர, கஞ்சியும் சோறுங்கூட கொடுத்து வந்தனர். நான் நோயாளிகளிடம் விசாரிப் பதைப் பார்த்து ஒரு பணியாள் ஓடிச் சென்று ரங்கய்ய நாயுடுவை அழைத்து வந்தான். தம் குட்டு வெளியாகி விடுமென்று அவர் கதவைத் தாழிட்டு, என்னை உள்ளே வரக்கூடாதென்று தடுத்து விட்டார். நான் அவருடைய நடத்தையை நகராட்சி மன்றத் தினருக்குத் தெரிவித்தேன். என் மேல் ஆத்திரம் கொண்டு, ஒருநாள் இரவு ஒரு பெரிய மனிதர் வீட்டில் நடந்த கூட்டத்தில் கோபக் கனல் தெறிக்கும் கண்களோடு என்னைப் பார்த்துக் கொண்டு, ஏதோ முரட்டுத்தனத்திற்குத் தயாராகிக் கொண்டிருப்பது போல் காணப் பட்டார். இந்த விஷயத்தை அறிந்து அந்தப் பெரியவரின் ஆட்கள் அவரைப் பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாக வெளியே இழுத்துக் கொண்டு போய்விட்டனர். அன்றிரவு நடந்த நிகழ்ச்சி யையும் நகராட்சி மன்றத்தினருக்குத் தெரிவித்தேன். அதன் பிறகு

அவர்கள் அந்த வைத்தியசாலை உதவியாளரை வேறோரிடத்திற்கு மாற்ற வேண்டுமென்று சென்னையிலிருந்த மருத்துவத் துறை முக்கிய அதிகாரிக்கு எழுதினர். மாநில மருத்துவத் துறை அதிகாரி அவரைப் புதிய இடத்திற்கு மாற்றிவிட்டார்.

ஒருநாள் நான் பள்ளிக்கூடம் சென்று கொண்டிருந்த பொழுது பட்டுலை வீரேசலிங்க மெனும் பொற்கொல்லர், ராஜ வீதியில் (main road) நான்கைந்து அடி அளவு ஆக்கிரமித்துக் கொண்டு, அஸ்திவாரத்தை முன்னுக்கு நகர்த்தி, சுவர் எழுப்பிக் கொண்டிருந்தார். நான் அதைப் பார்த்து, இப்படி அக்கிரமமான முறையில் இடத்தை ஆக்கிரமிக்கக் கூடா தென்றும், நகராட்சி மன்றத்தினருக்கு விண்ணப்பம் செய்து, அவர்கள் அனுமதித்தால் இப்பொழுது கட்டும் முறையில் கட்டலா மென்றும், அனுமதிக்கவில்லையெனில் முன்பிருந்த அளவிலேயே கட்டிக் கொள்ளவேண்டு மென்றும் சொன்னேன். அவர் நாம் சொன்னதற்கு ஒப்புக் கொண்டு வேலையாட்களை அனுப்பி விட்டார். நான், மாலை அந்த வழியிலேயே வீட்டுக்குத் திரும்பும் பொழுது அந்த வீட்டு வேலை மறுபடியும் நடந்து கொண்டிருக்கக் கண்டேன். அது என்ன என்று நான் கேட்க, அந்தப் பகுதியின் நகராட்சி மன்ற உறுப்பினர்களைக் (வார்டு கௌன்சிலர்கள்) கேட்ட பொழுது, அதை நிறுத்துவதற்கு அவருக்கு (வீரேசலிகங்கத்திற்கு) அதிகாரமில்லை யென்றும், தம் பகுதியிலிருப்பதால் தமக்குத்தான் அதிகாரம் இருப்பதாகவும், கட்டிக் கொள்ளலா மென்றும் கூறியதாகச் சொன்னர். நான் இந்த விஷயத்தைப் பற்றி மன்றத்தினருக்கு ஒரு குறிப்பு (memo) அனுப்பினேன். இந்தக் குறிப்பு, விசாரணைக்கு வருவதற்குள்ளேயே வீட்டைக் கட்டி முடித்து முந்திய அறிகுறிகளே இல்லாமற் செய்து விட்டனர். முக்கிய சாலையிலேயே (main road) ஆக்கிரமிப்பு நடப்பது குறித்து நான் பேசிய பொழுது, அந்தப் பொற்கொல்லனுக்கு ஆலோசனை கூறிய அந்தப் பகுதி உறுப்பினர் தமக்கொன்றும் தெரியாது போல் பேசாமலிருந்தார். ஆக்கிரமிப்பை ஒழிப்பதற்குரிய தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. மன்றத்தின் சார்பில் நான், ஆக்கிரமித் திருந்த முன் பகுதியை ரம்பத்தால் அறுக்கச் செய்து, தெருத் திண்ணைகளையும், ஒரு திண்ணையின் மீதிருந்த அறையையும் கடப்பாறையால் தகர்த்தெறியச் செய்தேன். அந்த உறுப்பினருக்குத் தான் ரூபாய் 25 முதலில் கொடுத்ததாகவும், நான் குறுக்கிட்ட பின்னர் ரூபாய் 75 மீண்டும் கொடுத்ததாகவும் அவர், என்னிடம் சொல்லி வருத்தப் பட்டார்.

நாகோஜி ராவ் பந்த்துலு பள்ளி மேற்பார்வையாளராகி, ராஜ மகேந்திரவர நகராட்சி மன்றத் தலைவர் பதவியிலிருந்து விலகிச் சென்ற பொழுது, சப்-கலெக்டர் (Sub-Collector) ஆன ஹாம்னெட் துரை நகராட்சி மன்றத் தலைவர் பதவிக்கு முயற்சிக்கலானார். எங்கள் கலைக் கல்லூரித் தலைவராக இருந்த மெட்காஃப் துரை நகராட்சி மன்றத் தலைவர் பதவிக்கு ஹாம்னெட் துரையின் பெயரைச் சிபாரிசு செய்து ஒரு காகிதத்தில் எழுதி, கையெழுத்துப் போடுவதற் கென்று என்னிடம் கொண்டு வந்தார். அரசாங்கத்தினர் உள்ளாட்சி மன்ற அமைப்பை ஏற்படுத்தியது, இங்குள்ள உறுப் பினர்கள் சுதந்திரமாகப் பணியாற்ற வேண்டுமென்பதாலும், கலெக்டர் அதிகாரமுள்ள ஒருவர் தலைவரானால் உறுப்பினர்கள் பயமில்லாமல் இயங்க முடியாதென்பதாலும், நான் அதில் கையெழுத்திட இயலாதென்பதுடன், தேர்தலன்று எதிர்த்துப் பேச வேண்டி வருமென்றும் சொல்லிவிட்டேன். தலைவரைத் தேர்ந் தெடுக்கும் அன்று மன்றக் கூட்டத்தில், ஹாம்னெட் துரையைத் தேர்ந்தெடுக்காமல் வேறொருவரைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று நான் கூறினேன். ஆனால் உறுப்பினர்கள் சப்-கலெக்டருக்கு எதிராக நடந்துகொள்வதற்கு தைரியமில்லாமல் அவரையே தேர்ந்தெடுத்தனர்.

கலெக்டர் வேலைகளிலும், மாஜிஸ்டிரேட் பணிகளிலும் ஈடுபட வேண்டியிருந்ததாலும், அடிக்கடிக் கிராமங்களைச் சுற்றிப் பார்க்க வேண்டிய கடமைகளிருந்ததாலும், நகராட்சி மன்றக் காரியங்களைக் கவனிப்பதற்கான ஓய்வில்லாததாலும் ஹாம்னெட் துரை தம் சார்பில் ஒரு பிரதிநிதியை நியமிக்க விரும்பி அத்தகைய பணிக்கு யார் தகுந்தவரென்று மெட்காஃப் துரையிடம் யோசனை கேட்டார். அவர் என் பெயரைக் கூறினார். அதற்குப் பிறகு ஹாம்னெட் துரை என்னைக் கேட்கவே, எல்லா விஷயங்களிலும் எனக்கு முழு உரிமை கொடுத்தாலொழிய நான் அந்த வேலையை ஏற்றுக்கொள்ள இயலாது என்றேன். அவர் அதற்கு ஒப்புக்கொண்டு உறுப்பினர் களின் அனுமதியுடன் தம் பொறுப்புக்கள் அனைத்தையும் என்னிடம் ஒப்படைத்தார்.

நான் என் சக்திக்கு உட்பட்ட வரையில் வேலை பார்த்துக் கொண்டு முக்கிய விஷயங்களில் துரையின் ஒப்புதலைப் பெற்று லஞ்சத்தை ஒழிப்பதற்கும், அலுவலகப் பணிகள் விரைவாக நடை பெறுவதற்கும், வருவாயைப் பெருக்குவதற்கும் பணியாற்றி வந்தேன். வீட்டு வரி அதிகமாக இருக்க வேண்டியவருக்குக் குறைவாகவும்

குறைக்க வேண்டியவர்க்கு அதிகமாகவும் விதிக்கப்பட்டிருந்தது. நான் ஒவ்வொரு வீட்டையும் மேற்பார்வையிட்டு, சில பணக்காரர்களின் வீடுகளுக்கு வரியை உயர்த்தியும், ஏழைகளின் வீடுகளுக்குக் குறைத்தும் நகராட்சி மன்றத்திற்கு வருவாயைப் பெருமளவு பெருக்கச் செய்தேன். விதவை மறுமண விஷயத்தில் எனக்கு எதிர்ப்பாக இருந்தவர்கள் தம் வரிகள் உயர்த்தப்படுமென்று பயந்ததாகவும், அப்படி நடக்காமல் சில இடங்களில் குறைக்கப்பட்டு நியாயம் வழங்கப்பட்டதென்றும் தம்மிடம் சொல்லி என்னை மெச்சிக் கொண்டதாகச் சல்லபல்லி ரங்கய்ய பந்த்துலு என்னிடம் கூறினர்.

ஹாம்னெட் துரை இங்கிருந்து மாற்றல் பெற்றுப் போகும் தருவாயில், 1885 செப்டம்பர் 17ஆம் தேதியன்று எனக்கு இவ்வாறு எழுதினர்: 'கடந்த சில மாதங்கள் நீங்கள் எனக்காற்றிய உதவிக்கும், நகராட்சி மன்ற நிர்வாகத்தில் நீங்கள் காட்டிவந்த ஓவுதலில்லாத ஆற்றலுக்கும் நான் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நீங்கள்தான் தலைவர் பதவிக்கு மிகமிக உகந்தவர் என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆனால் வாக்குகளின் மூலம் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கப்படும் முறையில் மிகச் சிறந்த மனிதரே தேர்ந்தெடுக்கப்படுவதில்லை என்பது உங்களுக்கே தெரியும்.'

துரையவர்கள் பாராட்டிவிட்ட மாத்திரத்தில் எல்லா விஷயங்களிலும் நான் அவருடைய விருப்பப்படியே நடந்துகொண்டதாக எண்ணிவிடக் கூடாது. சில நேரங்களில் அவர் கூறியது தவறென்று பயமில்லாமல் எதிரிலேயே சொல்லியிருக்கிறேன். பின்னால் வரப் போகும் பலன்கள் குறைவானவை என்று கவலைப்படாமல், நம் நாட்டவராயினும், அயல் நாட்டவராயினும், இந்தியராயினும், ஐரோப்பியராயினும் பொருட்படுத்தாமல், நான் நல்லதென்று நினைத்ததை எதிரிலேயே சொல்லிவிடுவதுடன், பயமில்லாமல் செய்துவிடுவதுமான அவசரப் போக்கு என் குறைகளில் ஒன்று. இந்த முன் யோசனையின்மையினால் நம்மவர்களில் சிலர் எனக்கு எதிரிகளாக மாறி வந்தனர்.

அதிகாரிகளின் கருத்துக்களுக்கு எதிர்ப்பான தம் கருத்துக்களைத் தெரிவிக்காத குறை நம்மவரிடமே சிறப்பாக இருந்து வருகிறது. உடல்நலமின்மையால் ஒரு தாலுகா போர்டு கூட்டத்திற்குப் போக முடியாமற் போய்விட்டது. பிறகு சில உறுப்பினர்கள் என்னைப் பார்க்க வந்தனர். விசேஷங்கள் என்ன என்று கேட்டதன்பேரில் ஒருவர், 'துரை எங்களைக் கேட்டு, எங்கள் கருத்துக்களை வாங்கிக்

கொள்கிருரா, என்ன? என்னென்ன முடிவுகளெடுத்தாரோ ; எங்களுக்குத் தெரிவித்தால்தானே ?' என்று பதில் சொன்ஞர்.

அதற்கடுத்த மாதம் நடந்த கூட்டத்திற்கு அவர்கள் குறைபட்டுக் கொண்ட மோபர்லி துரை தலைமை வகித்தார். ஒரு விஷயத்தில் எனக்கும், துரையவர்களுக்கும் கருத்து வேற்றுமை உண்டாகி, ஓரளவு விவாதம் நடைபெற்றது. சில நிமிடங்கள் கடந்த பின்னர் துரையவர்கள் தம் பிடியைத் தளர்த்தி என் கருத்தின்படியே முடிவெடுத்தார்.

இந்தச் சமயத்தில் நான் இரண்டு பள்ளிகளின் செயற் குழுக்களில் உறுப்பினருக இருந்ததுடன், இன்னிசுபேட்டைப் பெண்கள் பள்ளியின் செயலாளராகவும் பணியாற்றி வந்தேன். பெண்கள் பள்ளியில் பெண்கள் சம்பளம் கொடுக்காமல் போனதால் அந்தப் பள்ளியை நிர்வகிப்பது மிகவும் கடினமாக இருந்தது. அந்தப் பள்ளியைச் சந்தாக்கள் மூலமும், நகராட்சி மன்றத்தினர் மற்றும் அரசினர் தனித் தனியாகக் கொடுத்துவந்த உதவித் தொகையாலும் நடத்தி வந்தேன். இப்படியிருக்க, 1885 மார்ச்சு 2ஆம் தேதி, நகராட்சி மன்ற ஆணையாளரிடமிருந்து, 'நகராட்சி மன்ற நிதியிலிருந்து உங்கள் பள்ளிக்கு அடுத்த ஆண்டுச் சம்பள உதவித் தொகையை (salary grant) அரசாங்கம் நிராகரித்துவிட்டது' என்று கடிதம் வந்தது.

விரைவிலேயே சென்னை மாநிலக் கல்வி அலுவலர் ராஜமகேந்திரவரத்திற்கு வரவே, நான் அவரிடம் விஷயத்தைச் சொல்லி, அவரைக் கொண்டு எங்கள் பெண்கள் பள்ளிக்கு அநுகூலமாக வற்புறுத்தி எழுதியதன்பேரில் அரசாங்கத்தினர், எங்கள் நகராட்சி மன்ற நிதியிலிருந்து பழையபடியே உதவி செய்யுமாறு உத்திரவிட்டனர்.

எனக்குத் தொடக்கத்திலிருந்து பெண்கள் படிப்பில் மிகவும் ஈடுபாடு இருந்தது. பெண்கள் நிலை செம்மையாலொழிய நாடு உருப்படாதென்பது என் நம்பிக்கை. வாரந்தோறும் வெளியிடப்படும் விவேகவர்தனியுடன் 'சதிஹித போதினி' எனும் பெண்கள் மாதப் பத்திரிகையை மூன்ருண்டுகள் நடத்தி, பெண்களுக்கென 'சத்தியவதி சரித்திரம்'-'சந்திரமதி சரித்திரம்'-'சத்ய சஞ்சீவனி'-'பத்னி ஹிதஸூசனி'-'தேஹாரோக்கிய தர்மபோதினி' முதலான நூல்களை எழுதினேன்.

1881—90 இடையில், மேற்சொன்ன நூல்களைத் தவிர, 'சமத்கார ரத்னவளி'-'ராக மஞ்ஜரி' ஆகிய நாடகங்களை ஆங்கிலத்திலிருந்தும், 'ரத்னவளி'-'மாளவிகாக்னிமித்ரம்' ஆகிய நாடகங்களைச் சம்ஸ்கிருதத்திலிருந்தும் தெலுங்கில் மொழிபெயர்த்தும்,

'பிரஹ்லாத நாடகம்' - 'தக்ஷிண கோக்ரஹணம்' - 'சத்ய ஹரிச் சந்திர நாடகம்' என்ற நாடகங்களையும், சில நாடகக் கதைகளையும், நகைச்சுவை நாடகங்களையும், 'ஆந்திர கவுல (கவிகள்) சரித்திர'த் தையும் எழுதினேன். இவை தவிர ஏராளமான கட்டுரைகளையும் எழுதி வெளியிட்டேன். பண்டைய கவிதை நூல்கள் சிலவற்றைச் செப்பனிட்டு வெளியிட்டேன்.

எங்கள் பட்டணத்தில் நன்கு உருவாகிய குழுக்களின் ஆளுகையின் கீழ்ச் சரியாக இயங்கிவந்த இரண்டு பள்ளிகளுக்குப் போட்டியாகப், பொருளாசையின் காரணமாகவும், பெயர் புகழ் நசைக் காரணமாகவும் சில பெரியவர்கள் ஆத்திகப் பள்ளியென்றும், மகாராஷ்டிரப் பள்ளியென்றும், சுதேசாபிமானி பள்ளியென்றும் பெரிய பெரிய பெயர்களைச் சூட்டி, புதிய பள்ளிகளை அமைக்கும் முயற்சிகளில் இறங்கினர். இந்தப் புதிய பள்ளிகளுக்கு நிதி கிடையாது; சந்தாக்கள் கிடையா; நன்கொடைப் பணமும் கிடையாது. மாணவர்களின் மாதச் சம்பளம்தான் ஆதாரம். செம்மையான பழைய பள்ளிகளிலிருந்து முடிந்தவரை அதிகமான வர்களை ஈர்ப்பதற்குக் கையாளப் பட்ட வழிகள்: மாணவர்களிட மிருந்து குறைந்த சம்பளம் வாங்குதல்; தம்முடன் அதிகமானவர்களை அழைத்துவரும் மாணவர்களுக்குச் சம்பளச் சலுகை அளித்தல்; பிள்ளைகளை உயர் வகுப்புக்களில் சேர்த்துக் கொள்ளுதல் முதலானவை யாகும். கிடைக்கும் தொகையில் செயலாளரின் பங்கு போக, எஞ்சியதை ஆசிரியர்கள் முறைப்படிப் பங்கிட்டுக்கொண் டிருந்தனர். ஆசிரியர்களுக்குக் கிடைக்கும் மாத ஊதியம் 8, 10, 15 ஆனாலும் கணக்கில் 20, 30, 40, 50 கொடுத்ததாகக் காட்டப்பட்டு அதற்கான ரசீதுகளும் வாங்கப்பட்டன. செயலாளர்கள் தம் கைப் பணத்தைச் செலவழிப்பதாகக் காட்டி அரசினரிட மிருந்து உதவித் தொகையைப் பெருமளவில் வாங்கலாயினர். இத்தகைய தவறான செயல்களுக்குத் துணையாக ஆசிரியர்களே நியாயம் தவறி நடக்கும் பொழுது மாணவர்கள் எப்படி நியாயத்திற்குக் கட்டுப்பட்டு நடப்பர்? அவர்கள் நியாயத்தை மட்டு மல்லாமல் கல்வியையும் புறக் கணித்து வந்தனர். அதனால் அப்பொழுது எங்கள் பட்டணத்தில் கல்வி நிலையும், மாணவர்களின் நிலையும் வருந்தத் தக்கதாக இருந்தன.

எனவே, பள்ளி நிர்வாகக் குழுவின் தலைவரான மெட்காஃப் துரையும், சங்க உறுப்பினர்களான நண்பர்களும் ஒத்துழைத்து, பள்ளிகளனைத்தையும் ஒன்று சேர்த்து, ஒரு நிர்வாகக் குழுவின்

ஆளுகைக் கீழ்க் கொண்டு வந்தோம். ஒவ்வொரு பள்ளியினரும் விரும்பிய விதிமுறைகளை ஏற்றுக் கொண்டு, அவர்கள் சொல்லிய ஊதியத்திற்கு அவரவர் பள்ளிகளில் ஆசிரியர்களை நியமிப்பதற்கு ஒப்புக் கொண்டு, அவர்களுடைய பள்ளி அதிகாரியான ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்களையே தலைமையாசிரியர் பதவியிலமர்த்தி, எல்லாப் பள்ளிகளையும் ஒன்று சேர்த்து ஒரே குழுவின் நிர்வாகத்தின் கீழ்க் கொண்டுவர முடிந்தது.

இத்தனை விஷயங்களிலும் நான் மிகமிக உற்சாகத்தோடு பணியாற்றிக்கொண்டிருந்த காலத்தில், நட்பு முறையில் மட்டுமல்லாமல் ஆசிரியன் என்ற முறையில் நான் சொன்னதை யெல்லாம் தலைமேலேற்று முடித்தும், எனக்கு வலதுகை போல் இருந்து, என்னைக் கண்ணிமை போல் எப்போதும் காத்துவந்து, எல்லாரும் கைவிட்டாலும் தாம் மட்டும் என்னைக் கைவிடாமலு மிருந்துவந்த பசவராஜு கவர்ராஜு எதிர்பாராத வகையில் 1888 ஜுலை 16 ஆம் தேதி காலமாகி விட்டார். அத்தகைய நற்பண்புகளின் பெட்டகமான நண்பர் திலகத்தின் மறைவுடன் எனக்குச் செயலாற்றுவதில் அதுவரை இருந்த உற்சாகத்தில் பாதி போய்விட்டது. எப்போதும் நோய் வாய்ப்பட்டிருந்த நான், நெடுங்காலம் வாழ முடியாதென்றும், நான் எடுத்துக் கொண்ட பெரிய காரியத்தில் எனக்குப் பிறகு அவர் தொடர்ந்து செயலாற்றுவா ரென்றும் நான் உறுதியாக நம்பியிருந்தேன். அத்தகைய என் ஆசை அல்பாயுளில் மடிந்து போகவே வெறுப்படைந்து, நகராட்சி மன்றத்திலும், மாவட்ட நிர்வாகக் குழுவிலும் உறுப்பினர் பதவிகளை ராஜினமா செய்து, அந்தப் பொறுப்புக்களி லிருந்து ஒரேயடியாக விலகிவிட்டேன்.

கவர்ராஜு மரணத்துக்கு நான்கைந்து மாதங்களுக்கு முன்னர் என் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதற்கான குறிப்புக்களைத் தருமாறு கேட்டார். நான் அவர் ஆவலை மட்டுப்படுத்தி, நான் இறந்த பின்னர் ஏதேனும் எழுதுவதற் கிருந்தால் எழுதலாம் என்று சொன்னேன். சில மாதங்களிலேயே, என் வாழ்க்கை வரலாற்றை எழுத நினைத்த நண்பரின் வாழ்க்கைச் சரிதையை நானே எழுதி, அவர் நினைவை நிலைநிறுத்தக் கூட்டப்பட்ட பொதுமக்கள் மன்றத்தில் படிக்க வேண்டியதாயிற்று.

இவருக்குப் பிறகு, எனக்குப் பின்னல் நெடுங்காலம் சமூகத் தொண்டு செய்துவருவா ரென்று நான் எதிர்பார்த்த இரண்டாமவரான சத்திராஜு மிருத்யஞ்சய ராவ் அவர்களும், கடைசி நம்பிக் கையாயிருந்த தேசிராஜு பெதபாபய்யா அவர்களும் அல்பாயுளில்

காலதேவன் வாய்ப் பட்டனர். இவர்கள் மூவரும் கல்லூரிப் பட்டம் பெற்றவர்கள், நாட்டுப் பற்று மிக்கவர்கள், தன்னல மில்லாதவர்கள், பிறர் நலம் பாராட்டுபவர்கள், உற்சாகமும் துணிவும் திறமையும் மிக்க செயல் வீரர்கள். இவர்கள் மூவரும் முதுமையை அடைவதற் குள்ளேயே வானுலகை எய்தினர்.

# 1. 1890 முதல் 1900 வரை

1879 ஆம் ஆண்டு, விதவைத் திருமண விஷயமாக நான் விரும்பிய சொற்பொழிவை ஆற்றுவதற்கான இடம் ஒரேயடியாகக் கிடைக்காமல் போனதிலிருந்து, எல்லா மக்களுக்கும் பயன்படக் கூடிய பிரசங்க மண்டபம் ஒன்றை எவ்வாறு அமைக்க முடியும் என்பது பற்றிச் சிந்திக்கலானேன். எங்கள் வட மாவட்டங்களில் சிறிது காலம் பள்ளி மேற்பார்வையாளராக இருந்து, தெலுங்கு நாட்டின் மீது ஆர்வங்கொண்டு, பிறகு சென்னை மாநிலத்தில் கல்வி அலுவலராகப் பதவியேற்ற கர்னல் மக்டானல்ட் என்பவரின் பெயரில் ராஜமகேந்திரவரத்தில் நகர மண்டபத்தை (Town Hall) கட்ட வேண்டுமென்று 1880 இல் முயன்றேன். அந்த ஆண்டு ஆகஸ்டு 15 அன்று நடந்த நகர மன்றக் கூட்டத்தில் மக்டானல்ட் துரையின் பெயரில் நகர மண்டபத்தைக் கட்டுவதென முடிவு செய்யப்பட்டு, சந்தா திரட்டுவதற்கென ஏற்படுத்தப்பட்ட குழுவிற்கு நான் செயலாளராக நியமிக்கப் பட்டேன். எழுத்துமூலம் 500 ரூபாய் கொடுப்பதாக வாக்களிக்கப்பட்டாலும், போதுமான தொகை வரும் வழி தெரியாமல் போனதால் அப்பொழுது அந்த முயற்சி வெற்றி பெறவில்லை. இருப்பினும், நான் அந்த முயற்சியைக் கைவிடாமல் நகர மண்டபம் நிறுவுவதற்கென நகரின் நடுவில் ஒரு மனையைத் தாமராஜு நாகராஜுவின் பெயரில் வாங்கி, விக்டோரியா ஜூபிலி விழாச் சமயத்தில் 1887 இல், சந்தா திரட்டி நகர் மண்டபத்தைக் கட்ட வேண்டுமென்று ஒரு குழுவை அமைத்தேன். ஐந்நூறு அறுநூறு சந்தா மூலமாகத் திரண்டன. பிட்டாபுரம் ராஜா ஆயிரம் ரூபாய் கொடுத்துதவினர். பலமுறை இக்குழுவின் கூட்டங்கள் நடத்தப் பட்டன. இந்தக் கூட்டங்களில் மனம் வந்து பத்து ரூபாய் கொடுக்க இயலாத கொடைவள்ளல்கள், நான் முயன்று திரிந்து வரையச் செய்த திட்டப்படத்தில் (plan) பிழைகளைக் கண்டுவந்ததுடன், இலட்ச ரூபாய்ச் செலவில் அருமையான மண்டபத்தைக் கட்ட வேண்டுமென்று சிலரும், நான் வாங்கிய மனை நன்றாக இல்லையென்று குறை சொல்லியும், பொது மக்கள் பூங்காவாகப் பயன்படத் தக்க மனையை நகரின் மத்தியில் வாங்க வேண்டுமென்று சிலரும்

நடைமுறையில் இயலாத விசித்திரமான கருத்துக்களைச் சொல்லி வந்தனர்.

1889, மார்ச்சு 26 அன்று ஆங்கிலத்தில் அச்சடித்த இந்தக் கடிதத்தைச் சந்தா கொடுத்தவருக் கெல்லாம் அனுப்பினேன் : 'பொது மக்கள் சந்தாக்கள் மூலம் உங்கள் நகர மண்டபம் உருவா வதற்கான சூழ்நிலை என்றுமே ஏற்படாது என்று பல காரணங்களால் எனக்கு எண்ணம் ஏற்பட்டுள்ளது...எனவே, நான் இதற்கென என் பணத்தைக் கொண்டு ஏற்கனவே வாங்கியுள்ள மனையிலேயே என் செலவிலேயே மண்டபத்தைக் கட்டி முடிப்பதென்று முடிவு செய்துள் ளேன். என் புத்தகங்களின் விற்பனையாலும் பிற வகைகளில் கிடைக்கும் வருவாயையும், மற்றும் கடனகப் பெறும் தொகையையும் கொண்டு நகர் மன்றத்தை விரைவில் முடிக்கத் திட்ட மிட்டுள்ளேன். கட்டடப்பணி முடிந்த பின்னர், அதற்கென ஆகும் கடன்களை அடைத்த பிறகு, ராஜமகேந்திரவரப் பொதுமக்களின் உபயோகத் திற்கு அதைக் கொடுத்து விடுவேன்.'

இவ்வாறு குழுவின் தொடர்பை அறுத்துக் கொண்டு, இரண்டு மூன்று ஆயிர ரூபாயில் ஒரு சிறிய மண்டபத்தைக் கட்ட வேண்டு மென்று வேலையைத் தொடங்கினேன். நியாபதி சுப்பாராவு பந்துலு எனக்கு 500 ரூபாய், வட்டி யில்லாமல் கடனகக் கொடுத்தார். என் மாணவரான மற்றொரு நண்பர் 400 ரூபாய், வட்டி யில்லாமல் கடனகக் கொடுத்தார். இந்த 900 ரூபாயைக் கொண்டுச் செங்கல், மரம் முதலியவற்றை முடிந்தவரையில் மலிவாக வாங்கி, கூலி யாட்களை அமர்த்தி நானே உடனிருந்து கட்டட வேலையைப்பார்த்து வரலானேன். இந்த விஷயத்தில் எனக்குக் கடவுள் துணையும் கிட்டி யது. இந்த ஆண்டில் புத்தக விற்பனையால் ரூபாய் 1000த்துக்கும் அதிகமாகக் கிடைத்தது. இதே ஆண்டு என்னைப் பல்கலைக் கழகத் தினர் தேர்வாளராக நியமித்தனர். சென்னை மாநிலக் கல்வி அலுவலர் என்னைத் தேர்வாளராக நியமித்தார். இந்த வகையில் எதிர்பாராத வண்ணம் பண வருவாய் வரவே, மூவாயிரத்தில் முடிக்க எண்ணிய மண்டபத்தை, நான் ஏழாயிரம் ரூபாயில் கட்டி முடித்தேன். இந்த நகர மண்டப நிர்மாணத்தில் எனக்கு உதவிய மேற்சொன்ன இரு நண்பர்களுக்கும், ஏனைய நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிக்காமல் இருக்க முடியாது.

1890 அக்டோபர் மாதத்தில் புதுமனை புகுவிழாவின் போது அதைத் திறந்து வைத்து, அப்போதைய சென்னை மாநிலக் கலைக் கல்லூரியில் சம்ஸ்கிருத விரிவுரையாளராக இருந்த ராவ்பகதூர்

ரங்காசார்யுலு (எம். ஏ) அவர்கள் என்னைப் பாராட்டி ஆங்கிலத்தில் உரையாற்றினர். அதன் பின்னர், கல்கத்தாவிலுள்ள சாதாரண பிராம்ம சமாஜத் தலைமைப் போதகரான பண்டித சிவநாத சாஸ்திரி (எம். ஏ.) அவர்கள் ராஜமகேந்திரவரத்துக்கு வந்து, நவம்பர் 15 ஆம் நாள் என்னைப் பற்றி ஓர் உரையாற்றி, நகர மன்றத்தில் ராஜ மகேந்திர வாசிகள் அது முதல் தங்குதடை யின்றிக் கூட்டங்களையும் பிற நிகழ்ச்சிகளையும் நடத்திக் கொள்ளலாமென்று அறிவித்தார். மேற் சொன்ன இருவரும் என்னைப் பற்றிக் கூறியதில் புகழுரைகள் தவிரச் சிறப்பாக வேறொன்று மில்லாததால் அவற்றை இங்கு விவரிக்கத் தேவையில்லை.

1896 இல் நகர மன்ற நிர்மாண விஷயமாக நான் ஏற்றிருந்த கடன்களனைத்தும் தீர்ந்துவிட்டன. மண்டபத்திற்கு என் பெயரைச் சூட்ட வேண்டுமென்று சிலரும், நானும் ஒரு பொறுப்பாளராக (trustee) இருக்க வேண்டுமென்று சிலரும் கூறினர். ஆனால் அதையெல்லாம் கேட்காமல், சென்னைக்குப் போவதற்குமுன் 1897 டிசம்பர் மாதத்தில் பொறுப்புப் பத்திரத்தை (trust deed) எழுதிப் பதிவு செய்து (register) மன்றத்தைப், பொறுப்பாளர்களிடம் ஒப்படைத்து விட்டுப் போனேன்.

நகர மக்களின் உபயோகத்திற்கு நகர மண்டபத்தைக் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று நான் முடிவு செய்த பொழுது நகர மக்களனைவரும் மகிழ்ச்சி அடைந்து எனக்குத் துணையாக இருந்திருப்பரென்று நீங்கள் நினைக்கலாம். எங்கள் பட்டணம் அத்தகைய பாவத்திற்கு ஆளாகவில்லை. நான் நகர மன்றத்தைக் கட்டுவதற்கு முன்பே அந்த மனை விஷயமாக நான்கு வழக்குகள் தொடரப்பட்டு அடிபட்டுப் போயின. இது இப்படியிருக்க 1889 செப்டம்பர் மாதத்தில், காஜா அகமதுல்லா கான் அவர்கள் கொடுத்த மனையில் நாங்கள் குழி வெட்டி, பலகைகளை அறுத்துக்கொண்டிருக்கும்பொழுது, ஒரு பெரிய மனிதர் காஜா சாயபுவின் தூரத்து உறவினரான ஓர் ஏழை முகம்மதியனை வரவழைத்து, அவன் மூலமாக, தன் பாட்டனாரின் சமாதியை தோண்டிவிட்டதாக என் மேல் ஒரு குற்றச்சாட்டைச் சுமத்தச் செய்தார். ரம்ப வேலை நடக்கும் இடத்திலிருந்து பொறுக்கி எடுத்த சில எலும்புகளை ஒரு கூடையில்போட்டு அவை தம் பாட்டனாருடையதென்றுசொல்லி அந்த முகமதியன் போலீசில் புகார் கொடுத்தான். போலீசார் அவற்றை அரசாங்க வைத்தியரிடம் கொடுத்துப் பரிசோதிக்க, அவை அவனுடைய பாட்டனாருடையதல்லவென்றும், ஆட்டு எலும்பு

களென்றும் தம் அறிக்கையைக் கொடுத்ததன் பேரில், மற்றும் சிலரை விசாரித்த பிறகு, ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம் அவர்கள் தூண்டுதலின் பேரில் வந்ததே தவிர, அது உண்மையான குற்றச்சாட்டு அல்ல என்று தெரிவித்தனர்.

என் இளம் பருவத்துத் தோழரான ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம் என் மேல் இத்தகைய குற்றச்சாட்டை ஏன் சுமத்த முயன்ருர் என்று கேட்கத் தோன்றலாம். ஆத்திகப் பள்ளியைத் துவக்கிய பின்னர் அவர் அந்தப் பள்ளித் தொடர்பாக மேற்கொண்ட வழியும், இரவுப் பள்ளித் தொடர்பாக அவர் பின்பற்றிய பாதையும், மற்ற விஷயங் களிலும் அவர் ஏற்ற வழி வகைகளும் தவறுனவை என்று எனக்குப் பட்டதால் நான் அவ்வப்பொழுது கண்டித்து, விவேகவர்தனியில் எழுத வேண்டி வந்தது. அவரும் தாம் வெளியிட்டு வந்த 'கோதா வரி நியூஸ்' என்ற பத்திரிகையில் எனக்கு எதிர்ப்பாக எழுதத் தொடங்கினுர்.

இப்படியிருக்க, அவருக்கு ராஜமகேந்திரவரத்தில் ஒரு பள்ளியின் தலைமையாசிரியராகவும், நகர மன்றத்தின் தலைவராகவும் பணி யாற்றும் வாய்ப்புக் கிட்டியது. இந்தக் காலத்தில் நெப்பல்லெ ராமபிரம்மம் என்னும் குடும்பஸ்தரின் வீட்டின் மீது கற்கள் விழுந்து கொண்டிருந்தன. ராமபிரம்மத்தின் அண்ணியாரான சங்கரம்மா இந்த விஷயம் பற்றி அண்டை அயல் வீட்டாரிடமும், அக்கம் பக்கத்துப் பெரியவர்களிடமும் முறையிட்டுக் கொண்டாரெனினும் யாரும் அதை நிறுத்தும் முயற்சியில் இறங்கவில்லை. கற்கள் விழுவ தற்கு ராமபிரம்மம் அவர்களின் மூன்ருவது மருமகனுன, தாய் தந்தை யரை இழந்த, 18 வயதான ஒரு போக்கிரிதான் முக்கிய காரண மாவான். அவன் மனைவி 15 வயதானவள். அவன் ஏலூரி லக்ஷ்மீநரசிம்மத்தின் அடியவர் குழாத்தின் ஒருவனுகத் திரிந்து கொண்டிருந்தான். தான் தனிக் குடித்தனம் நடத்தப் போவதாகச் சொல்லி, தன்மனைவியைத் தன்னுடன் அனுப்புமாறு தன் மாமனுரை வற்புறுத்திக் கொண்டிருந்தான். குடியிருக்க வீடில்லாத காரணத் தாலும் வேலையற்றவனுக இருந்ததால் மனைவியைக் காப்பாற்றும் சக்தியில்லாமலிருந்ததாலும் அந்த இளம் பெண்ணை அவனுடன் அனுப்பாமலிருந்தனர். அந்த இளைஞன் மாமனுர் வீட்டை விட்டுச் சென்று லஷ்மீநரசிம்மம் அவர்களிடம் தஞ்சம் புகுந்தான். அவர் நகர மன்றத்தினரின் அதிகாரத்தின் கீழிருந்த கம்பத்தவரின் சத்தி ரத்தில் அவனுக்கு இலவசச் சாப்பாட்டுக்கு வசதி செய்து கொடுத்து, சாகும் கட்டத்தில் தந்தை கொடுத்துச் சென்ற 500 ருபாய்க்கான

சேமிப்பு வங்கிப் (Savings Bank) புத்தகத்தைத் தம் வசம் இருத்திக் கொண்டார்.

அவன் வீட்டை விட்டுச் சென்றதிலிருந்து கல் விழுவது மாதக் கணக்கில் நடந்துகொண்டிருந்தது. யாரிடம் சொல்லிக் கொண்டாலும் பாதுகாப்பில்லாமல் போனதுடன், வீட்டின் மேல் கல்மாரி பொழிவதைப் பொறுக்க முடியாமல், ஒரு நாள் நடுப் பகலில் சங்கரம்மா அழுது கொண்டே எங்கள் வீட்டுக்கு வந்து, லக்ஷ்மீ நரசிம்மம் தம் மருமகனை வசப்படுத்திக் கொண்டு கல் வீசச் செய்கிருரென்றும், எப்படியாவது இந்தத் தொல்லையிலிருந்து தம்மைக் காப்பாற்ற வேண்டுமென்றும் பரிதாபமாகக் கேட்டுக் கொண்டார். மனம் இளகி நான், அந்தம்மாவுடன் அவர் வீட்டுக்குப் போனேன். அந்தம்மா தம் வீட்டு வாயிலில் விழுந்து கிடந்த செங்கல் துண்டுகளைக் காட்டி, துக்கிரால அவர்களுடைய புழக்கடையிலிருந்து அவை எறியப் பட்டன என்று சொன்னுர். மழையில் நனைந்து அவை பாசி பிடித்திருந்தன. துக்கிரால அவர்களுடைய புழக்கடைக்குச் சென்று பார்க்க, பாசி பிடித்த செங்கல் துண்டுகள் குவிந்து கிடக்கக் கண்டேன். துக்கிரால அவர்களுடைய வீட்டில் லக்ஷ்மீநரசிம்மத்துக்கு மிக வேண்டியவர்களும், அவர் தம் பள்ளியில் வேலை பார்த்து வந்த இரண்டு மணமாகாத பிராமணர்களான வெங்கடப் பய்யா, திருப்பதிராஜு என்பவர்கள் குடியிருப்பது தெரிந்தது. இந்த வேலை அவர்களுடைய துணையுடன் நடப்பதென ஊகித்து, வீட்டுச் சொந்தக்காரரான துக்கிரால பிரகாச ராவைக் கலந்துகொண்டு, அந்தப் பிராம்மணர்களைத் தம் வீட்டிலிருந்து அனுப்பிவிடுவதைப் பற்றிப் பேசிவிட்டு மீண்டும் ராமபிரம்மம் அவர்கள் வீட்டுக்கு வந்தேன். நாங்கள் அங்கு நின்றுகொண்டிருக்கும்பொழுதே தெருப் பக்கத்திலிருந்து ஒரு கல் வந்து எங்களுக்கு அருகாமையில் விழுந்தது. அது ஒரு சிறிய கருங்கல். அது சின்னஸ்வாமியின் வீட்டிலிருந்து எறியப்பட்டதென்று சங்கரம்மா உரத்த குரலில் சொன்னுர்கள்.

அங்குச் சென்று பார்க்க, வீட்டில் வந்து விழுந்த கல்லைப்போன்ற கற்கள் இரண்டு தென்பட்டன. இத்தகைய தவருன செயலைச் செய்வது சரியல்லவென்று அருகாமையிலிருந்த சின்னஸ்வாமியின் இரண்டாவது மகனைக் கண்டித்தபொழுது அவன், 'லக்ஷ்மீ நரசிம்மத்தின் வண்ணுன் பட்டப்பகலில் கற்களை வீசியெறியும் பொழுது அவனை ஒன்றும் கேட்காமல் எங்களை ஏன் கண்டிக்கிறீங்க?' என்று கேட்டான்.

எனவே கற்களை எறிவதில் லக்ஷ்மீநரசிம்மத்திற்குத் தொடர்பு இருக்கிறதென்று முடிவு செய்து, அவர் பள்ளிக்குச் சென்று, துணை ஆசிரியரான தாமராஜு பசவராஜு அருகிலிருக்கும் பொழுதே, 'ராமபிரம்மத்தின் மருமகனைச் சேர்த்துக் கொண்டு, அவர் வீட்டு மேல் கற்களை எறியச் செய்வதாகச் சொல்கிறார்கள். இதில் எந்த அளவு உண்மை இருக்கிறது?' என்று கேட்டேன். அவர் தமக்கு ஒன்றும் தெரியாதென்று சொல்லவே வீட்டுக்கு மீண்டேன். லக்ஷ்மீ நரசிம்மம், இதன் தொடர்பாக ஏதேனும் நடக்குமோ என்று பயந்து மறுநாள் விடியற்காலையில் தம் நண்பரான மாதிரெட்டி நாராயண ஸ்வாமி நாயுடுவின் வீட்டுக்குச் சென்று ஏதோ சொல்லவே, நாயுடு எனக்குச் செய்தி அனுப்பினார். நடந்ததென்னவென்று கேட்கவே, நடந்த கதை முழுவதையும் சொல்லி, வண்ணான் முதலானவர்களின் பெயர் முதலியவற்றைச் சொன்னேன். எல்லாரையும் அங்கு அழைத்து வரும்படி ஆட்களை அனுப்பியும், சிலர் வரவில்லை. வெங்கடப்பய்யாவையும், திருப்பதிராஜாவையும் துக்கிரால அவர் களுடைய வீட்டிலிருந்து வெளியேற்ற வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

நாயுடு அவர்களின் வீட்டில் கூட்டம் நடந்த இரண்டு நாட்களில் ராமபிரம்மம் என்னிடம் வந்து, மறுபடியும் கற்கள் விழுவதாகவும், எப்படியாவது கற்கள் வீசுவதை நிறுத்தித் தம்மை ஆபத்திலிருந்து காப்பாற்ற வேண்டுமென்றும் வேண்டினார். போலீஸ் இன்ஸ்பெக் டரை உடன் அழைத்துச் சென்று அந்த இடத்தைக் காட்டி அந்தக் காலித்தனமான செயலை நிறுத்த வேண்டுமென்று கேட்டுக்கொண் டேன். காவல் நிலையத்தினரைக் காவலுக்கு வைத்துக் கற்கள் எறிபவர்களைப் பிடிப்பதற்கு முயலுவதாக அவர் சொல்லிவிட்டுப் போனார்.

நான் துக்கிரால அவர்களுடைய புழக்கடையிலிருந்து வரும் பொழுது, வேலூரி வெங்கட்ராமய்யா வெளியே வந்து, நெப்பல்லெ அவர்களுடைய விஷயத்தையும், மற்றும் தாம் கேள்விப்பட்ட விஷயங்களையும் சொல்லத்தொடங்கவே, அக்கம்பக்கத்தவர்களும் வந்து தமக்குத் தெரிந்ததைச் சொல்லத் தொடங்கினர். எல்லாரும் வெங்கட்ராமய்யாவின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து, அவரவர் கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருக்கும் பொழுது, லக்ஷ்மீ நரசிம்மத்தின் நண்பரான பயப்புநேடி வேங்கட ஜோகய்யா அங்கு வந்து, நடந்த கதையெல்லாம் சொல்லக்கேட்டு, லக்ஷ்மீநரசிம்மம் முன்னிலையில் இந்த விவகாரம் நடப்பது நல்லதென்று கூறிச்சென்று

அவரை அழைத்து வந்தார். லக்ஷ்மீநரசிம்மம் இந்தக் குழப்பத்தையெல்லாம் தாமே விளைவித்துக் கொண்டிருந்தாலும் தம்மை யாரும் சந்தேகப்படுவதில்லை யென்று சொன்னார். 'இவ்வளவு பேர் உங்களுக்கு எதிராகச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுது நீங்கள் உங்கள் நடத்தையை மாற்றிக்கொள்ள வேண்டும்' என்று வேங்கட ஜோகய்யா, லக்ஷ்மீநரசிம்மத்திடம் கூறினார். அன்றிலிருந்து ராமபிரம்மத்தின் வீட்டின்மீது கற்கள் விழுவது நின்றது. என் முயற்சியால் அவரிழைத்த தொல்லை தீர்ந்ததற்கு நான் மகிழ்ச்சியடைந்தேன்.

பிறகு, ஏறத்தாழ ஓராண்டுக் காலத்திற்குப் பிறகு லக்ஷ்மீநரசிம்மம், தாம் வீடுகள் மேல் கற்களை எறியச் செய்ததாகவும், தம் நடத்தை சரியில்லையென்றும் நான் பெரிய மனிதர்கள் முன்னிலையில் அவரை பழித்துப் பேசியதற்காக, 3,000 ரூபாய் மானநஷ்டம் கேட்டு 1890 ஜூலை 15 அன்று மாவட்ட நீதிமன்றத்தில் என்மீது வழக்கைத் தொடுத்து, ஜூலை 29 அன்று துணை (Deputy) மாஜிஸ்டிரேட்டிடம், அவமானப்படுத்தியதற்காகக் கிரிமினல் வழக்கொன்றையும் கொண்டு வந்தார்.

இந்த வழக்கில் மாவட்ட நீதிபதி தம் தீர்ப்பில் (ஆங்கிலம்) இவ்வாறு எழுதினார்: 'இந்த ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளானபொழுது வாதியின் மதிப்பு சிறப்பாகப் பழுதுபட்டிருந்தது என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இந்த உண்மை வாதிக்குத் தெளிவாகத் தெரிந்திருந்ததால்தான் இந்த வழக்கைத் தொடர்ந்த பிறகு, துணை மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் பிரதிவாதியின் மேல் கிரிமினல் சட்டப்படி வழக்கைப்போட முன்வந்தார் என்று என்னால் நினைக்காமல் இருக்க முடியவில்லை. ஏனெனில், மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் இவருடைய பண்புகள், சமூகத்தில் இவர் மதிப்பு பற்றிய பிரச்னைகளைக் கவனிக்கவேண்டிய அவசியமில்லாததால் அங்கு வெற்றி கிடைத்து விட்டால், எதுவும் வெளியாகா வண்ணம் அவர் இந்த வழக்கைத் திரும்பப் பெற்றுக்கொள்ள அவருக்கு வாய்ப்பிருக்கும்.'

இந்த வழக்கை ஒட்டியே, 'மஹாரண்ய புராதிபத்யமு' (காட்டு தர்பார்) என்ற பிரகசன நாடகம் தம்மைக் கருத்தில் கொண்டதே என்று அந்த வெளியீடுபற்றி ஒரு வழக்கும் தொடுத்தார். இந்த வழக்குகளை நடத்துவதற்கென்று நான் ஓராண்டுக் காலம் ஓய்வு வாங்கிக்கொண்டு, கல்லூரிக்குப் போவதை நிறுத்திக்கொண்டேன். வாதியின் தரப்பில் துர்கா பிரசாத ராயுடு எனக்கு எப்படியாவது தண்டனை வாங்கித் தரவேண்டுமென்று பிடிவாதத்துடன் வேலை செய்யத் தொடங்கினார். என் தரப்பில் நியாபதி சுப்பாராவ் பந்த்துலு

எனக்கு எப்படியாவது தண்டனை கிட்டாமல் செய்யவேண்டுமென்று பத்து மடங்கு அதிக உறுதியுடன் வேலை செய்யத் தொடங்கினார். பந்துலு பட்ட சிரமம் இவ்வளவு அவ்வளவென்று சொல்லி முடியாது. இந்த வேலையில் மூழ்கியிருந்த பொழுது அவர் ஊண் உறக்கத்தை இலட்சியம் செய்யவில்லை. என் விஷயமாக அவருக்கிருந்த கவலையில் வீசம் பகுதிகூட எனக்கில்லாமலிருந்தது. அவ்வப்போது இரவு நேரங்களில் என்னைத் தம் வீட்டுக்கு வரச் சொல்வார். நான் சந்தோஷமாகத் உண்டுவிட்டுச் சென்று, அவர் கஷ்டப்பட்டுச் சட்ட நூல்களைப் படித்துக்கொண்டிருக்க, நான் படுத்துச் சுகமாகத் தூங்கிக் கொண்டிருப்பேன். 'இத்தனை வழக்குகள் தலைமேல் நிற்கும் பொழுது தூக்கம் எப்படி வரும்?' என்று வியப்படைந்து, அவர் என்னை எழுப்பி என் வீட்டுக்கு அனுப்பி வைப்பார். இலட்சம் ரூபாய் கொடுத்தாலும் எனக்கு அவர் ஆற்றிய உதவிக்கடனைத் தீர்க்க முடியாது.

வழக்கு ஓரளவு நடந்தபிறகு, என் எதிர்த் தரப்பினர் கௌரவமாகச் சிக்கலிலிருந்து வெளியேற வேண்டுமென்று சிந்திக்கத் தொடங்கினர். இரு கட்சிக்காரர்களையும் சமாதானப்படுத்த வேண்டுமென்று பிரமுகர்கள் பலர் முயன்றனர். ஆனால், என் முரட்டுப் பிடிவாதம் காரணமாக அவர்கள் வெற்றியடையவில்லை. எங்கள் கல்லூரித் தலைவரான மெட்காஃப் துரை, நான் மன்னிப்பு கேட்க வேண்டிய அல்லது வருத்தம் தெரிவிக்கவேண்டிய தேவையில்லை என்றும், முன்பு அவர் நடத்தை சரியில்லையென்று எண்ணி, இப்பொழுது பிறர் அவர் நடத்தை நல்லது என்று சொல்வதால் நான் சொன்ன சொற்களைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன் என்று சொன்னால் போதுமென்று பலவாறு என்னிடம் கூறினர்.

'இப்பவும் அவர் நல்லவரல்லரென்று நான் உறுதியாக நம்புவதால் சமாதான வார்த்தைகளை எழுதுவதற்கு என்னால் உடன்பட இயலாது' என்று அவர் கோரிக்கையை மறுத்துவிட்டேன். அவர்கள் கேட்பதற்கு ஒத்துக்கொண்டு சமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்று சுப்பா ராவ் பந்துலு என்னிடம் மிகவும் வற்புறுத்திக் கூறியபோதும் நான் என் பிடிவாதத்தைத் தளர்த்தவில்லை. எனக்குத் தோன்றுவது போலவே தவிர, பிறர் சொல்வது போல் நடந்து கொள்ளும் இயல்பு என்னிடம் இல்லை. இனி என்ன நடக்குமோ என்று அஞ்சும் இயல்பும் இல்லாதவன்.

1891 ஜூலை 27-ஆம் நாள் மாஜிஸ்டிரேட் தீர்ப்பு சொல்லி, என் மீது தொடரப்பட்ட வழக்குகள் இரண்டையும் தள்ளிவிட்டார். என்

எதிர்க் கட்சிக்காரரைப் பற்றித் தீர்ப்பில் (ஆங்கிலம்) எழுதப்பட்ட சில பகுதிகள் :

'வாதி, நடத்தை சரியில்லாதவர், உண்மைக்குப் புறம்பானவர், பணம் கையாடக்கூடியவர் என்ற மதிப்பீடு முற்றிலும் உண்மையான தென்பது சாட்சியங்களிலிருந்து தெளிவாகிறது...மதம் மற்றும் நீதிச் சார்புள்ள ஆத்திகச் சங்கத்தின் பிரதிநிதி அல்லது மேலாளர் என்ற பொறுப்பில் அவர் பல பள்ளிகளில் பணியாற்றி வந்தார். உண்மையில் அவற்றைத் தமக்கு முற்றிலும் உரிமையுள்ள சொந்தப் பள்ளிகள் போலவே நடத்தி வந்துள்ளார்...அந்தச் சங்கம், கூட்டங்களை நடத்த வில்லை. அதற்குச் சட்ட திட்டங்களோ கிடையா. கணக்கைப் பற்றிக் கேட்பதற்கு யாருக்கும் உரிமை இல்லை. தம் பள்ளிகளை தம் சொத்து போலவே பாவித்து வந்ததாக அவர் சொல்கிருர்... விருப்பு வெறுப்பில்லாத ஒருவர், அவர் பண்பு நலங்கெட்டவரென்று சொல்வதற்கு ஏராளமான காரணங்கள் இருந்தன.'

இனி, வீடுகள் மேல் கற்கள் எறியச் செய்கிருரென்று நான் கூறிய இரண்டாவது விஷயத்தில் மாவட்ட நீதிபதியின் தீர்ப்பிலிருந்து எடுத்துச் சொல்வதற்கு அனுமதி வேண்டுகிறேன் :

'1889 ஆகஸ்ட்டு வரையில் சில மாதங்கள் இடை இடையிட்டு, ராமபிரம்மத்தின் வீட்டின்மேல் கற்கள் எறிவது நடந்து வந்த தென்பது இரண்டு தரப்பிலிருந்தும் தெரியவருகிறது. ராமபிரம்மமும், அவருடைய வீட்டில் முதற் பெண்மணியான அவருடைய அண்ணியாரும் தம் மருமகனுல் கற்கள் எறியப்பட்டன என்று பல முறை குறை கூறியுள்ளனர். அந்த இளைஞன் விஷயத்தில் வாதி சிறப்பு அக்கறை காட்டி வந்ததையும், மற்றும் அந்தச் சமயத்தில் தம் ஏற்பாட்டின்படி அவன் தனியாக ஒரு சத்திரத்தில் வாழ்ந்து வந்ததையும் வாதி ஒத்துக் கொள்கிருர்... அந்தப் பையனுடன் தனியாகக் குடும்பம் நடத்துவதற்கு அவன் மனைவியை அனுப்ப மறுத்ததால் அவனை அந்த வீட்டின்மீது கல்லெறியுமாறு வாதி தூண்டிக்கொண்டிருந்ததாகத் தம் சந்தேகத்தைச் சங்கரம்மா பலமுறை பகிரங்கமாகச் சொல்லி வந்ததிலிருந்து வாதியின் தவருன நோக்கம் குறிப்பாகத் தெரியவருகிறது...அவர்களுடைய முந்திய முறையீடுகள் யாவும் பயனற்றுப் போனதன் பின்னர், இந்த விஷயத்தில் தலையிட முடியாதென்று அதிகாரிகளின் உதவியை நாடச் சொல்லி, பிரதிவாதி (வீரேசலிங்கம்) ஒரு முறை அறிவுறை கூறிய பிறகு, 1889 ஜூலை 28 ஆம் தேதி சங்கரம்மாவின்

வேண்டுகோளுக்கு மனமிளகி அவர்களுக்குத் துணை செய்யும் கருத்துடன் விசாரிக்கச் சென்றார் என்பது சாட்சியங்களிலிருந்து தெளிவாகிறது...சங்கரம்மாவின் வற்புறுத்தலினாலும், அவர்களும் ராமபிரம்மமும் வழங்கிய ஆணையின் பேரிலேயே அவர் (பிரதிவாதி) விசாரிக்கச் சென்றார் என்பது அவர் நடத்தையிலிருந்து புரிகிறது. அவர் கவனக் குறைவாகவோ, முறையில்லாத அல்லது தவறான வழியிலோ செயலாற்றினாரென்பதற்கான ஆதாரம் ஒன்றும் எனக்குத் தென்படவில்லை. தமக்குக் கிடைத்த ஆதாரங்களிலிருந்து வாதிதான் கல்வீச்சைத் தூண்டினாரென்றும் பிரதிவாதி உண்மையில் நம்பினாரென்பதில் சற்றும் ஐயமில்லை.'

1890 ஜூலை 15 ஆம் தேதி மாவட்ட நீதி மன்றத்தில், லக்ஷ்மீ நரசிம்மம் என்மேல் தொடர்ந்த 3,000 ரூபாய் மானநஷ்ட வழக்கு அவ்வளவு விரைவில் முடியாமல், ஏறத்தாழ மூன்றாண்டுகள் நடந்த பின்னர் 1893 மார்ச்சு 10ஆம் தேதி தீர்ப்பாகியது. இந்தத் தீர்ப்பில் மாவட்ட நீதிபதி எல்லா அம்சங்களிலும் சற்றேறக் குறைய எனக்குச் சாதகமாகவே தீர்ப்புக் கூறினாலும், 'வீடுகள் மீது கற்களை வீசத் தூண்டுவோர் பெரிய மனிதர்களாகக் கருதப் படுகிறார்கள்' என்று நான் விவேகவர்தனியில் வெளியிட்டதைப் பற்றி எனக்குப் பாதகமாக முடிவு தெரிவித்து, நான் வாதிக்கு மான நஷ்ட ஈடாக ஓர் அணா கொடுக்க வேண்டுமென்றும், அவரவர் செலவுகளை அவரவர் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றும் தீர்ப்புக் கூறினார்.

இந்த வழக்கு இவ்வாறு தீர்க்கப்பட்ட பின்னரும் லக்ஷ்மீ நரசிம்மம் என்பால் நல்லெண்ணத்தைக் கைவிடாமல், பார்த்த இடத்திலெல்லாம் வணக்கம் தெரிவித்தும், என்னிடம் பேசி வந்தார்.

நகர மன்றத்தையொட்டிக் கட்டப்பட்ட பிரார்த்தனை மண்டபத்தைப் பற்றி ஓரளவு சொல்ல வேண்டியுள்ளது. பிரார்த்தனை மண்டபத்திற்கான செலவுகளனைத்தையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை. இந்த மாவட்டத்தில் டெல்ட்டா சூப்பிரன்டெண்டென்டாக இருந்த டி. சேஷாசலம் நாயுடு, 1874இல் தம் உயிலில் ராஜமகேந்திரவரப் பிரார்த்தனை சங்கத்திற்கு நூறு ரூபாய் கொடுப்பதாக எழுதிவிட்டுக் காலமான பின்னர், அவருடைய அண்ணன் அந்த நூறு ரூபாயை எனக்கு அனுப்பினார். அந்த நூறு ரூபாயை ஏதாவது ஒரு நிலையான பணிக்குப் பயன்படுத்த வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்க, இறைவன் திருவருளால் பிரார்த்தனை மண்டபமொன்று கட்ட வேண்டுமென்ற எண்ணம் வந்தது. என் முடிவை உடனே ராஜா கோடே நாராயண கஜபதிராவ் பகதூர், சி. இ. அவர்

களுக்குத் தெரிவித்து, உதவி கேட்க, அவர் 300 ரூபாய் அனுப்பினர். என்னுடைய 200 ரூபாயையும் சேர்த்து விஷயத்தை எங்கள் சங்க நண்பர்களுக்குத் தெரிவிக்க, நியாபதி சுப்பாராவ் பந்துலு 50, கனவர்த்தி ஸ்ரீராமுலு 50, ஆர். வெங்கடரத்னம் நாயுடு 50, பெதிபட்ள வெங்கடப்பய்யா 50, ராயசம் வெங்கடசிவுடு 50 ரூபாய் சந்தா செலுத்தி உதவினர். நாங்கள் பிரார்த்தனை மண்டபம் கட்ட இருக்கிறோமென்ற செய்தி கேட்டு, நாங்கள் கேட்காமலே, மூன்று பெண் மணிகள் அக்கறையுடன், ஒருவர் ரூபாய் மூன்றும், மற்ற இருவர் தலைக்கு ஐந்து ரூபாயும் எனக்கு அனுப்பினர். பணக்காரரான ஆண்கள் கொடுத்த நூறுகளைவிட, சுதந்திரமற்ற அபலைகள் கொடுத்த இந்த மூன்றும், ஐந்துகளும் கடவுளுக்கு அதிக விருப்பமானவை என்று நான் கருதுவேன்.

மண்டபம் கட்டும் சமயத்தில் அருகிலிருந்து வேலை பார்த்து எனக்கு உதவிய ரெப்பாபிரகட பாபய்யாவிற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மண்டபம் கட்டி முடிப்பதற்கு ஏறத்தாழ 1,500 ரூபாய் ஆயிற்று. நான் மனையைக் கொடுத்ததுடன், சந்தா மூலம் வந்ததைத்தவிர செலவில் எஞ்சியதை நானே ஏற்றுக் கொண்டேன். ஆண்டு விழாவின்போது ஆர். வெங்கடரத்னம் நாயுடு பந்தரிலிருந்து வந்து, மண்டபத்தைத் திறந்து வைத்து, 1897 ஏப்ரல் 17ஆம் தேதி புதுமனை புகுவிழாவை நடத்திக் கொடுத்தார்.

1893 தொடக்கத்தில் புத்தாண்டுப் பட்டமளிப்பின்போது, இந்திய துரைத்தனத்தினர் எனக்கு ராவ் பகதூர்ப் பட்டத்தை அளித்தனர். இந்தப் பட்டமளிப்பிற்கு நான் தகுதியுள்ளவனோ இல்லையோ தெரியாதெனினும், பல இடங்களிலிருந்து எனக்குத் தெரிந்தவர்களும், தெரியாதவர்களும் பாராட்டுக் கடிதங்கள் எழுதினர். நூற்றுக்கு அதிகமாக வந்த கடிதங்களில் சில :

'உங்களுக்குக் கிட்டிய புதிய கௌரவத்தைப் பாராட்டுவதில் நான் முந்திக் கொள்ள விரும்புகிறேன்...எனக்குத் தெரிந்த வரையில் இந்தப் பட்டத்திற்கு உங்களைவிடத் தகுதியுடையவர்கள் வேறு யாருமில்லை.—இ. பி. மெட்காஃப், எம்.ஏ., தலைவர், ராஜமண்ட்ரி கல்லூரி.'

'தங்களுக்கு வழங்கப்பட்ட உகந்த கௌரவத்தை எண்ணி இறும்பூது எய்துகிறேன். அந்த நீண்ட கௌரவப் பட்டியலில், தங்களை விடத் தகுதி வாய்ந்த ஒருவர் என் கண்ணில் படவில்லை—எஸ். ரங்கையா செட்டி, பி.ஏ., தெலுங்கு மொழிபெயர்ப்பாளர், மெட்ராஸ் அரசாங்கம்.'

'நாங்கள் உங்களுக்கு அறிமுகமானவர்கள் அல்ல ரென்றாலும், இந்திய அரசாங்கம் மிகக் குறுகிய காலத்தில் உவந்தளித்த கௌரவத்திற்கு எங்கள் மனமார்ந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம். நிச்சயத்தார்த்தம், மற்றும் திருமணம் பற்றிய தங்கள் சமூகச் சீர்திருத்தக் கொள்கைகளை நாங்கள் ஏற்றுக்கொள்ள இயலாமைக்கு வருந்துகிறோம். இருப்பினும், செயலாற்றுவதில் தாங்கள் காட்டும் திடச் சித்தத்தையும், செயல்முறைச் சீர்திருத்தப் பாதையில் தங்களது விடாமுயற்சியையும் நாங்கள் சிரம் தாழ்த்தி வணங்குகிறோம்...... என். பட்டாபிராம ராவ்; டி. வரத ராவ் காலிக்கட்.'

'தங்களை நான் நேரில் பார்த்ததில்லை. இருப்பினும் தங்களைப் பற்றி நான் ஏராளமாகக் கேட்டிருக்கிறேன்... தங்கள் பணியைக் கருதி இந்திய அரசாங்கம் அளித்துள்ள கௌரவத்திற்கு நான் உள மகிழ்ந்து பாராட்டுகிறேன்—எம். பி. ஸ்ரீநிவாசய்யங்கார், தலைவர் உயர்நிலைப்பள்ளி, கோலார், மைசூர்.'

எனக்குப் பாராட்டுக் கடிதங்கள் எழுதியவர்களில் பலர், தெலுங்கு மொழி வளர்ச்சிக்கும் சீர்திருத்தத் துறைக்கும் நான் செய்த சொற்பத் தொண்டைப் பெருஞ்சேவையாகப் பாராட்டிப் புகழ்ந்தனர். சில சங்கத்தினர் எனக்குப் பாராட்டுத் தீர்மானங்கள் நிறைவேற்றி அனுப்பினர். அத்தகையவற்றில் ஒன்று :

'கோகநாடா (காகிநாடா) இலக்கியச் சங்கத்தின் உறுப்பினராகிய நாங்கள், அரசாங்கம் தங்களுக்கு 'ராவ் பகதூர்' பட்டமளித்துக் கௌரவித்ததற்குப் பெரிதும் மகிழ்கிறோம், நாட்டிற்குத் தாங்கள் ஆற்றிய அருந்தொண்டிற்கு ஈடாக இந்தக் கௌரவம் வழங்கப் பட்டதற்கு எங்கள் உளங்கனிந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். மற்றும், இளமையிலிருந்தே இலக்கியத் துறையில் பெருஞ்சிறப்புப் பெற்று, கடமையுணர்வு மிகப்பெற்று, தனிச்சிறப்புப் பண்புகள் வாய்க்கப் பெற்று, சமுதாய-சமயத் துறைகளில் சீர்திருத்தப் பணியிலும், தாய்மொழி இலக்கிய முன்னேற்றத்திற்கும், தம் தாயகத்து ஆண் பெண்பாலாரிடையே பயனுள்ள அறிவு பரவச் செய்வதற்கும், சமுதாயத் தார்மீகத் தரத்தை வளர்ப்பதற்கும் தம்மை நெடுங்காலம் அர்ப்பணித்துக் கொண்டதுடன், தமக்கென வகுத்துக்கொண்ட குறிக்கோளை அடைவதற்குப் பயனை எதிர்பாராமல் அரும்பெரும் தியாகங்கள் செய்து முயன்று வரும் தங்களைப் போன்று பிறிதொரு வரைப் பார்ப்பது அரிது. அத்தகைய காணற்கரிய தங்களுக்குச்

இச்சிறப்பு வழங்கப்பட்டிருப்பதைக் கண்டு நாங்கள் மனநிறைவும் பெருமையும் கொள்கிறோம்.

தங்களுக்கு நீண்ட ஆயுளைக் கொடுத்து, தாங்கள் மேற்கொண்டுள்ள நல்ல பல அரிய முயற்சிகளில் உறுதுணையாயிருக்க வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
தங்கள் பணிவுள்ள
**தூரிசேட்டி சேஷகிரி ராவ்**
தலைவர், மற்றும் இத்யாதி.'

ஆங்கில வாரப் பத்திரிகைகளிலும், தெலுங்குப் பத்திரிகைகளிலும் என்னைப் பாராட்டி, கட்டுரைகள் எழுதப்பட்டன. 'ஆந்திரப் பிரகாசிகா' வில் வெளியான ஒன்றை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன் :

'ராஜமகேந்திரவர அரசினர் முதல்நிலைக் கல்லூரியில் தலைமைப் பண்டிதரான ம. ரா. ரா. ஸ்ரீ. கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு அவர்களுக்கு இந்த ஆண்டுத் தொடக்கத்தில் இந்திய அரசினர் 'ராவ் பகதூர்' பட்டம் வழங்கியுள்ளனர்... தற்போது ஆங்கிலக் கல்வி கற்று, பண்பாட்டுடன் விளங்கும் அனைவரிலும் இவர் தலைசிறந்தவராவார். இவர் தம் நேர்மையான நடத்தையும், தெலுங்கு இலக்கியம் பரவுவதற்கும் வளர்வதற்கும் இவர் ஆற்றிய பணிகளும், இருபது வயதிலிருந்தே சமூகச் சீர்திருத்தத்திற்காக இவர் பாடுபட்டு வரும் அரிய நிலையும், குறிப்பாகப் பெண்கள் மறுமணத் துறையில் தம் பொருளையும், காலத்தையும், சக்தியையும் செலவழித்து வரும் தனிச் சிறப்பும், நற்குணமும், தாய்நாட்டுப் பற்றும், அறிவும் நிறைந்த பெருமக்களிடையே இந்தப் பெரியாருக்குப் பெரும்புகழை ஈட்டித் தந்துள்ளன. இவர் எல்லா நற்செயல்களையும், புகழையும் எதிர்பாராமல், கடவுளை நம்பி, தம் கடமைகளென்றே கருதி முடித்து வருகிறார்... தாம் மேற்கொள்ளும் நற்பணிகளில் மிக்க பற்றுடன், சாமர்த்தியத்துடன் ஈடுபடுவதோடல்லாமல், எல்லாவிதப் பாவச் செயல்களிலும், ஆடம்பரங்களிலும் வெறுப்புக் கொண்டு, எல்லா மக்களுக்கும் பயன்படும் செயல்களை ஓய்வின்றி நிறைவேற்றி வருகிறார். இவர் தெலுங்கு மொழியில் வசன காவியங்கள், செய்யுள் காவியங்கள், நாடகங்கள், கட்டுரைகள், மற்றும் கலைநூல்கள் முதலாகச் சுமார் 80 நூல்கள் இயற்றியுள்ளார். இவர் தெலுங்கு வசன காவியங்களுக்குத் தந்தை என்று கூறலாம். இவர் தம் நூல்கள் யாவும் நயமான இனிய எளிய நடையில் எழுதப்பட்டு, நீதிகள் பொதிந்து விளங்குவதுடனல்லாமல்,

ஹிந்து மதத்தில் காணும் தீய ஆசார நோய்களுக்கு மருந்தாக விளங்குகின்றன. இந்த மகான் பழைய நாகரிகத்தில் மூழ்கியவர்களாலும், பொருமை பிடித்த சிலராலும் வெறுக்கப்பட்டாலும், முடிவற்ற சோக வாழ்க்கையிலிருந்து மீட்கப்பட்ட சுமார் இருபது இளம் பெண்களின், மற்றும் தாய்நாட்டுப் பற்று மிகுந்தவரும், ஆந்திரக் கல்வி வளர்ச்சியைப் பேணும் அநேக மக்களின், இன்னும் புது நாகரிகப் போக்குள்ளவரின் ஆசிக்கும் பாத்திரமானவர். இந்தப் பட்டம் வழங்கியதன்மூலம் அரசினர் மிகவும் கௌரவப்படுத்தியிருப்பினும், இவர் மட்டும் இந்தப் பட்டத்தை ஒரு பொருட்டாக மதிக்கமாட்டார் என்பது இவரை அறிந்தவர்க்குத் தெளிவாகும். இந்தப் பட்டம் இந்த மகானின் பெயரோடு இணைக்கப்படுவது அதற்கே பெருஞ் சிறப்பாகும். பட்டங்கள் பெற்றவரும், கல்விச் செல்வம் நிறையப் பெற்றவரும் அநேகர் நம் நாட்டிலிருந்தாலும், அஞ்சா நெஞ்சுடன் பல கஷ்டங்களுக்கும் ஆளாகி, இறைவனை மட்டுமே நம்பி இவரைப்போல் பணியாற்றுவோர் எத்தனை பேர் உள்ளனர்? 'தென்னகத்து வித்தியாசாகர'ருக்குத் தற்பொழுது இந்தப் பட்டம் கிட்டியது சில அடிமுட்டாள்களுக்குக் கண்ணில் மண்வாரி இறைத்ததுபோல இருக்கலாம். இவர் இன்னமும் நெடுநாள் வாழ்ந்து அருந்தொண்டு புரிய நல்லோர் பேணும் இறைவன் அருள் வாருக!—ஆந்திர பிரகாசிகா, 1893 ஜனவரி 14.'

ராஜமகேந்திரவர அரசினர் கல்லூரித் தலைவர் மெட்காஃப் துரையின் தலைமையில் நகர மன்றத்தில் ஒரு கூட்டம் நடத்தி என்னைப் பாராட்டினர். அதன் பின்னர், சென்னை மாநிலக் கல்வி அதிகாரி டங்கன் துரை ராஜமகேந்திரவரம் வந்தபொழுது கல்லூரி மண்டபத்தில் ஒரு கூட்டம் நடத்தி, ஆசிரியர்கள், மாணவர்கள் முன்னிலையில் துரைத்தனத்தினர் அனுப்பிய பட்டப் பத்திரத்தை வழங்கினர்.

விதவை மணத் தொடக்க காலத்தில், சிறப்புற்ற பெரிய மனிதர்களை விட மாணவர் கூட்டமே எனக்குப் பேருதவி புரிந்தது. என் அறிவுரைகள் அவர்கள் மனத்தில் பதிந்ததுதான் அதற்குக் காரணமாக இருக்கவேண்டும். நற்காரிய வித்துக்களை மனப்புலத்தில் விதைத்துப் பயன் காண வேண்டுமெனில் இளமைப்பருவமே மிகவும் உகந்ததாகும். எனவே, கடவுள் பக்தியும், சமூகத் தொண்டுணர்ச்சியும் கற்பிக்கக்கூடிய பள்ளி இருக்குமானல், விரைவிலேயே நாடு முன்னேற்றம் காணும் என்பது தொடக்கத்திலிருந்தே என் நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே, ஏலூரி லக்ஷ்மீ நரசிம்மம் அவர்கள் ஆத்திகப் பள்ளியைத் துவக்கிய பொழுது நான்

அவரை ஊக்குவித்தேன். அந்தப் பள்ளி 1889 வரையில் இருப்பினும் எண்ணியதுபோல் பயனேதும் அதனால் விளையவில்லை. பெயர் சூட்டிவிட்ட மாத்திரத்தில் நல்லெண்ணங்கள் நிறைவேறி விட இயலாது. அந்த நல்லெண்ணங்களை இளைஞர்களின் இதயங்களில் ஊன்றச் செய்வதற்குத் தக்க ஆற்றலும், அக்கறையும் வாய்ந்த நல்லாசிரியர்களும் வேண்டும். அத்தகைய ஆசிரியர்களை ஒன்று திரட்டி, ஆத்திகமதப் பள்ளியை அவர் உருவாக்க வேண்டுமென்று, என்னிடம் படித்து வந்தவர்களில் சிலரைத் தூண்டிவிட்டு அனுப்பி வைத்தேன். 1893இல் பட்டத் தேர்வில் தேர்ந்திருந்த ராயசம் வெங்கடசிவுடுவும், சத்திராஜு மிருத்யுஞ்சய ராவும், எல்.டி. தேர்வுக்குப் படிப்பதற்கெனச் சைதாப்பேட்டைக்குப் போயினர். அடுத்த ஆண்டு சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக்கு அனுப்புவதற்கென மேலும் இருவரைத் தயார்ப்படுத்தி இருந்தேன்.

பள்ளிக் கட்டடம் ஒன்றையும் ஏற்படுத்த வேண்டுமென்று முயன்று தொடங்கினேன். இன்னிசுபேட்டை மத்தியிலிருந்த தம் பெரிய தோட்டத்தை 1,600 ரூபாய்க்கு விற்பதற்கு வாட்ரேபு ஸ்ரீராமுலு ஒப்புக்கொண்டார். அந்தத் தொகையைக் கொடுக்க நியாபதி சுப்பாராவ் ஒப்புக்கொண்டார். காகிநாடாவில் வசிப்பவரான கஞ்சாமு வெங்கடரத்னம் 1,000 ரூபாய் அனுப்பினர். ஆனால் அரசினர் கல்லூரித் தலைவரின் உதவியும் இந்தப் பணிக்குத் தேவையாகும். அவரும், எங்கள் தோழர்களும் சேர்ந்து பட்டணத்திலிருந்த பள்ளிகளனைத்தையும் கொஞ்ச காலத்திற்கு முன்னர்தான் ஒன்று சேர்த்து ஓர் உயர்நிலைப் பள்ளியை உருவாக்கியிருந்தனர். அதை அரசினர் எடுத்துக்கொண்டு அதையொட்டி இரண்டு மூன்று இடைநிலைப் பள்ளிகளை நடத்துவதற்கு முயற்சிகள் நடைபெற்று வந்தன. இதற்கிடையில் நானே வேறொரு பள்ளியை ஏற்படுத்தினால் எதிர்ப்புப் பள்ளியென்று துரையவர்கள் நினைக்க ஏதுவாகும். அதனால் நான் புதிய பள்ளி எண்ணத்தைத் தெரிவிக்கும் முகத்தான் மெட்காஃப் துரைக்கு ஒரு கடிதம் எழுதி, பள்ளித் துவக்கம் நடக்கவில்லையெனில், சைதாப்பேட்டையில் பயிற்சி பெற்று வரும் வெங்கடசிவுடுவையும், மிருத்யுஞ்சய ராவையும் ராஜமகேந்திரவரத்தில் ஆசிரியப் பணியில் அமர்த்துவதற்கு முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டேன். உயர்நிலைப் பள்ளியொன்றை நான் துவக்க ஒப்புக்கொள்ள வில்லையெனினும், நான் இடைநிலைப் பள்ளியுடன் திருப்தி அடைவதாக இருப்பின் நகர மண்டபத்திற்கெதிரில் இருந்த பள்ளிக் கட்டடத்தை மாற்றிக் கொடுப்பதாக அவர் கூறினர். இடைநிலைப்

பள்ளியில் பணியாற்ற வெங்கடசிவுடு ஒப்புக்கொள்ளவில்லை. உயர்நிலைப் பள்ளிக்குத் துரையவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஆயிரம் ரூபாயை கஞ்சாமு வெங்கடரத்னத்திற்குத் திருப்பிக் கொடுத்துவிட்டு, அப்போதைக்கு என் முயற்சிகளை நிறுத்தி வைத்தேன். சத்திராஜு மிருத்யுஞ்சய ராவும், கோட்டேடி கனக ராஜுவும் இடைநிலைப் பள்ளியிலாயினும், எவ்வளவு குறைந்த சம்பளத்துக்கெனினும், சமூகத் தொண்டிற்கெனப் பாடுபடத் தயாராக இருந்தனர். இதற்கிடையில் தேர்வு முடிவுகள் வெளியாயின. எல்.டி. தேர்வில் மிருத்யுஞ்சய ராவ் வெற்றி பெற்றார். வெங்கடசிவுடு தவறிவிட்டார். என் சொல்லை மதித்து மெட்காஃப் துரை மிருத்யுஞ்சய ராவுக்கு அரசினர் கலைக் கல்லூரியில் ஒரேயடியாக நூறு ரூபாய் சம்பளத்தில் வேலை கொடுத்தார்.

கஞ்சாமு வெங்கடரத்னம் அவர்கள் காகிநாடாவில் வழக்கறிஞராக இருந்து பெரும் பொருளீட்டி, சென்னை அரசினர் சட்டப் பேரவையில் உறுப்பினராகப் பணியாற்றி, புகழ் பெற்றவராவார். 1896ஆம் ஆண்டு, காகிநாடா கல்லூரியில் மாணவர் உதவிச் சம்பள ஏற்பாட்டை என் பெயரில் ஏற்படுத்தக் கருதி, 2,000 ரூபாய்க்கான காப்புறுதிப் பத்திரத்தை அனுப்பியதாக எழுதியபொழுது, என்னை விட்டுவிட்டு என்னைவிடத் தகுதி வாய்ந்த அவர் பெயரிலேயே ஏற்படுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள, எனக்கிவ்வாறு (ஆங்கிலத்தில்) பதிலெழுதினார் :

' நீண்ட சிந்தனைக்குப் பின்னரே நான் இந்த முடிவுக்கு வந்தேன். என் வாழ்நாளில் நான் இதைவிடச் சிறந்த முடிவொன்றை எடுத்ததாக எனக்கு நினைவில்லை. இதைப்போன்ற நினைவுச் சின்னங்கள் உங்களுக்குத் தேவையில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் உங்களைப் பணிவோடு, ஆனால் நெருக்கத்தோடு நேசிக்கும் பேற்றை எனக்கு அருள மறுக்க மாட்டீர்கள் என நம்புகிறேன்... நான் சிறுவனாக இருந்தபொழுது உங்களிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தேன் என்பதையும், உங்கள் எடுத்துக்காட்டு எந்த அளவு என் பொது வாழ்வை ஊக்கி உள்ளதென்பதையும், உங்களைக் காணக் காண அந்தத் தொடக்க கால மதிப்பீடு எந்த அளவு உயர்ந்து வந்துள்ளதென்பதையும் உங்களால் புரிந்து கொள்ள இயலாது. உங்கள் மேலான, எடுத்துக்காட்டான வாழ்வைப் பிற்காலச் சந்ததியாருக்கு நினைவுபடுத்த மேற்கொள்ளப் படும் முயற்சி ஒவ்வொன்றும் படித்தவர், தம் நாட்டுப் பற்றைக் காட்டும் நிகழ்ச்சியேயாகும்... எனவே என்னுடைய ஆலோசனைக்கு

ஒப்புதல் தெரிவித்து, உதவிச் சம்பளத்தின் நியதிகளை வரையறுக்குமாறு பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.'

1898 இல் சென்னை அரசினர் என்னை ஓர் உறுப்பினன் ஆக்கினர்.

என் உடல்நலக் குறைவின் காரணமாக விவேகவர்தனி நிறுத்தப்பட்ட பின்னர், 1891இல் நியாபதி சுப்பா ராவ் பந்த்துலு தெலுங்கில் 'சிந்தாமணி' எனும் மாதப் பத்திரிகையைத் துவக்கி, எங்கள் விவேகவர்தனி அச்சகத்திலேயே அதை அச்சடித்து வந்தார். அதில் நானும் எழுதி வந்தேன்.

நான் சில ஆண்டுகளாகவே சென்னைக்குப் போக வேண்டுமென்று எண்ணியிருந்து, 1894இல் கோடை விடுமுறையில் அங்குச் சென்றபொழுது புரசைவாக்கத்தில் ஒரு வீட்டை வாங்கி, அதை இடித்து ஒரு மாடி வீட்டைக் கட்டினேன். பிறந்த இடத்தையும், இளமைத் தோழர்களையும் விட்டுவிட்டுத் தொலைவில் என்னை இருக்கத் தூண்டிய காரணங்கள் இரண்டு: ஒன்று, என் புத்தகங்களைச் சென்னையில் தொகுதிகளாகப் பதிப்பிக்கலாம் என்பது; இரண்டாவது, சமூக சீர்திருத்த விஷயத்தில் தலைநகரில் பணியாற்றலாமென்பது.

நான் எழுதிய புத்தகங்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வந்தது. அவற்றைக் கண்ணுக்கு அழகாக அச்சடிக்க ராஜமகேந்திரவரம் போன்ற நகரத்தில் முடியவில்லை. இந்த வேலைக்கு நிரம்பப் பணம் தேவை. ஆனால் என் கையில் எப்போதும் பணம் எஞ்சியிருந்ததில்லை. என் புத்தகங்களைப் பிற அச்சகங்களில் அச்சடிக்க வேண்டுமெனில் ஆயிரக் கணக்கான ரூபாய்கள் தேவையாகும். எனவே ஒரு புதிய அச்சு இயந்திரத்தைச் சென்னையில் வாங்கிப் பொருத்தி, வேலையைத் துவக்க எண்ணினேன். இந்த வேலைக்கும் பணம் தேவைப்பட்டது. இந்தப் பணத்தைத் தயாரிப்பதற்கென என் விவேகவர்தனி அச்சகத்தை சித்ரபு நரசிம்ம ராவுக்கு விற்றதுடனல்லாமல், நியாபதி சுப்பா ராவ் பந்த்துலுவிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கவேண்டி வந்தது. நான் கேட்டதாலும், என் துணையின்றிச் 'சிந்தாமணி' பத்திரிகையை நடத்துவது கடினமென்று தோன்றியதாலும் சுப்பா ராவ் பந்த்துலு அந்தப் பத்திரிகையை சென்னையில் நடத்துவதற்கென எனக்குக் கொடுத்துவிட்டார். நான் இங்கிலாந்துக்கு எழுதி, நீராவியால் இயங்கும் நல்ல அச்சு இயந்திரத்தை வரவழைத்து, அதற்கு 'சிந்தாமணி அச்சகம்' என்று பெயர் சூட்டினேன்.

தொடக்கத்தில் உயர்நிலைப் பள்ளி இல்லாமல் கல்வி மணம் குறைந்து, நெடுங்காலம் இருப்புப் பாதையுமில்லாமல் நவநாகரிகத் தொடர்பற்று, கோதாவரிப் புனித நதி பாயும் பகுதி ஆதலால் வேதப் பிராம்மணக் கூட்டம் நிறைந்து, புதிய ஆசார எதிர்ப்புக்குப் பெயர் பெற்ற ராஜமகேந்திரவரத்தில் சமூகச் சீர்திருத்தப் பணியைத் தொடங்கினேன். உவர் நிலத்தில் முயன்று பாடுபடும் வேளாளனின் முயற்சியைப் போல என் முயற்சி இங்குத் தக்க அளவு பயன் கிடைக்காமல் வீணாகப் போவதால், சென்னைப் பட்டணத்தில் என் முயற்சிக்கு நிரம்பப் பயன் கிடைக்குமென்று நம்பி, சென்னையம் பதியில் நிலையாகக் குடியிருக்கத் திட்டமிட்டேன்.

நான் அவர்களை விட்டுப் போக இருக்கிறேனென்று தெரிந்ததும், என் கருத்துக்களுடன் ஒத்துப் போகாதவர்களும் எனக்கு மரியாதை காட்டுவதில் ஒன்றுபட்டு, தம் வருத்தத்தைத் தெரிவித்துக் கூட்டங் களில் சொற்பொழிவாற்றியும், என்மேல் பாடல்களை இயற்றியும், எனக்கு விருந்துகள் அளித்தும் பல வகைகளில் தம் அன்பைக் காட்டினர். பல சங்கத்தினர் என்னை, நடுவில் அமர்த்திப் புகைப் படம் பிடித்துக் கொண்டனர். எனக்குப் புகழ் மாலைகள் சூட்டிப் பத்திரிகைகளில் வெளியிட்டனர். காகிநாடா நகரவாசிகளும் கூட்டம் கூட்டி, இது போன்றே என்னைக் கௌரவித்து விடை தந்தனர். 1897 ஆம் ஆண்டு இறுதியில், நான் குடும்பத்துடன் சென்னையை அடைந்தேன்.

நான் ராஜமகேந்திரவரத்தை விட்டுச் செல்வதற்கு முன் 27 மகளிர் மறுமணங்கள் நடந்தேறின. இவற்றில் 20 ஆவது, ஆதிபூடி சோமநாத ராவினுடையது. இவர் திருமணம்முடித்த இளம்விதவை கஞ்ஜாம் மாவட்டத்தின் ஆஸிக்கோ (அஸ்கா) கிராமத்தைச் சேர்ந்தவள். இந்த இளம் பெண் ராஜமகேந்திரவரத்தில் விதவைத் திருமணம் நடத்துகிறார்களென்று அண்ணன் பத்திரிகையில் படிக்கக் கேட் டாளாம்! அவள் பேச்சோடு பேச்சாகத் தன் அண்ணியிடம், 'ராஜமகேந்திரவரத்தில் இளம் விதவைகளுக்குக் கல்யாணம் நடத்து கிறார்களாம்!' என்று சொன்னாளாம். 'அப்படிச் சொல்லாதே, தப்பு.' என்று அண்ணி கண்டித்தாளாம். அண்ணியின் கருத்தைப் புரிந்து கொண்ட அந்தப் பெண் மறுபடியும் எப்போதும் கல்யாணப் பேச்சை எடுக்காமல், தன்னைப்போல் இளம் பருவத்தில் கணவனை இழந்த மற்றோர் இளம்விதவையிடம் கலந்து பேசி, ராஜமகேந்திர வரம் போக நிச்சயித்துக் கொண்டு, ஒருநாள் யாருக்கும் தெரியாமல் கிராமத்தை விட்டுப் புறப்பட்டு, விஜயநகரம் வந்து சேர்வதற்குள்

இரண்டாவது இளம்பெண் துணிவு இழந்து, மேலே போக மன மில்லாமல், அத்தோடு நின்றுவிட்டாளாம். அந்தப் பெண் மட்டும் பின்னேக்கிப் போகாமல், தன்னந் தனியாகவே புறப்பட்டு, பெட்டியி லிருந்த தங்கத்தையும் விற்றுக் கொண்டு, கொஞ்ச தூரம் வண்டி யிலும், கொஞ்ச தூரம் நடந்தும் இடைவிடாது பயணம் செய்து, கடைசியில் எப்படியோ ராஜமகேந்திரவரம் சேர்ந்து, என் வீட்டுக்கு வந்து தன் கனவை நனவாக்கிக் கொண்டாள். பருவ வயதினளான அநாதைப் பெண் தன்னந் தனியாகப் புறப்பட்டு, மாவட்டங்கள் கடந்து, நூற்றுக் கணக்கான மைல்கள் பயணம் செய்து வந்தா ளென்பது சாதாரணமான விஷயமல்ல! இவளைச் சோமநாத ராவ் 1893 ஜூன் 28 அன்று மணந்து கொண்டார்.

நான் 1897 டிசம்பரில் சென்னை அடைந்து, புரசைவாக்கத்தில் சொந்த வீட்டில் குடியேறி, அங்கேயே சிந்தாமணி அச்சகத்தையும் ஏற்படுத்தி, என் புத்தகங்களை அச்சிடத் தொடங்கினேன். வேலை முடிவதற்கு இரண்டாண்டுகள் பிடித்தன. என் புத்தகங்கள் அனைத்தும் பத்துப் பெரிய தொகுதிகளாக அமைந்தன. என் உடல்நலம் மேலும் குன்றியதால், ஓராண்டுக் காலம் நடத்திய பிறகு 'சிந்தாமணி' பத்திரிகையை நிறுத்த வேண்டியதாயிற்று.

சமூகச் சீர்திருத்தச் சங்கத்திற்கும், தட்சிண ஹிந்துஸ்தான் பிராம்ம சமாஜத்திற்கும் தலைவனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். சென்னை தேசிய மொழிப் பள்ளிப் பாடப் புத்தகக் குழுவில் (Text-Book Committee) என்னை உறுப்பினனுக்கினர். பல்கலைக் கழகத்தினர் தம் திராவிட மொழிப் பயிற்சிக் குழுவில் என்னை உறுப்பினனுக அமர்த்தினர். இறுதியாகத் துணைக் கலெக்டர் முதலானவர்கள் எழுதும் தெலுங்குத் தேர்வுகளுக்கு என்னை ஓர் தேர்வாளனுக அரசினர் நியமித்தனர்.

நான் சென்னைக்குப் போகும் சமயத்தில் சமூகச் சீர்திருத்தச் சங்கத்தினரால் ஏற்படுத்தப்பட்ட சீர்திருத்த விருந்துகள் பிரபலமாகி யிருந்தன. சீர்திருத்த விருந்துகளுக்கு அழைக்கப்பட்டு ஒரு முறை சென்றேன். இந்த விருந்து நகர மண்டபத்தில், ஓர் அறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தெற்கத்திய பிராம்மணன் ஒருவன் சமைத்துப் பரிமாற எண்பது பேர் விருந்து சாப்பிட்டனர். அவர் களில் பிராம்மணரல்லாதவர் இருவர் இருந்தனர். தெற்கத்திய சாப்பாடு பிடிக்காமற் போனதால் நான் பசியோடு வீட்டுக்கு வந்து, மறுபடியும் சாப்பிட வேண்டியதாயிற்று.

ஓய்வாகச் சிந்தித்த பொழுது சீர்திருத்த விருந்தின் முக்கியத்துவம் எனக்குப் புரியவில்லை. மீண்டும் சீர்திருத்த விருந்துநாள் வந்தது. இந்த முறை வீட்டில் சாப்பிட்டுவிட்டுச் சென்றேன். ஏனையவர்கள் பசியைத் தீர்த்துக் கொண்டிருக்க, வயிறு நிறைந்த நான் பேச்சுக் கொடுத்து என் ஐயங்களைத் தீர்த்துக்கொண்டேன். இந்த விருந்து களின் சிறப்பு என்னவென்று கேட்டேன். பிராம்மணர்களும் பிராம்மணரல்லாதாரும் சேர்ந்து உட்கார்ந்து உண்பதுதான் என்று கூறினர். இங்கு வந்து சாப்பிட்டவர்களின் பெயர்களைப் பத்திரிகை களில் அறிவிப்பீர்களா என்று மறுபடியும் கேட்டேன். பெயர்களை அறிவிப்பதாயின் இந்த விருந்துகளே நடவாதென்று ஒருவர் பதில் சொன்னுர். போலி வேடத்தில் இயற்கையாகவே வெறுப்பு கொண்ட நான், 'பெயர்கள் பிறருக்குத் தெரிவிக்க விரும்பாத தைரியசாலிகள் பெரிய வீரர்களைப் போல், இன்றைய சீர்திருத்த விருந்து சீரும் சிறப்பும் மிக்க வகையில் நடந்தேறியது என்று பத்திரிகைகளில் அறிவித்துத் தூரத்திலிருப்பவர்களை மோசம் செய்வது என்ன ஆண்மை?' என்று சத்தம் போட்டேன். என்னைப் பிறகு சீர்திருத்த விருந்துகளுக்கு அழைக்க வில்லை. சீர்திருத்த விருந்து பற்றிய அறிவிப்பை நான் பத்திரிகைகளில் எப்போதும் படிக்கவும் இல்லை. சென்னையை அடைந்த பின்னர், சீக்கிரத்திலேயே நடைபெற்ற சமூகச் சீர்திருத்தச் சங்கத்தின் மாநாட்டில் போலி வேடத்தினுல் பயனில்லை யென்றும், நிலையாக இருக்கக் கூடிய பணியை நிறை வேற்ற வேண்டுமென்றும் கூறினேன். சங்கத்தினர் விதவையர் பாதுகாப்பில்லம் ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று மிகவும் உற்சாகத்தோடு முடிவு செய்தனர். அதற்கென வீடு வாங்குவதற்குத் தாம் முதலீடு செய்வதாக, எஸ். கே. ராமஸ்வாமய்யா அவர்கள் கருணை யுள்ளத்தோடு கூட்டத்தில் கூறினுர். சந்தா திரட்டி, கிடைக்கும் தொகைக்கு வீடு வாங்குவ தென்றும், இதற்கிடையில் ராமஸ்வாமய்யாவிடம் நூற்றுக்கு மாதத்திற்கு முக்கால்ரூபாய் வீதம் வட்டிக்கு, வேண்டிய பணத்தைக் கடனுகப் பெற்றுக் கொண்டு வீடு வாங்கிவிடுவ தென்றும் முடிவு செய்து, தக்க வீட்டைப் பார்ப்பதற்கு எனக்கு அதிகாரமளித்தனர். நான் பெருமகிழ்ச்சி யடைந்து, நானிருந்த வெள்ளாளத் தெருவிலேயே 20 ஆம் எண் கொண்ட வீடு விற்பனைக்கு வரவே, 3,800 ரூபாய்க்குப் பேரம் பேசி முடித்து, வீட்டுரிமைப் பத்திரங்களை வாங்கி வைத்துக் கொண்டேன்.

கடன் விஷயமாக ராமஸ்வாமய்யாவைக் கேட்டபொழுது, அந்தத் தொகை தம் தம்பியின் பங்கில் அடங்கியுள்ள தென்றும், தகுந்த ஈடு

காட்டினு லொழிய கடன் கொடுக்க இயலாதென்றும் கூறினுர். வாங்கப் போகும் வீட்டை மட்டுமல்லாமல், என் வீட்டையுங் கூட ஈடு வைப்பதாகச் சொன்னேன். நான் சொல்வது அவர் மூளையில் ஏறுவதாக இல்லை. இதற்கிடையில் நான் உரிய தொகையைக் கொடுக்காததால், வீட்டுக்காரர், வழக்கறிஞர் மூலம் எனக்கு ஓர் எச்சரிக்கைக் கடிதம் அனுப்பினுர். சமூகச் சீர் திருத்தச் சங்கத்தின் கூட்டத்தைக் கூட்டி, என் நிலையை விளக் கவே, வீட்டுக்காரர் வழக்கைப் போட்டுக் கொள்ளட்டு மென்றும், ஓராண்டிற்குள் தீர்ப்புக்கு வராதென்றும், அப்பொழுது என்ன செய்வதென்று பார்த்துக் கொள்ளலா மென்றும் சங்கத்தினர் சொல்லி விட்டனர்.

அனுவசியமாகக் கோர்ட்டுக் கச்சேரி ஏறுவது எனக்கு இஷ்ட மில்லை. வீட்டுக்காரரின் வழக்கறிஞரிடம் பேசி, தற்போது ரூ. 500 கொடுப்பதாகவும், மிகுதியை மூன்று மாதங்களில் கொடுத்து வீட்டைச் சுவாதீனப்படுத்திக் கொள்வதாகவும், கொடுக்க முடி யாமற் போனுல் ரூ. 500 ஐ இழந்து விடுவதாகவும் உடன்படிக்கை செய்து கொண்டேன். அதன்படி, தேர்வாளர் என்ற முறையில் எனக்கு வந்ததொகையில் 500 ஐ முன்பணமாகக் (advance) கொடுத் தேன். மூன்று மாதங்களில் ரூபாய் 3,300 கொடுத்து முடிக்க வேண்டியிருந்ததால் நண்பர்களிடம் கேட்டும், சிலருக்குக் கடிதம் எழுதியும் முயற்சி செய்யத் தொடங்கினேன். சென்னையிலிருந்த புச்சையய பந்த்துலு ரூ. 500, டாக்டர் ஸி. பி. ராமாராவ் ரூ. 400, காகிநாடாவைச் சேர்ந்த துக்கிரால பிரகாச ராவ் ரூ. 500, நியாபதி சுப்பா ராவ் பந்த்துலு ரூ. 500, போலவரமு ஜமீந்தார் ரூ. 1000மும் கடன் கொடுத்து என்னை ஆபத்திலிருந்து காப்பாற்றினர். நான் நன்றியுணர்ச்சியுடன் அவர்களுக்கு என் வணக்கங்களைத் தெரி வித்துக் கொள்கிறேன். 'இந்தத் தொகையை விதவையர் இல்லத் திற்கு நன்கொடையாகவைத்துக் கொண்டு ஆதரிக்கவும்' என்று போலவரமு ஜமீந்தார் எழுதினுர். கல்லூரியில் என்னிடம் படித்து வந்த காலத்திலிருந்து அடக்க ஒழுக்கங்களோடும், என்னிடம் கௌரவ மரியாதைகளோடும் நடந்து கொண்டு வந்தார். எண்ணெய் வண்ணங்களால் (Oil colour) தீட்டப்பட்ட என் உருவப்படம் ஒன்றை ராஜமகேந்திரவர நகர மண்டபத்திற்குத் தம் அன்பளிப்பாக இவர் அளித்தார்.

விதவையர் பாதுகாப்பில்லத்தை என் வீட்டிலேயே நடத்தி வந்தேன். இருவரோ, மூவரோ, நால்வரோ விதவையர் என்

வீட்டில் எப்போதும் இருந்துகொண்டே இருந்தனர். நான் அவர்களுக்குச் சம்பளம் கட்டிப் பள்ளிக்கு அனுப்பியும், சாப்பாடு துணிமணி புத்தகங்களைக் கொடுத்தும், நோய் கண்ட சமயங்களில் வைத்தியம் பார்த்தும் விதவையர் பாதுகாப்பில்லத்தை இயக்கி வந்தேன். எங்கள் வீட்டில் பத்து விதவை மறுமணங்கள் நடந்தேறின. இந்தப் பத்தில் மூன்ருவதும், நான் நடத்தி வைத்தவற்றில் முப்பதாவதுமான கல்யாணத்தைப் பற்றி முக்கியமாகச் சொல்ல வேண்டியுள்ளது.

ஸ்ரீ மகாலக்ஷ்மியம்மா எனும் அந்தப்பெண் காகிநாடாவிலிருந்து வந்து இரண்டு ஆண்டுகள், சென்னையில் என் வீட்டில் இருந்தாள். அவள் ஓரளவு அழகும், படிப்பும் புத்திசாலித்தனமும் பெற்றவளாயிருந்தாள். அவளுடைய கடந்த கால வாழ்க்கையைப் பற்றிச் சில அக்கப்போர்கள் இருந்துவந்தன. ஆனல் என்னிடம் இருந்த பொழுது நல்லபடியே நடந்துவந்தாள். அவளுக்கு அப்பொழுது 20 வயது முடிந்திருக்கலாம். பட்டதாரியைத் தவிர மற்ற எவரையும் திருமணம் செய்து கொள்வதில்லை என்று அவள் முடிவு செய்திருந்தாள். இந்த முடிவுக் கேற்றபடி பட்டதாரியும், புத்திசாலியுமான ஒருவன் அவளை விரும்பித் திருமணம் செய்து கொள்ள ஒப்புக் கொண்டான். ஏறத்தாழ நிச்சயதார்த்தம் முடிந்த சமயத்தில் சில புதிய விஷயங்கள் என் காதுக்கு வந்தன. அவற்றைக் கேள்விப் பட்ட பிறகு அந்தச் சம்பந்தத்தை நிறுத்த எண்ணினேன். இரண்டு மூன்று முறை கடிதப் போக்குவரத்திற்குப் பிறகே அந்த வரன் கல்யாண ஏற்பாட்டை நிறுத்தி விடுமாறு எனக்கு எழுதினுன்.

பிறகு சீக்கிரத்திலேயே, என்னுடைய நெருங்கிய நண்பரான நியாபதி சுப்பாராவின் தம்பியான, நாற்பதாண்டுகள் நிறையப் பெற்றவருமான, சேஷகிரி ராவ் பந்த்துலு என்னிடம் வந்து, தமக்கு விதவைத் திருமணம் செய்து கொள்ள விருப்பம் இருப்பதாகவும், தக்கவர் இருந்தால் சொல்லுமாறும் கேட்டார். அப்பொழுது என்னிடம் இருந்த இருவரில் இந்தப் பெண்ணையே அவர் தேர்ந்தெடுத்தார். நான் எதையும் மறைக்காமல் கேள்விப்பட்ட விஷயங்களனைத்தையும், நின்றுபோன திருமணத்தைப் பற்றியும் விரிவாகச் சொல்லி, என்னிடமிருந்த கடிதங்களையும் அவரிடம் கொடுத்தேன். மணமக்கள் இருவரும் மனம் விட்டுப் பேசி, ஒருவரையொருவர் நன்கு புரிந்துகொண்டு, திருமணத்திற்கிசைந்தனர். நானும் நிச்சயதார்த்தம் நடத்தி வைத்தேனே தவிர, முதலில் இந்த விஷயத்தைச் சுப்பாராவ் பந்த்துலுவுக்குத் தெரிவித்தாக வேண்டு

மென்று சொன்னேன். அவர் கட்டாயம் ஒப்புக்கொள்வார் என்று நம்பினேன். தாம் ஒரு முறை விதவைத் திருமணம் பற்றிப் பேச்செடுத்தபோது, அதில் கஷ்டங்கள் இருப்பதாகவும், அத்தகைய திருமணங்கள் சரியல்லவென்றும் சொல்லி மேலே பேசவிடாமல் செய்ததாகவும், எனவே திருமணத்திற்கு முன்னுல் அவருக்குத் தெரிவிப்பது நல்லதல்லவென்றும் சேஷகிரி ராவ் பந்த்துலு என்னிடம் சொன்னுர். பந்த்துலுவுக்குத் தெரிவிக்காமல் இந்தத் திருமணம் நடிக்க முடியாதென்றும், இதற்கு அவர் நிச்சயம் ஒப்புக் கொள்வா ரென்றும், அப்படி ஒப்புக் கொள்ளவில்லையெனினும் நான் திருமணத்தை நடத்தி வைப்பேனென்றும், நான் இது பற்றி அவருக்கு எழுதுவதாகவும் சொன்னேன். ராஜமகேந்திரவரம் சென்று தம் அண்ணனிடம் சொல்லிய பிறகு தாம் கடிதம் போடுவதாகவும், அதற்கு முன் என்னைக் கடிதம் எழுத வேண்டாம் என்றும் அவர் என்னை வேண்டிக்கொண்டார். இதற்கிடையில் சேஷகிரி ராவின் லீவு நாட்கள் முடிந்துவிட்டன. அவர் பொப் பிலிக்குச் சென்று வேலையில் சேர வேண்டியிருந்தது. சொன்னபடி ராஜமகேந்திரவரத்திலிருந்து கடித மெழுதவில்லையென்றுலும், மணமகளை அழைத்து வருமாறு அவர் பொப்பிலியிலிருந்து தந்தி அனுப்பினுர்.

தம்பி, அண்ணனின் அனுமதியைப் பெறவில்லை என்பதை ஊகித்து மணமகளை அழைத்துக் கொண்டு, மனைவியுடன் ரெயில் வழியாக விஜயநகரம் சென்று வந்தேன். சேஷகிரி ராவின் பணி யாட்கள் என்னை வண்டியமர்த்தி கஜபதி நகரத்திற்கு அழைத்துச் சென்றனர். சேஷகிரி ராவ் அதற்கு முன்னரே அங்கு வந்து திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைத்தும் செய்திருந்தார். நான் அவரைக் கண்ட உடனே, ‘உங்கள் அண்ணன் சம்மதித் தாரா ?’ என்று கேட்டேன். அவரிடம் சொல்லவில்லையென்றும், திருமணம் நடந்த பிறகு எழுதிவிடலாமென்றும் அவர் சொன்ன பொழுது நான் பட்ட கவலையை விளக்க முடியாது. அவ்வளவு தூரம் வந்து, திருமணத்தை நடத்தாமல் திரும்புவது நல்லதல்ல வென்று நினைத்து 1900 பிப்ரவரி 26 ஆம் தேதி முகூர்த்தத்தை நடத்திவிட்டு நானும், என் மனைவியும் ராஜமகேந்திரவரம் வந்தோம். வந்த மாலை நகரமண்டபத்திற்குச் சென்று சுப்பா ராவ் பந்த்துலுவிடம் தம்பியின் திருமண விஷயத்தை நானே முதன் முதலில் தெரியப் படுத்தினேன். அவர் முகம் சற்று வெளிறியதே தவிர, கோபத்தின் அறிகுறி ஒன்றும் தென்படவில்லை. அவர் அதற்குமேல் அங்கு

நிற்காமல், உடனே வண்டியேறி வீட்டுக்குப் போய்விட்டார். மறு நாள் நான், சுப்பா ராவ் பந்த்துலுவின் வீட்டிற்குச் சென்றபொழுது அவர் என்னைக் கண்டபடி திட்ட வில்லையென்றாலும், கோபமாகவும் வேண்டா வெறுப்புடனும் நடந்து கொண்டார். நான் உடனே அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, திருமணத்திற்கு முன்னால் சொல்லாமற் போனதே நல்லதென்று எனக்குள் எண்ணிக்கொண்டு வீடு நோக்கி நடந்தேன். முதலிலிருந்தே விதவை மறுமணக் காரியங்களில் ஈடுபாடு கொண்டு, எனக்கு எத்தனையோ விதங்களில் உதவி வந்த சுப்பா ராவ் பந்த்துலு, தம்பி விதவையைத் திருமணம் செய்துகொண்ட அளவில் அவ்வளவு கோபத்திற்கு ஆளாவானேன் என்று புரிந்து கொள்ள முடியாமல், சீக்கிரத்திலேயே இந்தச் சினம் தணிந்து, எங்கள் இருவரிடையே நட்பு பழையபடியே நிலவத் தொடங்குமென்று எண்ணிக் கொண்டேன். ஆனால் அந்த நிலை வருவதற்குப் பல ஆண்டுகள் ஆயின. நண்பர்கள் அனைவரிலும் நெருங்கிய நண்பரான கடவுளின் ஆணையை நிறைவேற்றும்பொழுது என்ன நடந்தாலும் நடக்கட்டுமென்று அமைதியாக இருந்தேன். எதிர்பாராமல் என்மேல் உண்டான கோபம், நான் மேற்கொண்ட சமூகச் சீர்த்திருத்தப் பணியில் அவரை ஓரளவு வெறுப்புக் கொள்ளச் செய்தது.

காலத்தின் மகிமையால் வெளி விஷயங்களில் தோன்றும் மாறுதல்கள் ஒரு பக்கத்திலிருக்க, உள்ளத்தில் இருக்கும் வன்மை பாய்ந்த விஷயங்கள் படிப்படியாக மென்மையாகிவிடும். சுப்பாராவ் பந்த்துலுவும், நானும் சிலகாலம் ஒருவருக்கொருவர் பேச்சுவார்த்தைகளில்லாமலிருந்தாலும், சென்னையில் பல்கலைக் கழக உறுப்பினர் கூட்டம் நடக்கும் பொழுது, பந்த்துலு அவர்களே நான் அமர்ந்திருக்கும் இடத்திற்கு வந்து பேச்சுக் கொடுத்து, அன்புடன் என் க்ஷேம நலங்களை விசாரித்தார். அதன் பிறகு எங்கள் நட்பு படிப்படியாகப் பழைய நிலைக்கு மீண்டது. ராஜமகேந்திரவரம் வந்த பொழுதும் அவர் இரண்டு மூன்று முறை எங்கள் தோட்டத்திற்கு வந்து என்னைப் பார்த்தார்.

அவர் தம்முடைய ஹிந்து சங்கத்தின் ஒரு கூட்டத்தன்று என்னை அழைப்பித்து, ‘இன்று நம் அவைக்குப் புகழ்பெற்ற ஒருவர் வந்திருக்கிறார்’ என்று அவையினருக்கு அறிமுகம் செய்து வைத்தார். இந்த ஹிந்து சங்கம் எப்பொழுது, ஏன் வந்தது எனக் கேட்கலாம். பந்த்துலுவுக்கு என் மீது கோபம் வந்த காலத்தில் சமூகச் சீர்திருத்தச் சங்கத்திற்கு எதிர்ப்பாக ஹிந்து சங்கத்தைத் துவக்கி, ‘இண்டியன்

பிராக்ரஸ்' (Indian Progress—இந்திய முன்னேற்றம்) என்ற பெயரில் ஒரு பத்திரிகையையும் தொடங்கினர். தேசியப் பழக்க வழக்கங்களின் அடிப்படையிலேயே சீர்திருத்தம் மெல்ல மெல்ல நடக்கவேண்டுமென்பது இந்த ஹிந்து சங்கத்தின் நோக்கமாகும். பெற்ருேரால் தேர்ந்தெடுக்கப்பட்டவருக்கே திருமணம் நடத்திவைக்க வேண்டுமென்பது சிலர் கருத்து; விதவைத் மறுமணத்தை ஒரேயடியாக நிறுத்தவேண்டு மென்பது சிலர் கருத்து; குழந்தைத் திருமணங்கள் நடக்க வில்லையெனில் இளம்விதவையர் இருக்க மாட்டார்களென்பதால், பருவம் வந்த பிறகே திருமணங்கள் நடத்தப் படவேண்டும் என்பது சிலர் கருத்து. இந்தச் சங்கம், ராஜமகேந்திரவரத்திலிருந்து சென்னை வரை படர்ந்து, ஆன்னிபெஸன்ட் அம்மையார் தலைமையின் கீழ் நடத்தப்பட்ட மாநாட்டில் கூக்குரலெழுப்பி, அத்துடன் அமைதி அடைந்தது. பருவம் அடைந்த பிறகு திருமணம் நடக்குமானல் விதவை மறுமணப் பிரச்சனையே இருக்காதென்பதால் பருவம் கடந்த மணங்களைப் பற்றிப் படித்தவர்களனைவரும் பிரசாரம் செய்ய வேண்டியது கடமையாகுமென்று சொற்பொழிவாற்றி வந்த அந்தச் சங்கத்தின் செயலாளர், எட்டாண்டு நிரம்பப் பெற்ற தம் மகளுக்குத் திருமணம் நடத்தவே, அதிலிருந்து மக்களுக்குச் சங்கத்தினரின் உள்நோக்கத்தைப் பற்றிச் சந்தேகம் தோன்றியது.

விசாகப்பட்டணத்திலிருந்த மகாராஜா கோடே கஜபதி ராயினிங்காரு, தக்ஷிண ஹிந்துஸ்தான பிராம்ம சமாஜத்திற்கு ஆண்டிற்கு ரூபாய் 50 கொடுத்து வந்தார். அவர் எந்தக் காரணத்தினலோ அதை நிறுத்திவிட்டார். சமாஜத்தினர் எத்தனையோ விண்ணப்பங்கள் அனுப்பியும் பயனில்லாமல் போயிற்று. வெங்கடரத்னம் நாயுடு முதலான பிரதிநிதிகளை விசாகப்பட்டணத்திற்கு அனுப்பியும் பலனில்லை நான் பிராம்ம சமாஜத்தின் தலைவரான பிறகு நான் எழுதியதன் பேரில் மகாராஜா, ரூபாய் 500 ஐ எனக்கு அனுப்பியதுடன், ஆண்டுதோறும் ரூபாய் 500 அனுப்புவதற்கு நிலையான ஏற்பாடு செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக் கொண்டதற்கிணங்க தம் உயிலில் இந்தத் தருமத்திற்கு ஏற்பாடு செய்து விட்டார்.

மகாராஜா கஜபதி ராயரவர்களுக்கு என்னிடம் அளவு கடந்த மரியாதை இருந்தது. நான் ஒருமுறை நவராத்திரியின்போது குடும்பத்தோடு விசாகப்பட்டணம் போகலானேன். நான் அப்பொழுது அவருடைய பங்களாவிலேயே தங்கி அவருடைய விருந்தினனுக இருக்க நேர்ந்தது. விஜயதசமியன்று எனக்கும், என்

மனைவிக்கும் அன்பளிப்புக்கள் கொடுக்கக் கருதி மிக விலையுயர்ந்த துணிமணிகளை வரவழைத்தார். எனக்கு அவை வேண்டாமென்று பலவகைகளிலும் வேண்டிக்கொண்டும் அவர் அதைக் காதில் வாங்காமல் போகவே, விஜயதசமியன்று விடியற்காலையில் அவரிடம் விடைபெற்றுக் கொள்ளாமலே ரெயில் வண்டியேறி மனைவியுடன் ராஜமகேந்திரவரம் வந்து சேர்ந்துவிட்டேன். நான் அவர் அன்பளிப்பை வாங்கிக் கொள்ள விரும்பாமல் ராஜமகேந்திரவரத் திற்குப் போய்விட்டேனென்று கேள்விபட்டு வருந்தி, ரூ. 200 ஐக் கொடுத்து மறுநாள் ரெயில் வண்டியிலேயே இருவரை என்னிடம் அனுப்பினர். மறுக்க முடியாமல் 200 ரூபாயைப் பெற்றுக்கொண்டு நகர மண்டபத்திலிருந்த ஜூபிலி படிப்பகத்திற்குக் கொடுத்து விட்டேன்.

ராஜமகேந்திரவரக் கல்லூரியில் வேலையை விட்டுவிட்டு, கிடைக்கக் கூடிய ஓய்வுச் சம்பளத்தைப் பெற்றுக் கொண்டு, சென்னையிலேயே நிலையாக இருந்து, வாழ்க்கை முடியும் வரையில் சமூகச் சீர்திருத்தப் பணிகளிலேயே காலம் கழிப்பதென்று முடிவு செய்துகொண்டே னென்றாலும் அதற்கு ஒரு முட்டுக்கட்டை வந்தது. அப்போதைய கல்வி அலுவலரான டங்கன் துரை என்னிடம் உரிமை பூண்டு, பல்கலைக் கழகக் கூட்டங்களின்போது தவறாமல் என்னை அணுகி க்ஷேம நலங்களை விசாரித்து வந்தார். இவ்வாறு சந்திக்கும்பொழுது ஒரு முறை அவர், ‘உமக்கு இங்கே வேலை பார்க்க இஷ்டம் இருக் கிறதா?’ என்று கேட்டார். நான் மீண்டும் ராஜமகேந்திரவரம் செல்லாமல் இங்கேயே பணியாற்ற விரும்புவதாகச் சொன்னேன். ஒரு நாள் கடிதங்களைக் கொண்டுவரும் பணியாள் ஒருவன், கல்வி அலுவலக முத்திரை தாங்கிய கடிதமொன்றை என் கையில் கொடுத்தான். என்னை ராஜமகேந்திரவரத்திலிருந்து மாநிலக் கல்லூரிக்கு மாற்றியிருப்பதாகவும், என் இடத்திற்குக் கொக்கொண்ட வெங்கடரத்னம் பந்துலுவை ராஜமகேந்திரவரத்தில் அமர்த்துவ தாகவும் அந்தக் கடிதத்தில் குறிப்பிடப் பட்டிருந்தது. டங்கன் துரை என்னை எப்படியாவது சென்னைக்கு வரவழைக்க வேண்டுமென்று கருதி, கொக்கொண்ட வெங்கடரத்னம் பந்துலுவுக்கு ஆங்கிலம் வராதென்ற சாக்கில் அவரை இங்கும் (ராஜமகேந்திரவரத்திலும்), என்னை அங்கும் போட்டுவிட்டார்.

நான் வேலையில் சேர்வதற்கு முன்பு மாநிலக் கல்லூரித் தலைவரான ஸ்டுவர்ட் துரை எப்பொழுது வேலையேற்க முடியும் என்று கேட்டார். என் ஓய்வு நாட்கள் முடிந்தவுடன் சேர்வதாகத் தெரிவித்தேன்.

கொக்கொண்ட வெங்கடரத்னம் தம்மை அங்கேயே, சென்னை யிலேயே இருத்திக் கொள்ளவேண்டுமென்று விண்ணப்பம் அனுப்பியதாகவும், அதைக் கல்வி அலுவலருக்கு அனுப்பும் எண்ணம் தமக்கில்லையென்றும், உடனே வேலையேற்குமாறு எனக்குச் சொன்னார். தம் வேலை மாற்றத்துக்கு நானே காரணமென்று நினைத்துக் கொக்கொண்ட வெங்கடரத்னம் பந்துலு பிறகு, 'தங்கள் அனுக்ரகத்தால் எனக்குக் கோதாவரி புண்ணிய ஸ்நானம் கிடைத் துள்ளது' என்று ராஜமகேந்திரவரத்திலிருந்து எனக்குக் கடித மெழுதினார்.

எங்கள் வீடு, கல்லூரியிலிருந்து மூன்று மைல் தொலைவிலிருந்ததால் முதன் முதலில் ஒரு சிறிய குதிரை வண்டியை வாங்கினேன். ஆனால் பிறகு அதை விற்றுவிட்டுப் பெரிய குதிரையும், பெரிய வண்டியையும் வாங்கலானேன். இந்தப் பெரிய குதிரையை விற்பதற் கென்று, சேஷகிரி ராவ் பொப்பிலிக்குச் செல்லும்பொழுது என்னிடம் விட்டுச் சென்றார். தம் முதல் மனைவி இறப்பதற்கு இந்தக் குதிரையே காரணமென்று சேஷகிரி ராவ் எண்ணினார். இதற்குக் கெட்ட சுழிகள் இருந்தமையால் யாரும் வாங்காமலிருந்தனர். நான் எத்தனை முறை ஏலத்திற்கனுப்பினாலும் இதன் சுழிகளைப் பார்த்து, 50, 60க்கு மேல் கேட்காமல் விட்டனர். நானே ஒருமுறை நேரில் சென்று 100 ரூபாய்க்குக் கேட்கவே அதற்குமேல் யாரும் கேட்காமல் விட்டனர். நல்ல சுழிகள் இல்லாததால், கெட்டது என்ன நடக்கிற தென்று பார்க்கலாமென்ற ஆவலே, நான் இந்தக் குதிரையை வாங்கு வதற்கு ஓரளவு காரணமாகும். சென்னையை விட்டு ராஜமகேந்திர வரம் மீளும் வரையில் இந்தக் குதிரை என்னிடமிருந்து நன்றாக வேலை செய்துகொண்டிருந்தது ; மிகவும் சாதுவாக இருந்தது.

இந்திய தேசிய மாநாடு 1898 இல் சென்னையில் நடைபெற்றது. அதையொட்டி இந்தியத் தேசிய சமூக மாநாடும் நடைபெற்றது. அதற்கு என்னைத் தலைவராக்கினார். அந்த மாநாட்டில் மகாதேவ கோவிந்த ரனடே அவர்கள் 'தக்ஷிண ஹிந்துதேச வித்யாசாகரர்' என்று எனக்குப் புதுப் பட்டத்தை வழங்கினார். பிறகு 1902 ஜூன் 14ஆம் தேதி காகிநாடாவில் நடைபெற்ற சென்னை மாநிலத் தேசிய சமூக மாநாட்டிற்கு என்னைத் தலைவராக்கினர். நான் அப்பொழுது ஆற்றிய உரையிலிருந்து சில பகுதிகளை ரெவரெண்ட் மர்தாத் துரை தம் நூலில் சேர்த்துக்கொண்டார்.

1902 இல் குண்டூரில் முதல் விதவை மணம் நடைபெற்றது. திருமணத்தை நடத்திவைக்க வேண்டுமென்று அந்த ஊர் வழக்கறிஞ

ரான விசுவநாத சாஸ்திரியார் என்னைக் கேட்டுக்கொண்டார். நான் என் மனைவியுடன் சென்று, விசுவநாத சாஸ்திரியாரின் வீட்டிலேயே தங்கினேன். நான் அங்குப் போய்ச் சேர்ந்ததும் ஒரு பெரிய குழப்பமேற்பட்டது. விசுவநாத சாஸ்திரியின் சமையல் பிராம்மணன் ஓடிவிட்டான். தம் வீட்டில் திருமணத்தை நடத்தக் கூடாதென்று அவர் மனைவியார் பிடிவாதம் பிடித்தார். எனக்கு ஏமாற்றத்தை உண்டாக்குவது நல்லதல்லவென்று அவர், திடச் சித்தத்துடன் நின்றார். அக்டோபர் 11ஆம் தேதி விதவைத் திருமணம் அவர் வீட்டிலேயே நடைபெற்றது. மணமகன் பேதபூடி ஜோகீ பிரகாச ராவ்; மணமகள் ராஜமகேந்திரவரத்தில் வசிக்கும் வெங்கடரமணம்மா. உன்னவ லக்ஷ்மிநாராயணா இந்தத் திருமணத்தில் விருந்திற்கு வந்து, இந்தக் கோஷ்டியில் சேர்ந்தார். பிறகு நடந்த மகளிர் மறுமணங்கள் யாவும் லக்ஷ்மீநாராயணா அவர்களாலேயே நடத்தப்பட்டன. மறுநாள் இரவு என்னைக் கௌரவிப்பதற்கென குண்டூர் நாடக சங்கத்தினர், என்னால் இயற்றப்பட்ட சாகுந்தல நாடகத்தை நடித்துக் காட்டினர். அன்று இரவு நாடகத்தைப் பார்த்துவிட்டு, மறுநாள் மற்றொரு திருமணத்தை நடத்துவதற்குக் குடும்பத்துடன் ராஜமகேந்திரவரம் சென்றேன்.

1902 அக்டோபர் 14 ஆம் தேதி, ராஜமகேந்திரவரத்தில் அந்த விதவா விவாகம் நடைபெற்றது. ராஜமகேந்திரவரத்தில் வாழ்பவரும் சிலகமர்த்தி லக்ஷ்மீநரசிம்மத்தின் பள்ளியில் துணையாசிரியருமான திருமெள்ள வேங்கட சுப்பாராவ் என்பவர் மணமகன் ஆவார். திருவள்ளூர் அருகில் அவிச்சேரியைச் சேர்ந்த திருமலாசார்யுலுவின் மகளான வேங்கட லக்ஷ்மம்மா என்பவள் மணமகள். இந்த ஆச்சாரியர் முதலில் ஸ்ரீ வைஷ்ணவ மரபைச் சேர்ந்த வரனே வேண்டுமென்று பிடிவாதம் பிடித்திருந்தும், தக்கவன் கிடைக்காமற் போனதால், என் அறிவுரைக்கிணங்கி மகளை வைணவனல்லாதவனுக்குக் கொடுக்க இசைந்தார். இந்தத் திருமணத்தை முடித்து என் மனைவியுடன் நான் மீண்டும் சென்னைக்குப் போனேன்.

ராஜமகேந்திரவரத்தில் நகர மன்றம், மற்றும் சென்னையில் சமூகச் சீர்திருத்தச் சங்க மண்டபத்தைத் தவிர நான் சென்னையம்பதியில் இருந்த காலத்தில் 1,200 ரூபாய் செலவு செய்து ராஜமகேந்திரவரத்தில் பெண்களுக்கென பிரார்த்தனை மண்டபமொன்று கட்டினேன். 1907ஆம் ஆண்டு, கோடையில் மனைவி உடன்வர, நான் பெங்களூர் சென்றேன். அவ்வமயம் அருளப்பேட்டை பிராம்ம சமாஜத்தினர் எனக்கும், என் மனைவிக்கும் ஒரு வரவேற்பளித்தனர். பகலில்

தறிகள் போட்டு நெசவு நடத்திய வீட்டில், தறிகளை எடுத்து அப்புறப்படுத்திவிட்டு இரவு பூஜை நடத்தினர். அவர்கள் படித்தவர்களாகவும், பணக்காரராகவும் இல்லாமற் போனாலும் உண்மையான பக்தி மிகுந்தவராக எங்களுக்குக் காட்சியளித்தனர். நானும், என் மனைவியும் அவர்களுக்கு ஒரு பிரார்த்தனை மண்டபத்திற்கு ஏற்பாடு செய்தால் நன்றாக இருக்குமென்று எண்ணினோம். 1908 இல் ஒரு வீடு 500 ரூபாய்க்கு விற்பனைக்கு வந்துள்ளதென்று அவர்கள் எழுதவே, உடனே தொகையை அனுப்பி, அந்த வீட்டை வாங்குமாறு செய்தோம்.

சென்னையில் என் வீட்டில் இருந்த விதவையரை எழுமூரிலிருந்த பெண்கள் பள்ளிக்கு அனுப்பி வந்தேன். அங்குச் செல்லும் விதவையர் சிலர், மாலை வீட்டுக்கு நேரங்கழித்து வந்துகொண்டிருந்தனர். ஏனென்று கேட்டால் அவர்கள் பல சாக்குகள் சொல்லி வந்தனர். இதற்கிடையில் ஓர் இளம்பெண் காய்ச்சல் வந்ததென்று முக்கிக்கொண்டும் முனகிக்கொண்டுமிருக்கவே மருந்துகள் வரவழைக்கலானேன். எத்தனை நாட்கள் மருந்துகள் கொடுத்து வந்தாலும் அவள் நலம் பெறவில்லை. நான் அவளை ஒரு டாக்டரம்மாவிடம் அனுப்பி, நோயின் தன்மையைத் தெரிவிக்குமாறு கேட்டேன். நல்ல நோயின் காரணமாகவே அவள் அவதிப்படுவதாக அவர்கள் எழுதி யனுப்பினார்கள். நான் மிகவும் வேதனையுற்று இளம்விதவையரை அந்தப் பள்ளிக்கனுப்புவது நல்லதல்லவென்று நினைத்தேன். எனக்கிருந்த இரண்டு வீடுகளிலும் பள்ளியொன்று நடத்தப் போதிய இடமில்லை. கீழ்ப்பாக்கத்தில் ஒரு சவுக்கந்தோப்பு விலைக்கு வரவே 900 ரூபாய்க்கு அதை என் மனைவி பெயரில் வாங்கினேன். சவுக்கு மரங்களை வெட்டி, பள்ளிக்குத் தகுந்த வீடொன்று கட்டினேன். அவசரப்பட்டு வீடு கட்டினேனே தவிர, விதவையரை அங்கு மேற்பார்வை பார்க்கத் தேவையான ஒருவர் கிடைக்கவில்லை. சமூகச் சங்க உறுப்பினர்களில் யாரைக் கேட்டாலும் அது தம்மாலியலாதென்று சொல்லினர். செல்லரிப்பதாலும், நாய்களும் கழுதைகளும் குடியிருக்கத் தொடங்கியதாலும் வீடு பழம்பட்டுவிடும் போல் தெரிந்தது. அதனால் எங்கள் வீட்டிலிருந்த விதவையரில் நாற்பது வயது கடந்த இருவரை அங்கு அனுப்பி இருக்கச் செய்து, நாள் தோறும் நான் சென்று பார்த்து வந்தேன்.

உதவி செய்பவர்களில்லாமற் போனாலும், விதவையரை அங்குத் தனியாக விட்டு வைத்ததைக் குறை கூறுவோர் மட்டுமிருந்தனர். இந்தக் காரணத்தால் எனக்குச் சென்னை இருப்பை மாற்றிவிட

வேண்டுமென்று எண்ணம் பிடித்தது. எனக்கு அங்குப் பொருள் உதவி சற்றேனுமில்லை; ஆள் உதவி என்பது முதலிலிருந்தே இல்லை. வந்த பணத்தையும் சங்கம் விழுங்கி விட்டது. காரியங்களில் எனக்குத் துணையாயிருந்த புச்சய்ய பந்த்துலுவும் காலமாய்விட்டார். விதவை பாதுகாப்பில்லத்திற்கு வருவோரும் தெலுங்கர்களாக இருந் தனரே தவிர, அடுத்திருந்த தமிழ் நாட்டிலிருந்து ஒருவரும் தென்பட வில்லை. ராஜமகேந்திரவரத்துக்கு மீண்டால் அதிக அளவு பணி யாற்ற முடியுமென்று தோன்றியது.

ராஜமகேந்திரவரம் போனாலும் போகாவிட்டாலும், கிடைக்குமளவு ஓய்வுச் சம்பளம் பெற்றுக் கொண்டு, அலுவலை முடித்துக் கொள்வ தென்று முடிவு செய்தேன். என் நேரமெல்லாம் அலுவலிலேயே கழிந்து கொண்டிருந்தது. பத்து மணிக்குக் கல்லூரி செல்வதற்குக் காலை எட்டு மணிக்கே சாப்பாட்டு வேலையைக் கவனிக்க வேண்டியிருந்தது. மாலை ஐந்து மணிக்கு முன்னால் வீடு சேர முடியாமற் போனதால் அதற்கு மேல் ஒரு வேலையும் பார்க்க இயலாமல் போயிற்று. நான்கு வகுப்புகளுக்கும் தேர்வுக்கான பாடங்களை நடத்துவது தவிர, மொழிபெயர்ப்புக் கலையையும் நானே கற்றுத் தர வேண்டியிருந்ததால், மாணவர்கள் எழுதியவற்றை வீட்டுக்குக் கொண்டுவந்து திருத்த வேண்டியிருந்தது. நோயால் பீடிக்கப்பட்ட என் உடல் நலிவுக்கு இந்த வேலைகள் துணையாக நின்று என்னை இந்த உலகத்துக்கு உதவாதபடி ஆக்கிக்கொண் டிருந்தன.

நான் அலுவலைக் கூடிய விரைவில் விட்டுவிடத் தீர்மானித்ததால், டாக்டரிடம் சென்று, நான் அலுவலுக்குப் பயன்பட மாட்டேனென்ற சான்றிதழை வாங்கிக்கொண்டேன். அதிகாரிகள் இனி என்னை விடாமலிருக்க வாய்ப்பில்லாமற் போனதால் அலுவலிலிருந்து ஓய்வு கொடுத்துவிட்டனர். ஓய்வுச் சம்பளம் பெற்ற பிறகு ஏறத்தாழ ஓராண்டுக் காலம் சென்னையிலேயே இருந்து, வீடுகள் முதலான வற்றை வந்த விலைக்கு விற்றுவிட்டு, 1905 இல் சொந்த ஊரான ராஜமகேந்திரவரத்துக்குத் திரும்பிவிட்டேன்.

# 2. எழுத்துப் பணி: 1870—1900

நான் கல்லூரியில் நான்காவது வகுப்பில் படிக்கும் காலத்திலிருந்து தெலுங்கில் புலமையுள்ளவனென்று கருதப்பட்டேன். எங்கள் தெலுங்கு ஆசிரியரான புலிப்பாக்க குருமூர்த்தி சாஸ்திரியாருக்கும் என் மீது அப்படியோர் எண்ணமே இருந்து வந்ததால், எங்கள் வகுப்புத் தெலுங்குப் பாடங்களை அவ்வப்பொழுது மற்ற மாண வருக்கு என்னைச் சொல்லித் தருமாறு வற்புறுத்தி வந்தார். கல்லாத வரிடையே பண்டிதனுகிவிட்ட நான், என் அற்பப் புலமையை வெளிப்படுத்தக் கருதி ஏதேனும் எழுத வேண்டுமென்று எண்ணி னேன். அந்தக் காலத்தில் கவிதைகள், எழுதுவோருக்கே தவிர உரைநடை எழுதுவோருக்கு மதிப்பிருக்கவில்லை. யாப்பைக் கற்றுக் கொண்டு பெரிய பெரிய சொற்களைப் போட்டுக் கவிதைகள் புனையத் தொடங்கினேன். அப்போதிருந்த என் மூடநம்பிக்கைகளின் அடிப் படையில் நான் எழுதியவை மார்க்கண்டேய சதகமும், கோபால சதகமுமாகும்.

இந்தச் சதகங்களைப் படித்த அக்காலத்திய என் நண்பர்கள் என் கவித்திறனை மெச்சினர். அவர்களுடைய பாராட்டால் ஓரளவு உற்சாகமடைந்து இன்னும் கடினமான காவியம் ஒன்றை இயற்றும் பணியில் முனைந்து, 'சுத்தாந்த்ர நிரோஷ்ட்ய நிர்வசன நைஷதம்' (தூய தெலுங்கில் உதடுகளின் அசைவிராத, உரைநடையல்லாத நைடத காப்பியம்) என்ற பெயரில் ஒரு நூலைத் தொடங்கி முடித் தேன். பல்கலைக் கழகத்தினர் இதைப் பட்டப் படிப்பிற்குப் பாட புத்தமாகத் தேர்ந்தெடுத்துள்ளனர். இந்த நூலைத் தொடங்கிய பொழுதே 'ரஸிகஜன மனோரஞ்ஜனம்' என்ற பெயரில் ஐந்து படலங் களில் தூய தெலுங்குப் பிரபந்த மொன்றை இயற்றினேன். இதை இப்பொழுதும் பண்டிதர் முதலானவர்கள் மெச்சி வருகின்றனர். இருந்தாலும், நான் இத்தகைய அகச்சுவையான பிரபந்தங்களை ஆமோதிப்பதில்லை. இப்பொழுதாயின் நான் இத்தகைய சிருங்கார ரசமான காவியத்தை இயற்ற மாட்டேன்.

இந்த நூல்களைப் பாராட்டியது போலவே, இதற்குப் பிறகு நான் இயற்றப் புகுந்த சுத்தாந்திர ராமாயணத்தையும் பத்திரிகையாசிரி யர்களும், பண்டிதர்களும் பாராட்டி வந்தனர். 'புருஷார்த்தப்

பிரதாயினி' என்ற பத்திரிகை, 1872 மே இதழில் இவ்வாறு கருத்துத் தெரிவித்தது :

'...கந்துகூரி வீரேசலிங்கத்தின் கவிதா பிரதிபையிலிருந்து வெளி வந்த பொருட் தெளிவுடனும் சுவையுடனும் இவ்வழகிய கவிதைகள் ...நற்கவிதைச் சுவையை அறிந்தவர் எல்லாருடைய பாராட்டுக்கும் உகந்தவை.'

கோரங்கியில் இருந்த காலத்தில் நான், 'சங்க்ரஹ வியாகரணம்', மற்றும் செய்யுள் வடிவத்தில், 'நீதிதீபிக' என்ற நூல்களை இயற்றி அச்சிட்டேன். அதுவரையில் பள்ளி மாணவருக்கு எளிய முறையில் தெலுங்கு இலக்கணம் பயிற்றுவிக்க உதவும் நூல் எதுவுமே இல்லை இருந்தவை பழைய முறையில் எழுதப் பட்டவை ஆகும்.

அப்பொழுது பிராடா துரை, வட மாவட்டப் பள்ளி மேற்பார்வை யாளராக இருந்தார். அவர் ஒரு முன்கோபி. தம் கீழ் வேலை பார்ப்போரையும், ஆசிரியர்களையும் கண்டபடி வைது வந்தார். நான் தலைமையாசிரியரான சிறிது காலத்தில், அவர் தவளேசுவரத்தில் பள்ளியைத் தணிக்கை செய்ய வந்தார். துணைத் தலைமையாசிரியர் ஜியோமிதி (வடிவியல்) நடத்திக் கொண்டிருந்த வகுப்பிற்குச் சென்று, ஒரு கணக்கைக் கொடுத்து, அதைப் பலகையில் போட்டுக் காட்டுமாறு மாணவர்களிடம் சொன்னார். அதைப் போட அவர்களால் முடியாவில்லை. கரும்பலகையில் அதைப் போட்டுக் காட்டுமாறு துரை என்னிடம் சொன்னார். அதைப் போட்டுக் காட்ட வேண்டியவர் துணைத் தலைமையாசிரியரே என்று நான் சொன்னேன். 'இல்லை, நீதான் போட வேண்டும்' என்று எனக்கு அவர் கட்டளையிட்டார். நான் அஞ்சாமல் மறுத்துவிட்டேன். இந்த விஷயத்தை அவர் தம் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக் கொண்டார்.

அதற்கு முன்பே முறையற்றது வேறொன்று நடந்திருந்தது. பள்ளியில் துரையவர்கள் மட்டும் உட்கார்ந்திருப்பதும், ஆசிரியர்கள் நின்றுகொண்டிருப்பதும் வழக்கம். நான் அவ்வாறு செய்யாமல், நாற்காலியைக் கொண்டுவரச் சொல்லி அவர் பக்கத்திலேயே உட்கார்ந்து கொண்டேன். என் நடைமுறையினால் துரையவர் களுக்கு என்மேல் சற்று வெறுப்பு தோன்றினாலும், என் சுதந்திரப் போக்கைக் கண்டு மகிழ்ந்து, என் இலக்கண நூலைப் பள்ளிகளில் வைப்பதற்கு ஆணை பிறப்பித்தார். அதனால் என் இலக்கணத்தின் முதற் பகுதி குறுகிய காலத்திலேயே விற்றுப் போய்விட்டது.

'சுத்தாந்திர மகாபாரதம்' என்ற பெயரில் பாரதம் முழுவதையும் தனித் தெலுங்கில் இயற்றக் கருதி, சபா பருவத்தைத் தொடங்கி, ஒரு பகுதியை 'ஆந்திர பாஷா ஸஞ்ஜீவனி'யில் வெளியிட்டேன். ஆனால் இதற்கிடையில் என் எண்ணம் மாறி வேறொரு திசையில் திரும்பி விட்டது. தெலுங்கில் வசன காவியம் என்று சொல்லத் தக்கது சின்னய சூரியவர்களின் 'நீதிசந்திரிக' ஒன்றுதான் இருந்தது. அதுவும் முழுமையடையாமல் அரைகுறையாக இருந்தது. செய்யுள் காவியங்களைவிட வசன காவியங்களை எழுதுவது மிகவும் பயனுள்ள தாக இருக்குமென்று எனக்குத் தோன்றியது. 'நீதி சந்திரிக'வின் பிற்பகுதியை முடிக்கும் பணியிலிறங்கி, முடித்து 1874 இல் வெளி யிட்டேன்.

சென்னை கிறித்துவக் கல்லூரியில் கணித விரிவுரையாளராக இருந்த, சமர்த்தி ரங்கய்ய செட்டி, பி.ஏ. அவர்கள் நான் கேளாமலே என் புத்தகத்தைத் தம் கல்லூரியில் பாடபுத்தகமாக வைத்தார். அதுவரையில் எனக்கு அவர் பழக்கமில்லை. எனக்கு ஊக்கமளித் தமைக்கு அவருக்கு நன்றி தெரிவித்து முதற் கடிதம் எழுதினேன். 1875 பிப்ரவரி 8 ஆம் தேதி சென்னையிலிருந்து ரங்கய்ய செட்டி யவர்கள் ஆங்கிலத்தில் எனக்கிவ்வாறு பதிலெழுதினார்:

'ஏதோ ஆதரவு காட்ட வேண்டுமென்ற எண்ணத்தினாலல்லாமல் அந்தப் புத்தகத்தின் உண்மையான தகுதியை உணர்ந்தே நான் அதை அறிமுகப்படுத்தினேன். எனவே நீங்கள் எந்த வகையிலும் எனக்குக் கடமைப்பட்டவரல்லர். தெலுங்கு இலக்கியத்தில் இத் தகைய தலைசிறந்த நூல் கிடைக்கப் பெற்றமைக்கு நான் மிகவும் பெருமையடைகின்றேன்...... தெலுங்கில் சொந்தமாக ஒரு நாவலை எழுதும் முயற்சியை நீங்கள் மேற்கொள்ளக் கூடாதா?'

இந்த நூலைக் கண்டு மகிழ்ந்த சென்னைப் பண்டிதர்கள் என்னை அங்கு வரவழைத்து ஆதரவு காட்டி, எனக்கு ஒரு வெள்ளிப் பத்திரத்தை அன்பளிப்பாக வழங்கினர். பல்கலைக் கழகத்தினர் இந்த நூலைப் புகுமுகத் தேர்வுக்குப் பாடநூலாகத் தேர்ந்தெடுத்தனர். அதன் வாயிலாக எனக்கு அந்த ஆண்டு ஆயிரம் ரூபாய் கிடைத்தது.

தெலுங்கில் ஒரு 'வசன பிரபந்த'த்தை (novel) எழுத முயற்சிக்கக் கூடாதா என்று ரங்கய்ய செட்டியவர்கள் எழுதியபோதே அந்தப் பணியில் இறங்க வேண்டுமென்ற எண்ணம் எனக்குள் எழுந்தது. முதலில் ஓர் ஆங்கில நாவலை தெலுங்குப்படுத்தி, தகுதியாக்கிக் கொண்டு, பிறகு சொந்தக் கற்பனை யடிப்படையில் நாவலை எழுத

வேண்டுமென்று நினைத்து, கோல்டுஸ்மித் இயற்றிய 'விக்கார் அஃப் வேக்ஃபீல்ட்' என்ற நாவலைத் தெலுங்காக்கம் செய்யத் தொடங்கி, இரண்டு மூன்று அத்தியாயங்கள் எழுதினேன். அயல் நாட்டுக் கதையை அப்படியே மொழிபெயர்த்தால் நம்மவர் ரசிக்கும்படியாக இருக்காதென்று தோன்றவே, எழுதிய பகுதிகள் என் மனத்துக்கே திருப்தி அளிக்காததால் அதை நிறுத்திவிட்டு, 'ராஜசேகர சரித்திரத்'தை எழுதத் தொடங்கினேன். ஆங்கிலக் கதைக்கும் இதற்கும் வெகுவாய்த் தொடர்பில்லை. நம்மிடையே நிலவிவரும் மூட நம்பிக்கைகளை அகற்ற வேண்டுமென்று முக்கிய கருத்தோடு இதை எழுதினேன். இதை முதன் முதலில் 1878இல் விவேக வர்தனியில் தொடர் கதையாக வெளியிட்டு, பிறகு புத்தகமாக பிரசுரித்தபொழுது கல்வி அதிகாரியாக இருந்த கர்னல் மெக்டானல்ட் துரையவர்களுக்கு அந்நூலை அர்ப்பணம் செய்தேன். மெக்டானல்ட் துரை என்னிடம் நல்லெண்ணம் கொண்டவராகி, மாநிலக் கல்லூரியில் இரண்டாம் பண்டிதர் பதவியை எனக்குத் தருவதாக எழுதினுர். ஆனால் நான் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை.

'ராஜசேகர சரித்திரம்' பத்திரிகாசிரியர்களாலும், மற்றவராலும் வெகுவாய்ப் புகழப்பட்டது. இந்தப் புத்தகத் தொடர்பாக இங்கிலாந்திலிருந்து 1881 டிசம்பர் 23 ஆம் தேதியன்று எனக்கு இவ்வாறு (ஆங்கிலத்தில்) எழுதினுர்:

'அன்பார்ந்த ஐயா, நேஷனல் இண்டியன் அஸ்ஸோஸியேஷன் செயலாளரான மிஸ். மான்னிங், நல்ல இந்தியக் கதைகளைப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளியிடக் கருதியுள்ளார்... உங்களுடைய 'ராஜசேகர்' அதற்கு உகந்ததாக இருக்குமென்று நான் மிஸ். மான்னிங்கிடம் தெரிவித்திருக்கிறேன். எனவே, உங்கள் நாவலை இந்தப் பத்திரிகையில் தொடர் கதையாக வெளியிட உங்களுக்கு விருப்பம் உண்டா என்பதையும், அதன் ஆங்கில மொழி பெயர்ப்பை அனுப்ப முடியுமா என்பதையும் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்'

அந்தச் சமயத்தில் நான் விதவைத் மறுமண விவகாரத்தில் மூழ்கியிருந்ததால், 'ராஜசேகர சரித்திரத்'தை ஆங்கிலப்படுத்தவும், இங்கிலாந்துப் பத்திரிகைக்கு அனுப்பவும் முயலவில்லை. அமெரிக்க கிறித்துவச் சமயப் பெரியாரான ரெவரெண்ட் ஹச்சின்ஸ் அவர்கள், என் அனுமதியின் பேரில் இதை ஆங்கிலப்படுத்தி, சென்னை கிறித்துவக் கல்லூரி இதழில் 1886 ஆம் ஆண்டில் பகுதிகளாக வெளியிட்டு, 1887 இல் 'ஃபார்சூன்ஸ் வீல்' (Fortune's Wheel—அதிர்ஷ்ட

சக்கரம்) என்ற பெயரில் புத்தக வடிவத்தில் தக்க படங்களுடன் லண்டன் மாநகரத்தில் வெளியிட்டார். இதற்கு ஜெனரல் மெக்டானல்ட் துரையவர்கள் முன்னுரை வழங்கினர். 1887 செப்டம்பர் 30 ஆம் தேதி 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகை இந்த நூலைப் பற்றி இவ்வாறு எழுதியது :

'ஃபார்சூன்ஸ் வீல்' இந்திய நாவலுக்குத் தலைசிறந்ததொரு எடுத்துக்காட்டாகும்... ஹிந்துக் குடும்ப வாழ்க்கைச் சித்திரம், சமயக் கொள்கைகள், வழிபாட்டு நெறிகள், மூட நம்பிக்கைகள், பெண்களின் நிலை—இவை யாவும் மிகத் திறம்பட வரையப்பட்டு விளக்கப் பட்டுள்ளன. பொதுவாகத் தேசிய மக்களின் சமூக நிலையில் ஒரு மாறுதல் காணவேண்டுமென்ற ஆசிரியரின் ஆர்வத்தோடு ஒத்துப் போகும் வாசகர் அனைவரையும் இந்த நூல் கவரும் என்பதில் ஐயமில்லை.'

1878 ஆம் ஆண்டில், சென்னைப்பட்டணத்தில் வெளியாகிய 'ஹிந்து' பத்திரிகையின் கருத்தின் ஒரு பகுதி :

'ராஜசேகரத்தின் ஆசிரியர் தம் கருப்பொருளை மிகத் திறமையுடன் கையாளுகிறார். சூழ்நிலையைத் தம் கருத்துக்கேற்ப அமைப்பது இவருக்குக் கைவந்த கலை... தெலுங்கு இலக்கிய வரலாற்றில் ஒரு புதிய யுகமதை 'ராஜசேகரம்' தொடங்க இருக்கிறது என்று சொல்வது மிகையாகாது. இதுவே முதல் தெலுங்கு நாவல். புதுப் பாதையின் முன்னோடி என்ற வகையில் பார்த்தால், இந்த முயற்சி மாபெரும் வெற்றி என்று கருதலாம்... அறியாமை சூழ்ந்த மக்கள் தொகுதிக்கும், ஆர்வமற்ற பொதுஜனத்துக்கும் இடையே தனித்து நின்று, தற்காலத் தெலுங்கு இலக்கியத்துக்கு அடிகோலியதுடன், இந்த மொழியின் உள்ளுறை ஆற்றல்களை வெளிப்படுத்திய இந்த மாபெரும் மனிதரைப் பெருமையுடன் இந்த நாடு நினைவுகூரும் அந்த நன்னாளை நாம் கற்பனைக் கண்கொண்டு பார்க்கலாம். தெலுங்கு இலக்கிய வரலாற்றில் அந்த நன்னாள் வருவது திண்ணம்.'

'ராஜசேகர சரித்திரம்' எழுதிய பிறகு இரண்டு மாதங்களில் பாரதச் சுருக்கத்தை எழுதி முடித்துச் சென்னைக்கு அனுப்பினேன். பல்கலைக் கழகத்தினர் இதனை, முதலாம் கலைத் தேர்வுக்குப் பாடமாக வைத்தனர்.

'நீதிசந்திரிக'வில் 'விக்ரகத்'தை (பிரித்தல்) எழுதிய பிறகு 'சந்தி'யையும் (பொருத்தல்) பஞ்சதந்திர நடையிலேயே இயற்றி, அதனை மெட்காஃப் துரைக்கு அர்ப்பணித்தேன். இதனையும்

பல்கலைக் கழகத்தினர் பல முறை பாட புத்தகமாக வைத்து வந்தனர்.

மொழியினால் வரும் பயன் என்ன ? மக்கள் தம் எண்ணங்களைப் பிறருக்குத் தெரிவித்தலாம். மொழிக்கு நூல்களால் தோன்றும் பயன் என்ன ? தம் சிந்தனைகளைச் சேய்மையிலிருப்பவர்க்கும், வரப்போகும் தலைமுறையினருக்கும் எளிதில் தெரிவித்தல். அத்தகைய பயன் 'விக்ரகம்' போன்ற நூல்களால் உண்டாகாது. அதிலுள்ள கருத்துக் களைப் புரிந்து கொள்வதற்கு அகராதிகளின், மற்றும் பண்டிதர்களின் உதவி தேவை. நூல்கள் எளிமையான முறையில் இயற்ற நிச்சயித்துக் கொண்டு என் கருத்தினைப் பத்திரிகையின் வாயிலாக வெளியிட்டேன். பண்டிதர்கள் என் கருத்தை ஏற்காமல், அவ்வாறு இயற்றினால் மொழியின் மதிப்பே கெட்டுவிடுமென்றும், எளிமையாக இருந்தால் உப்பு சப்பில்லாத பண்டம் போல் வாசகர்க்குச் சுவை யற்றுப் போய்விடுமென்றும் என்னிடம் வம்பு பிடிக்கத் தொடங்கினர்.

என் வழியிலே நான் செல்பவனாதலால் பிறர் பேச்சைப் பொருட் படுத்தாமல் எளிய வசனத் துறையில், உரையாடல் வடிவத்தில் 'பிராம்ம விவாக'த்தை எழுதி, 'ஹாஸ்ய ஸஞ்ஜீவினி' முதலிதழில், ஒரு பகுதியை வெளியிட்டேன். அதற்கு முன்னர் உரையாடல் பாணியில் நூல்கள் இல்லாமற் போனதாலோ, கருத்துப் புதுமை யாலோ ஆண்கள், பெண்கள், பண்டிதர், பாமரர், சிறுவர், முதியவர் ஏனையோரும் அதை மிக ஆர்வத்தோடு படிக்கலாயினர். புத்தகம் வெளியான சில நாட்கள் வரை மக்கள் தெருத் திண்ணைகளில் கூட்டம் கூடி, அதைப் படித்துச் சிரித்து மகிழ்ந்து வந்தனர். முதல் இதழுக்குப் பிறகு, இரண்டாவது இதழ் வெளியிடுவதற்கு முன்னர் வந்த சந்தாதாரின் பெயர்களை இதழின் பிற்சேர்க்கையாகவே வெளியிட வேண்டியதாயிற்று. வெறும் வேடிக்கைக்காக மட்டு மல்லாது, மிக இளமைத் திருமணம், கிழ வயதில் திருமணம், வரதட்சிணை முதலான கெட்ட வழக்கங்களிலிருந்து மக்களை விடுவிக்கக் கருதியும் இந்த நூலை எழுதலானேன்.

ஹாஸ்ய சஞ்ஜீவினியில் 'பிராம்ம விவாகம்' முடிந்த பின்னர், 'விவகார தர்மபோதினி' என்ற பெயரில் மற்றொரு நூலை கிராமிய (கொச்சை) மொழியில் எழுதி வெளியிட்டேன். 'பிராம்ம விவாக'த் தைப் போலவே இதன் பாத்திரங்கள் பல உண்மையானவை ; சொல்லப்பட்ட விஷயங்கள் பல உண்மையானவை. இதையும் மக்கள் சிறப்பாகப் படித்துக் கொண்டு 'பிளீடர் நாடகம்' என்று வழங்கி வந்தனர். 'விவகார தர்மபோதினி' முதன் முதலில்

நகைச்சுவை நாடகமாகப் பெண்கள் பள்ளியில் நடிக்கப்பட்ட பொழுது நூற்றுக் கணக்கான மக்கள் வந்ததோடல்லாமல், அதில் வருணிக்கப்பட்ட வழக்கறிஞர்கள் சிலரும் வந்தனர். ஒரு வழக்கறிஞரின் மருகன் அந்த வழக்கறிஞரின் உடையையே அணிந்து கொண்டுவந்து கதை சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, மக்கள் அந்த வழக்கறிஞர் பக்கம் பார்த்துக் கொல்லென்று சிரிக்கலாயினர்.

சென்னையிலிருந்த திவான் பகதூர் வல்லூரி ஜகந்நாத ராவ் பந்துலு, 1880 ஆகஸ்டு 3 ஆம் தேதி எனக்கு இவ்வாறு எழுதினர்:

'ராஜமகேந்திரவர இளைஞர்தம் குறைகளை நீங்கள் ஈவிரக்கமில்லாமல் அம்பலப்படுத்தி வருவது எனக்குப் புரிகிறது. கொடூரமாக வெளிப்படுத்துவது சில சமயங்களில் நன்மைக்கு மாறாகத் தீமையையே பயக்கும். தேசிய மொழிப் பத்திரிகைகள் அதிகாரிகளின் பார்வையிலிருந்து தப்பிவருவதாக எண்ண வேண்டாம். நீங்கள் சித்திரத்தை ஒரேயடியாக மிகைப் படுத்தி வரைந்து விட்டீர்கள். கதை நிகழ்ச்சியும், அமைப்பும் சிறப்பாக இருப்பதில் ஐயமில்லை.'

கட்டி தோன்றியபோது அதற்கு அறுவை சிகிச்சை செய்து குணம் பெற வேண்டுமே தவிர, கட்டியே இல்லாதது போல நடிப்பதால் ஒருபோதும் பயனிருக்காது என்பது என் எண்ணம். இத்தகைய எனது சிகிச்சை முறை சிறப்புப் பயன்களை விளைவித்தன என்றே நான் நம்புகிறேன்.

1880 இல் தார்வாட் நாடக சங்கத்தினர், எங்கள் பட்டணத்தில் பெரிய கொட்டகைப் போட்டு, அதில் தம் நாடகங்களை நடித்துச் சென்ற பின்னர், அந்த நாடகசாலையில் நடிப்பதற்கென, ஹர்ஷ தேவரின் படைப்பான 'ரத்னாவளி' நாடகத்தையும், மகாகவி ஷேக்ஸ்பியர் இயற்றிய நாடகமொன்றையும் மிகக் குறுகிய காலத்தில் தெலுங்காக்கம் செய்து வெற்றியுடன் அரங்கேற்றினேன்.

1880 இல் 'விவேக தீபிக' என்ற பெயரில் பெண் மறுமணம் பற்றிய நாடகத்தின் மூன்று அங்கங்களை வெளியிட்டேனே தவிர அவற்றைப் பின்னர் நான் முடிக்கவில்லை.

1875 ஆம் ஆண்டில் காளிதாசரின் 'அபிக்ஞான சகுந்தல'த்தைத் தெலுங்காக்கம் செய்யக் கருதி, கல்கத்தா, பம்பாய் முதலான பல இடங்களிலிருந்து அச்சிட்ட நூல்களையும், ஒரு பண்டிதரிடமிருந்து ஏட்டுச் சுவடியையும் பெற்றுப் படிக்கத் தொடங்கினேன். சுலோகங்களில் பாடபேதங்கள் இருந்ததோடல்லாமல், கல்கத்தாப் பிரதியில் புதிய சுலோகங்கள் சிலவும் காணப்பட்டன. இதற்கிடையில்

சாகுந்தல நாடகம் தெலுங்கு எழுத்தில் சென்னையில் அச்சடிக்கப் பட்டதென்று கேள்விப்பட்டதால், நான் அந்தப் பிரதியை வரவழைத்து மொழிபெயர்த்து 1883 இல் புத்தக வடிவத்தில் வெளியிட்டேன்.

'காவியங்களில் இனியது நாடகம்; நாடகங்களில் இனியது சாகுந்தலம்' என்று நம் முன்னோர்கள் சொல்லியுள்ளனர். அத்தகைய இனிமையான நாடகச் சிகரத்தைத் தெலுங்காக்கம் செய்வதென்பது என் போன்ற எளியோன் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. அப்படியிருந்தும், அறிவு நசையை அடக்க முடியாமல் இதை என்னாலியன்ற வரையில் முயன்று மொழி பெயர்த்து முடித்தேன். என் நூலைப் படித்தவர்கள் எனது மொழிபெயர்ப்பு சுவையாகவே உள்ளதென்று சொல்லி வந்தனர். என் நூல் பலமுறை அச்சேற வேண்டியதாயிற்று.

நான் பிறகு தெலுங்காக்கம் செய்த சம்ஸ்கிருத நாடகம் காளிதாசரின் 'மாளவிகாக்னிமித்ரம்' ஆகும். இதனை 1885 இல் அச்சிட்டு வெளியிட்டேன். 'பிரபோத சந்திரோதயம்' என்ற நாடகத்தை 1891 இல் அச்சிட்டேன். அது அத்வைத மதச் சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்ட வேதாந்த நாடகம். இந்த நூலுக்கு முன்னரே, ஒரு நாடகச் சங்கத்துக்காகப் 'பிரகலாத' நாடகத்தை எழுதி அச்சிட்டேன். அந்த நாடகத்திற்குப் பின்னர் எழுதப் பட்டது 'ராகமஞ்ஜரி' என்பதாகும். இது ஷெரிடன் எழுதிய 'ட்யூயென்னு' (The Duenna) எனும் நாடகத்தைத் தழுவி எழுதப் பட்டதாகும். 1885 இலேயே பாரதம் விராட பர்வத்திலுள்ள 'தக்ஷிண கோக்ரஹண' கதையை நாடகமாக இயற்றி அச்சிட லானேன். 'ஹரிச்சந்திரோபாக்யான' நாடகத்தை முதலில் விவேகவர்தனியில் வெளியிட்டு 1889 இல், நூல் வடிவத்தில் அச்சிட்டேன். என்னுடைய 'சத்திய ஹரிச்சந்திர' நாடகத்தையும் பல்கலைக் கழகத்தினர் பாட புத்தகமாக வைத்தனர். இந்த நூல் இதுவரையில் ஆறேழு முறை அச்சேறியுள்ளது.

1889 இல் நான் 'திர்யக் வித்வன் மஹாசப' (விலங்குப் பண்டித சபை) 'மகாரண்ய புராதிபத்யம்' (காட்டக தர்பார்) எனும் இரண்டு நூல்களை இயற்றினேன். முதலாவது நூல், என் நண்பரான பசவராஜு கவர்ராஜு காலமானபோது அவருடைய உறவினர் முதலானவர்கள் கொடுத்த தொல்லையைப் பார்த்து, அவர்களுடைய தீய போக்கை அம்பலப்படுத்துவதற்கென எழுதிய கண்டன உரையாடலாகும். இது, பாரதத்திலுள்ள 'கிருத்ர ஜம்புகோபாக்யான'த்தை

ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டதாகும். இதுவும் ‘மூஷகாசுர விஜய’மும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டு, விலங்குப் பாத்திரங்களின் படங்களுடன் அச்சிடப்பட்டன. ஏலூரி லக்ஷ்மீநரசிம்மம் என்மீது தொடர்ந்த வழக்கில் நன்கு கற்றவர்கள் சிலர், இந்தச் சிறு நூல்களிலுள்ள பாத்திரங்கள், தம்மை வைத்துப் படைக்கப்பட்டனவென்று சாட்சியம் கூறினர்.

‘மஹாரண்ய புராதிபத்யம்’ கண்டன நாடகமே ஆகும். பஞ்சதந்திரத்திலுள்ள கதை இதற்கு ஆதாரமானது. சமூகத்திலுள்ள பலவகைக் கெட்ட வழக்கங்களை நிறுத்த வேண்டுமென்ற முக்கிய உட்கருத்துடன் நகைச் சுவையாக எழுதப்பட்டது இது. தம்மைக் கருத்தில் கொண்டு இது எழுதப்பட்டதென்று ஏலூரி லக்ஷ்மீ நரசிம்மம் என் மேல் வழக்குகள் தொடக்கினர்.

நான் இயற்றிய நாடகங்களில் இறுதியானது ‘கல்யாண கல்பவல்லி’ என்பதாகும். இது ஷெரிடனின் ஒரு நாடகத்தைத் தழுவியது. 1894 இல் இதனை அச்சிட்டு வெளியிட்டேன்.

எனக்குப் பெண் கல்வியிலும், பெண்கள் முன்னேற்றத்திலும் மிக்க ஈடுபாடு உண்டு. பெண்களைத் தற்போதைய நிலையிலேயே இருத்திவிட்டுத் தாம் மட்டும் முன்னேறுவதென்பது ஆண்களுக்குச் சாத்தியமானதல்ல என்றும், தாம் நன்னிலையை அடைய வேண்டுமெனில் அவர்களையும் நன்னிலைக்குக் கொண்டு வந்து, அவர்களுடன் இணைந்து உயர்வுக்கு முன்னேற முடியுமென்று நான் கருதி வருபவன். அவர்கள் படிப்பதற்கு நல்ல நூல்கள் இல்லாமலிருப்பதைக் கருதி, 1883 இல் ‘ஸதி ஹித போதினி’ என்னும் மாத இதழை வெளியிடத் தொடங்கினேன். அந்த ஆண்டே ‘ஸத்யவதி சரித்ரம்’ எனும் குறுநாவலை எழுதினேன். அதைப் படித்து மகிழ்ந்த பலர் தம் பெண் குழந்தைகளுக்குச் சத்தியவதி என்று பெயர் சூட்டினர். இந்த நூல் தமிழ், கன்னடம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

1884 இல் பெண்களை முன்னிட்டுச் ‘சந்த்ரமதி சரித்ரம்’ எழுதினேன். 1887 இல் பெண்களுக்காக ‘ஸத்ய ஸஞ்ஜீவனி’ எனும் நீதி புகட்டும் நூலை இயற்றினேன். இதிலுள்ள கதையை நான் ஏதோ ஓர் ஆங்கில நூலிலிருந்து எடுத்துக்கொண்டேன். ஆனால் இப்பொழுது அந்த நூல் எதுவென்று நினைவில்லை. இந்த நூலைப் படித்தபொழுது ஓர் இளம்பெண், தான் அதற்கு முன்னர்க் கூறிய பொய்யொன்று நினைவுக்கு வரவே, நூலைக் கீழே வைத்துவிட்டு அழத் தொடங்கிவிட்டாள்.

1891 இல், பெண் விஷயத்தில் நம்மவர்கள் செய்துள்ள அநியாயங்கள் தெளிவாகுமாறு, ‘ சத்தியராஜ கீழைநாட்டு யாத்திரைகள் ’ என்ற நூலின் முதல் பகுதியை எழுதி வெளியிட்டேன். ‘ கலிவர்ஸ் டிராவல்ஸ் ’ படித்தபொழுது, மூட நம்பிக்கைகளை நுட்பமாக வெளிப்படுத்தி, அத்தகைய நூல் ஒன்றை எழுத வேண்டுமென்று தோன்றியது. நம்மில் ஆங்கிலம் தெரியாத பலர், கற்பனைக் கதைக்கும் உண்மை வரலாற்றுக்கும் வேறுபாடு உணர முடியாமல் உள்ளனர். இந்தப் புத்தகம் வெளியிடப்பட்டபொழுது, சத்தியராஜாவின் முகவரியைத் தெரிவிக்குமாறு பல இடங்களிலிருந்து கடிதங்கள் வந்தன. இந்தப் புத்தகம் ஆங்கிலம், கன்னடம் ஆகிய இரு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

1897 இல் பெண்களுக்காக விக்டோரியா மகாராணியாரின் வரலாற்றைப் படங்களுடன் வெளியிட்டேன். அப்பொழுது ராணியார் வாழ்ந்து வந்ததால் இறுதிக் கட்டம் அதில் சொல்லப் படவில்லை.

1893 இல் ‘ நீதி கதாமஞ்ஜரி ’யை விளக்கப் படங்களுடன் இரண்டு பகுதிகளாக வெளியிட்டேன். இந்த நூல் ‘ ஈசாப் கதை ’களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது. 1889 இல் பெண்களுக்கு மிகத் தேவையான உடல்நலத்தின் நியதிகளை அறிவுறுத்தும் ‘ தேஹாரோக்ய தர்ம போதினி ’ எனும் நூலை வெளியிட்டேன். 1889 இல் ‘ ஸதி ஹித போதினி ’ இதழ்களிலிருந்து முக்கியமான கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துப் புத்தக வடிவில் வெளியிட்டேன். அதற்கு முன்னரே இளம் பெண்களைப் பற்றி ‘ ஸ்திரீ நீதி தீபிக ’ எனும் சதகத்தை இயற்றினேன். அதற்குப் பின்னர் ‘ ஸத்யா திரௌபதி ஸம்வாதமு ’—‘ மாத்ருபூஜ ’—‘ பித்ருபூஜ ’ ஆகிய நூல்களைப் பெண்களின் உபயோகத்திற்கென துவிபதி (வெண் செந்துறை) யாப்பில் இயற்றினேன்.

பெண்கள் நகைச் சுவையுடன் படித்து மகிழ்வதற்கென, ஷேக்ஸ்பியர் நாடகங்களை யொட்டி, லாம்ப் (Lamb) உரைநடையில் இயற்றிய கதைகளில் எளியவையான பதினாறு கதைகளைத் தெலுங்காக்கம் செய்தேன். மூலத்திலுள்ள பெயர்களையே வைத்து, முடிந்த வரையில் நம்மவர் ரசிக்கும் வகையில் எழுதினேன்.

மக்களிடையே இருந்த மூட நம்பிக்கைகள் அழிவதற்கு இயற்கை விஞ்ஞான அறிவு தேவையென்று கருதி, தெலுங்கில் அது இல்லாத குறையை முடிந்த வரையில் நீக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் நான் 1878 க்கு முன்பே பௌதிக இயலை வினாவிடை வடிவத்தில்

தெலுங்கில் வெளியிட்டு வந்தேன். அந்தக் காலத்திலிருந்த சமூகச் சீர்திருத்தச் சங்கத்தின் (The Social Reform Association) உறுப்பினரும், என் நண்பருமான ஒருவர் பௌதிக இயலைத் தெலுங்கில் எழுதுவதற்குத் தேவையானவற்றையெல்லாம் திரட்டியிருப்பதாகத் தெரிவிக்கவே, அந்தச் சங்கத்தினர் என் அனுமதியின் பேரில் அவரிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்து, என்னை உடலியல் நூலொன்றை இயற்றுமாறு பணித்தனர். இந்த ஏற்பாடு நடந்த பின்னர் என் நண்பர் இருபது ஆண்டுகள் வாழ்ந்திருந்தும் தம் பௌதிக நூலை இயற்றுமலேயே காலமாகிவிட்டார்.

1888ஆம் ஆண்டில் வெளியான என் உடலியல் நூலின் முன்னுரையிலிருந்து ஒரு பகுதி :

'தெலுங்கு மொழியில் இயற்கை விஞ்ஞான நூல்கள் இல்லாமலிருக்கும் குறையை ஓரளவு போக்குவதற்கென இந்த உடலியல் நூலை முதன் முதலில் தொடங்கி ஒருவழியாக முடிக்கலானேன். படித்தவர்களும், பொதுமக்களும் தக்க அளவு ஊக்கம் கொடுப்பார்களேயானல் மற்ற அறிவியல் துறைகளிலும் எளிய நடையில் படிப்படியாக நூல்களை எழுதி வெளியிட எண்ணரியிருக்கிறேன். வானவியல் நூலை ஏற்கனவே தொடங்கியிருக்கிறேன்... ஆங்கில மொழியில் உடலியல் தொடர்பான நூல்கள் பலவற்றைப் படித்தேன். செய்முறையில் சோதித்தாலொழிய சில அம்சங்களை முற்றிலும் புரிந்துகொள்வது கடினமென்று அறிந்ததால், மருத்துவ நிலையத்தில் பணிபுரியும் என் நண்பர் ஒருவர், ஆடு ஒன்றின் இதயம், நுரையீரல்கள் முதலியவற்றின் பாகங்களை விளக்கிக் காட்டவே பல அம்சங்களைப் புரிந்துகொள்ள முடிந்தது...'

ஓரளவு பணம் செலவு செய்து முழுமையான மனித எலும்புக் கூடு ஒன்றைச் சம்பாதித்தேன். மனிதனின் இதயம், நுரையீரல்கள் முதலியவற்றைப் பரிசோதித்துப் பார்ப்பது மிகவும் பயனுள்ளதாக இருக்குமென்று கருதி, சவ ஆய்வுக்கெனப் புதுச் சவம் வரும்பொழுது எனக்குத் தெரிவித்து அறுவை செய்து காட்டுமாறு மருத்துவ நிலைய அதிகாரிகளிடம் ஏற்பாடு செய்துகொண்டேன். அவர்கள் ஒரு முறை என்னை வரவழைத்து, என் எதிரில் சவத்தை அறுக்கத் தொடங்கவே, தலைச்சுற்றலெடுத்து நான் மயங்கி விழுந்துவிட்டேன். அவர்கள் என் முகத்தில் தண்ணீர் தெளித்து, மயக்கம் தெளிந்த பின்னர் வீட்டுக்கு அனுப்பிவைத்தனர்.

பெரும் தொகையைச் செலவு செய்து இந்தப் புத்தகத்திற்குத் தேவையான 22 விளக்கப் படங்களை மரத்தில் செதுக்கச் சொல்லிக்

கல்கத்தாவிலிருந்து வரவழைத்தேன். முதல் பதிப்பு நான்காண்டு களில் விற்பனையாயிற்று. இரண்டாவது பதிப்பில் பதினைந்தும், மூன்றாவது பதிப்பில் பதினாறு புதிய படங்களையும் இங்கிலாந்தில் செய்வித்து வரவழைத்துச் சேர்த்தும், புதிய விஷயங்கள் சில சேர்த்தும், மாற்றங்கள் சில செய்தும், புத்தகத்தைச் சற்றுச் சிறப்புறச் செய்தேன். இப்பொழுது நான்காவது பதிப்பு வந்துள்ளது.

1891 இல் வானவியல் சுருக்கத்தைப் படங்களுடன் வெளி யிட்டேன். மிகத் தொன்மையானதான கர்க சித்தாந்தத்தில், 'யவனர்கள், மிலேச்சர்களாக இருந்தாலும் அவர்களிடம் இந்தச் சாத்திரம் சிறப்பாக உள்ளது. அவர்களும் ரிஷிகளைப்போல வணங்கப்படும்போது சோதிட வல்லுநரான இருபிறப்பாளரைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ?' என்று எழுதப்பட்டுள்ளது. இக் காலத்தவரைப்போலத் தாமே எல்லாம் தெரிந்தவர்களென்றும், தம் முன்னோர்கள் சொன்னதே சத்தியமென்றும் நினைத்துக்கொள்ளாமல் அக் காலத்தவர்கள் முயன்று பலதுறைகளிலும் அறிவை வளர்த்தும், தமக்குத் தெரியாததைப் பிற நாட்டவரிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டும் முன்னேறி வந்தது புலனாகிறது. தாமே அறிவாளிக ளென்று ஆணவம் பூண்டு, பிறரிடமிருந்து அறிந்துகொள்வது மதிப்புக் குறைவென்றும் தவறாகக் கருதுவோர், முன்னேறாமல் பின் தங்கிப் போவது உறுதி. மேலே சொன்ன தவறான எண்ணம் நம் நாட்டில் பரவி, எல்லாம் நம் சாத்திரங்களிலேயே உள்ளன என்றும், நாம் பிறரிடமிருந்து தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றுமில்லை யென்னும் தவறான போக்கு நிலையான பிறகு அறிவியல் படிப்படி யாகக் கீழ்நிலைக்கு இறங்கி, இப்போதைய அடிமட்ட நிலைக்கு வந்து விட்டது.

இந்த நூலை இயற்றுவதற்கென நான் ஆங்கில மொழியிலுள்ள வானவியல் நூல்களைப் படித்ததோடல்லாமல், சம்ஸ்கிருத மொழியி லுள்ள-சூர்ய சித்தாந்தம், சித்தாந்த சிரோமணி, பஞ்ச சித்தாந்திக-முதலான நூல்களையும் பார்த்தேன். தெரிந்தவர்கள் உதவியால் இரவு நேரங்களில் கோள்கள், விண்மீன்கள் ஆகியவற்றைப் பார்த்து அவற்றின் தோற்றங்கள், இடங்கள் முதலியவற்றை உணர்ந்தேன். சென்னையிலிருந்த காலத்தில் வானாய்வுக் கூடத்தின் அதிகாரிகளை அணுகிச் சனிக்கிரகாதிகள் எனப்படும் சனிக்கோள் வளையங் களைத் (rings of Saturn) தொலைநோக்கியின் மூலம் பார்த்தறிந்தேன். கோள்கள், விண்மீன்கள், வால்நட்சத்திரம், சூரிய சந்திர கிரகணங் கள் முதலியவற்றை விளக்கும் படங்கள் ஐம்பதுக்குமேல் இங்கிலாந்

தில் செய்வித்து வரவழைத்து நூலில் தக்க இடங்களில் சேர்த்து விட்டேன்.

அறிவியல் துறையில் நான் எழுதிய மூன்றாவது நூல் 'ஜந்து ஸ்வபாவ சரித்திரம்' ஆகும். இதன் முதல் பகுதி 1896இல், ஏறத்தாழ அறுபது விலங்குகளின் படங்களோடு வெளியிடப்பட்டது. புத்தகம் படிப்பவர் ரசிக்கும்படியாக இருக்க, ஆங்காங்கு அவற்றைப் பற்றிய கதைகளையும், மக்கள் அவற்றைப்பற்றிக் கொண்டுள்ள எண்ணங்களையும் சேர்த்துள்ளேன்.

இலக்கணச் சுருக்கம், காவிய சாரம், அலங்காரச் சுருக்கம், தெலுங்குத் தர்க்கச் சுருக்கம் முதலியவை நான் எழுதிய சாத்திர நூல்களே தவிர அறிவியல் நூல்கள் அல்ல.

நான் எழுதிய நூல்களிலெல்லாம் 'ஆந்திரக் கவிஞர் சரித்திரம்' தலைசிறந்தது எனச் சொல்லத் தகும். இதன் முதல் பகுதியை 1887இல் வெளியிட்டேன். இந்த முதல் பகுதி, பண்டைய கவிஞரைப் பற்றியது. 1410 வரை இருந்தவரைப் பண்டைய கவிஞர் என்றும், 1410 முதல் 1610 வரை வாழ்ந்தவரை இடைக்காலக் கவிஞர் என்றும், 1610க்குப் பிறகு வாழ்ந்தவரைத் தற்காலக் கவிஞர் என்றும் வரையறுத்துக் கொண்டேன். இரண்டாம் பகுதி, இடைக் காலக் கவிஞரைப் பற்றியது. மூன்றும் பகுதி, தற்காலக் கவிஞர் பற்றியது. மூன்று பகுதிகளிலும் குறிக்கப்பட்ட கவிஞர் தொகை 200 க்கும் மேற்பட்டதாகும்.

நம் நாட்டில் வரலாறுகள் எழுதும் வழக்கம் அவ்வளவாக இல்லை. அதனால் கவிஞர் வரலாற்றை எழுதுவது மிகக் கடினமாக இருந்தது. நூலாசிரியர் பலர் தம் படைப்புக்களை அரசர்க்கு அர்ப்பணித்திருப்பதால், அரசர்களின் காலத்தையொட்டி கவிஞர்தம் காலத்தை உணர வேண்டியிருந்தது. அரசர்களின் காலத்தை அறியவும் நம்மிடையே வரலாறுகள் இல்லை. அவர்கள் தானதர்மங்கள் செய்தபொழுதும், கோயில்கள் கோபுரங்கள் கட்டியபொழுதும், சாஸனங்கள் எழுதி, தானதர்மங்கள் செய்த காலத்தைக் குறித்து வந்ததால் அரசர்களின் ஆட்சிகாலத்தை வரையறுக்க இயன்றது. நூலாசிரியரில் பெரும்பாலோர் தம் நூல்களைக் கடவுளருக்கு அர்ப்பணித்துள்ளனர். அத்தகையவரின் காலத்தை நிர்ணயிக்க அவர்கள், தம் முந்தைய கவிஞர்களின் பெயர்களைச் சொல்லி வணக்கம் தெரிவித்திருக்க, அந்தப் பெயர்களைத் தவிர வேறு ஆதாரம் கிடைக்கவில்லை. கவிஞர் காலத்தைக் குறிக்க இலக்கண நூல்கள் ஓரளவு உதவின. இலக்கண நூல்களை இயற்றிய

ஆசிரியர் சிலர், முந்தைய நூல்களிலிருந்து பாடல்களை உதாரணங்களாகக் கொடுத்துள்ளனர். இவ்வாறு எத்தனையோ இடையூறுகளிருந்தும் எவ்வளவோ சிரமப்பட்டுக் கால நிர்ணயத்தை என்னால் ஓரளவு செய்ய முடிந்தது.

இதன் தொடர்பாக, அரசினரால் வெளியிடப்பட்ட தென்னிந்தியச் சாஸன நூல்களை மட்டுமல்லாமல், சென்னையிலும், பிற மாநிலங்களிலும், மைசூரிலும் வெளியிடப்பட்ட செப்பேடுகள், கல்வெட்டுக்கள் அடங்கிய பத்திரிகைகளையும், புத்தகங்களையும், வரலாறுகளையும் வரவழைத்துப் படித்தேன். சென்னைப் பொருட்காட்சி சாலையில் உள்ள செப்பேடுகளை ஆராய்ந்தேன். அச்சேருத ஓலைச்சுவடிகள் பலவற்றைச் சம்பாதித்தேன். தஞ்சாவூரில் உள்ள சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் தெலுங்கு நூல்கள் உள்ளன என்று கேள்விப்பட்டு, அங்குச் சென்று, நூல்களைப் படித்து எனக்கு வேண்டிய பகுதிகளை எழுதிக்கொண்டு வந்தேன். மூன்ருண்டுகள் தொடர்ந்து கோடை விடுமுறைகளில் சென்னைக்குச் சென்று அங்குள்ள கீழ்நாட்டுச் சுவடிகள் நூல் நிலையத்தில் (Oriental Manuscripts Library), நாள்தோறும், காலை பத்திலிருந்து மாலை ஐந்து வரையில் ஓலைச் சுவடிகளைப் படித்து, தேவையான பகுதிகளை எழுதிக்கொண்டு வந்தேன்.

ஒருநாள் டிராம் (tram) வண்டியில் ஏறிச்சென்று கடற்கரையோரத்தில் இறங்கி, அங்குள்ள கோட்டைக்கு நடந்து சென்று, தேவையான நூலை நூல்நிலையத்திலிருந்து பெற்றுக்கொண்டு எழுதத் தொடங்கும்போது, என் சட்டைப் பையில் குறிப்புப் புத்தகத்தைக் காணவில்லை. டிராம் வண்டியில் அதை விட்டுவிட்டு வந்ததாகக் கருதி, உடனே மீண்டும் கடற்கரைக்குச் சென்று, மற்ருெரு டிராம் வண்டியில் ஏறிச்சென்று, முதலில் ஏறிவந்த வண்டிக்காரரைக் கண்டுபிடித்துக் கேட்கவே, ஏதோ ஒரு நோட்டுப் புத்தகம் பெஞ்சி மீது இருக்கவே அதைத் தூக்கி எறிந்துவிட்டதாக அவர் சொன்ஞர். அவர் வண்டியிலேயே ஏறி, அவர் புத்தகத்தை எறிந்துவிட்ட இடத்திற்கு வந்து இறங்கி, அந்த இடத்தில் சுற்றுமுற்றும் தேடியும் அக்கம் பக்கத்தவர்களை விசாரித்துப் பார்த்தும் புத்தகம் போன வழி தெரியவில்லை. புத்தகத்தைக் கொண்டுவந்து கொடுப்பவர்க்கு 25 ரூபாய் இனமாகக் கொடுப்பதாக அறிவித்தும் பயனில்லாமற் போய் விட்டது. நான் ஒரு மாத காலம் பட்ட கஷ்டமெல்லாம் வீணுகி விட்டது. எனவே கோட்டையில் சென்று படித்த நூல்களையே மீண்டும் படித்து, எழுதியதையே மீண்டும் எழுத வேண்டி வந்தது. இந்த வகையில் நான் மிகவும் சிரமப்பட்டுக் கவிஞர் வரலாற்றை

எழுதி முடித்தேன். மீண்டும் பார்வையிட்டு அதை இப்பொழுது செப்பனிட்டுப் பதிப்பிக்கலாம். ஆனால் முதியவனாகி, உடல்நலம் குறைந்துமிருப்பதால் எனக்குப் போதிய சக்தியும், பொறுமையும் இல்லை.

1610க்கு இப்பக்கம் வாழ்ந்தவர்கள் முந்தைய வர்ணனைகளையே மீண்டும் புதுப்பித்து எழுதியும், பழைய பிரபந்தங்களைச் சார்ந்தே புதியவற்றைப் படைக்கலாயினர். சொல்லப்படும் பொருளில் அதிகக் கவனம் செலுத்தாமல், நிகண்டுகளில் தேடிச் சொற்களைப் பொறுக்கி எடுத்து இணைத்து, சித்திர கவிதைகளைப் புனைந்தும் உறுப்புகளை வரைந்தும் தம் தாய்மொழியை அலங்கோலப்படுத்திச் சாக அடித்தனர். இந்தக் கருத்தைத் தெளிவு படுத்துவதற்கென நான் அந்தக் காலத்தில், 'சரஸ்வதி நாரத விலாசம்' என்ற ஒரு சிறிய கவிதை நூலை இயற்றினேன். இது, நாரதர் தம் தாயான சரஸ்வதியை அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் காரணம் கேட்கவே, அவர் தம் துன்ப நிலையைச் சொல்லி ஓலமிடுவது போல், கேள்வி பதில் வடிவத்தில் உள்ள உரையாடல் நூலாகும்.

ஆங்கில மொழியிலிருந்து கேலி நாடகங்களைத் தழுவிப் பத்து பிரகசனங்களைத் தெலுங்கு மக்களுக்குப் பயன்படும் வகையில் எழுதினேன். மற்ற நான்கு என் சொந்தக் கற்பனையில் விளைந்தவை.

'ஜன்மாந்தரம்', 'அதிபால்ய விவாஹம்', 'விக்ரஹ ஆராதனை', 'ஈஸ்வர உபாஸனம்', 'பிரார்த்தனை', 'ஸ்திரீ புனர் விவாஹ சரித்ரம்', 'சங்கராசார்யுலு', 'பசவராஜு கவர்ராஜு ஜீவித சரித்ரம்' முதலானவை (சுமார் 30) நான் எழுதி, கூட்டங்களில் படித்த சொற்பொழிவுக் கட்டுரைகள். கூட்டங்களில் வெறும் வாயளவில் நான் ஆற்றிய உரைகள் இவற்றை விட நான்கு மடங்கு அதிகம்.

தொடக்க காலத்தில் என் நண்பர்கள், என்னால் நன்றாக எழுத முடியுமே தவிர பேச முடியாதென்று கருதினர். என்னால் மணிக் கணக்கில் தங்குதடையின்றிச் சொற்பொழிவாற்ற முடிந்தாலும், என் வெறும் வாயளவுச் சொற்பொழிவுகள் எழுதிப் படித்த உரைகளின் அளவிற்குச் சக்தி வாய்ந்தவை அல்ல என்பது உண்மையே. என் குரல் எடுப்பானதல்ல. பேசும்பொழுது எனக்கு அபிநயத்துடன் பேசத் தெரியாது. மூன்றாவது, கேட்பவர் பக்கம் பார்க்காமல் என் தோரணையில் நானே பேசிக்கொண்டே போவது. இவை நல்ல சொற்பொழிவாளனுக்கு ஏற்ற இலட்சணங்கள் அல்ல. இருந்தாலும்

நான் பேசுவது உத்திகள் நிறைந்திருப்பதாகவும், இதயத்தின் அடித் தளத்திலிருந்து வருவதாகவும் கேட்பவர் உணர்ந்து வந்தனர்.

1894—95 ஆம் ஆண்டுகளில், நான் ‘ சுதேசி சம்ஸ்தான சரித்திர’ங்களைப், புத்தக வடிவத்தில் படங்களுடன் வெளியிட்டேன். 1894 கோடை விடுமுறையில் தெலுங்கில் ‘ ஜீஸஸ் சரித்திர’த்தை எழுதத் தொடங்கி ஆறு அத்தியாயங்கள் எழுதி, 1913 ஏப்ரல் மாதத்தில் எஞ்சிய இரண்டு அத்தியாயங்களையும் எழுதி ஒருவிதமாக முடித்தேன்.

‘ உத்தம ஸ்திரீ சரித்திர’ங்களின் முதல் பகுதியை வெளியிட்டேன். இதில் ‘ கிரேஸ் டார்லிங் ’, ‘ ஆர்லியன்ஸ் கன்ய ’ (Joan of Arc), ‘ எலிஜபத் ஃப்ரை ’, ‘ லேடி ஜேஸ் க்ரே ’, ‘ மேரி கார்ப்பெண்டெர் ’ எனும் ஆங்கிலப் பெண்களின் வரலாறுகளும், ‘ உத்தம மாத ’ எனும் கட்டுரையும் உள்ளன.

ராஜா ராம்மோகன் ராயின் சரித்திரத்தைப் பல்லாண்டுகள் முன்பு தொடங்கி ஓரளவு எழுதி விட்டுவைத்திருந்தேன். கடவுள் அருளால் அதையும் முடித்து வெளியிட முடியுமோ என்னவோ !

1892 இல், ஆங்கிலத்தில் கோல்டுஸ்மித் இயற்றிய ‘ ட்ராவெல்லர் ’ (Traveller) எனும் காவியத்தைப் ‘ பதிக விலாஸம் ’ எனும் பெயரில் கவிதை வடிவத்தில் தெலுங்காக்கம் செய்தேன்.

நான் எழுதிய புத்தகங்கள் மேலும் சில உள்ளன. கர்னல் மக்டானல்ட் துரை கல்வி அலுவலராக இருந்த காலத்தில் அரசினரின் இரண்டாவது பாடப் புத்தகத்தை எழுதினேன். அதற்கு அரசினர் ரூபாய் 210 கொடுத்தனர். மார்ஸ்டன் துரை கேட்டுக் கொண்டதன் பேரில் மாக்மில்லன் கம்பெனிக்கு நான்கு, ஐந்து, ஆறுவது பாடப் புத்தகங்களை எழுதிக் கொடுத்தேன். இந்த மூன்று புத்தகங்களுக்காக எனக்கு ரூபாய் ஆயிரம் கொடுத்தனர். இந்தப் பாட புத்தகங்களில் ஒன்றை அவர்கள் அச்சேற்றும் பொழுது அச்சகத்தினரின் கவனக் குறைவால் தவறிய ஒரு பகுதியைத் திரும்ப எழுதித் தரவேண்டுமென்று கேட்டனர். குறிப்புப்படி எழுதி வைக்கும் பழக்கம் எனக்கில்லையென்றும், தொகை கொடுத்தால் மீண்டும் எழுதுவதாகவும் சொல்லவேண்டி வந்தது. அவர்கள் அதன்படியே மீண்டும் தொகை கொடுத்து, தொலைந்துபோன பகுதியை என்னிடம் புதிதாக எழுதி வாங்கிக் கொண்டனர். கடவுள் எனக்கு வேகமாக எழுதும் சக்தியைக் கொடுத்துள்ளார். கவிதையாயினும், உரைநடையாயினும் நான் ஒரு முறையே எழுதுவேன். எழுதியதை மீண்டும் திருத்தும் பழக்கம் எனக்கில்லை. அதனால் என் எழுத்து மெருகேறும்

என்று நான் எண்ணுவதில்லை. நான் எழுதிய நூல் ஒருமுறை தொலைந்ததென்றால் அது என்றைக்குமே தொலைந்ததுதான்.

தெலுங்குமொழி வளர்ச்சியடைய வேண்டுமென்ற ஆர்வம் எனக்கு முதலிலிருந்தே அதிகமாக இருந்தது. நான் என் காலம் முழுவதையும் மொழி வளர்ச்சிக்காகவே பயன்படுத்திப் பாடுபட்டிருந்தால் என் ஆசை ஓரளவு நிறைவேறி யிருக்குமோ என்னவோ? நான் ஒரு வேலையில் திருப்தியடையாமல் எத்தனை வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு கவனித்து வந்தேன் என்பது உங்களுக்கு விளங்கியிருக்கும். இத்தனை வேலைகளை என் தலைமேல் போட்டுக் கொண்டதாலேயே ஒரு வேலையையும் திருப்தியாகச் செய்வதற்கு ஆற்றலற்றுப் போய்விட்டேன். இவ்வாறிருந்தும் என் ஆசையை ஓரளவாவது நிறைவேற்றிக் கொண்டதாக நினைக்கிறேன். நான் தொடங்கிய காலத்தில் தெலுங்கில் ஒரு துறையிலும் உரைநடை வடிவத்தில் நூல் இல்லை யென்றே சொல்ல வேண்டும். எல்லாத் துறைகளிலும் புதியவற்றையே இயற்ற வேண்டியிருந்தது. தெலுங்கில் முதல் நாவலை நானே இயற்றினேன். முதல் நாடகத்தை நானே தெலுங்காக்கம் செய்தேன். முதல் அறிவியல் நூலை நானே எழுதினேன். முதல் கேலிநாடகத்தை நானே புனைந்தேன். முதல் வரலாற்றையும் நானே வரைந்தேன். பெண்களுக்கென முதல் உரைநடை நூலை நானே யாத்தேன். இருந்தாலும் முதல் முயற்சிகள் எப்போதும் முதல் முயற்சிகள்தாம். அவை குறை நிறைந்திருப்பது இயற்கையே. நம் வளர்ச்சி குறைகளை யொட்டியே அமைந்துள்ளது. எனவே, முதலாவதாக எழுதப்பட்ட என் நூல்கள், பிற்காலத்தவர் சிறந்த நூல்களை எழுதுவதற்கு உதவியாக இருக்கும்.

நான் இவ்வாறு புதிய நூல்களை எழுதியதோடல்லாமல், பழைய நூல்களைப் பதிப்பிக்கும் பணியிலும் முயன்றேன். 'சப்தரத்னாகர'த்தின் ஆசிரியரான பகுஜனபல்லி சீதாராமாச்சார்யுலு தம் நிகண்டின் முன்னுரையில் சில பண்டைய நூல்களின் பெயர்களைச் சொல்லி, இவற்றின் பெயர்களைக் கேள்விப்படுவதே யன்றி, எங்கும் காணக் கிடைக்கவில்லை என்று எழுதியுள்ளார். அவர் அவ்வாறு குறித்த நூல்களில் பத்துக்கு மேற்பட்டவற்றை நான் சம்பாதித்து, பரிசீலித்து, பதிப்பித்து வெளியிட்டேன். அபூர்வமான நூல்களை வெளியிடுவதில் உள்ள தொல்லை, அப்பணியைச் செய்தவருக்கே யன்றி ஏனையோர்க்குப் புரிவது மிகக் கடினம்.

அச்சில் வராத நூல்களைச் சீர்படுத்தி நான் அச்சேற்றிய நூல்கள் இருபதுக்கும் மேற்பட்டனவாகும்.

# 3. ஓய்வு நாட்கள்: 1900 முதல் 1910 வரை

இந்தக் காலத்தை நான், ஓய்வு நாட்கள் என்று சொன்னாலும் உண்மையான ஓய்வு என்பது எனக்கு என்றுமே இருந்ததில்லை. எப்போதும் எதாவது ஒரு வேலையை நான் செய்துகொண்டே இருப்பேனே தவிர, இன்பம் அனுபவித்துக் கொண்டு சுகமாக அமர்ந்திருக்கும் இயல்பு என்னிடம் கிடையாது. தம் மேன்மையான கருணையினால் கடவுள் என்னை எப்போதும் கஷ்ட ஜீவியாக இருக்குமாறு பணித்துவிட்டாரென்று தோன்றுகிறது.

கோகுலபாட்டி ஸ்ரீராமுலு, முதல் விதவைத் திருமணம் செய்துகொண்ட பொழுது, தம் முதல் மனைவி பெற்ற நான்கு மாத ஆண் குழந்தையை வளர்ப்பதற்கென்று எங்களிடம் விட்டுச் சென்றார். என் மேல் வைத்திருந்த மதிப்புக் காரணமாக ஸ்ரீராமுலு தம் குழந்தைக்கு என் பெயரையே சூட்டினார். அவனை நாங்களே படிக்க வைத்து வந்ததால் அவன், பட்டத் தேர்வை வெற்றிகரமாக முடித்திருந்தான். ‘புத்திரனில்லையெனில் கதியில்லை’ என்ற கொள்கை எனக்கு முதலிலிருந்தே இல்லை. நான் ஒரு மகனை வளர்த்துக்கொள்ள வேண்டுமென்று எப்போதும் நினைத்ததில்லை. எனக்கு இருக்கும் அற்பசொத்தை, தர்ம காரியங்களுக்குச் செலவு செய்ய வேண்டுமென நான் முடிவு செய்துகொண்டேன், வீரேசலிங்கத்திற்குத் (அந்த இளைஞனுக்குத்) தன் மருமகளைக் கொடுத்துத் திருமணம் செய்து தன்னிடம் இருத்திக்கொள்ள வேண்டுமென என் மனைவி எண்ணியிருந்தாள். சிறிது காலம் கடந்த பின்னர் என் மனைவியின் தம்பி தம் மகளைக் கொடுக்க விரும்பாமல் வேறொருவருக்குக் கொடுத்து மணம் முடித்து விட்டார். திருமண விஷயத்தை மணமக்கள் விருப்பத்திற்கு விட்டுவிடவேண்டுமே தவிர, பிறர் குறுக்கிடுவது தவறு என்பது என் கருத்து. அவன் (இளைஞன் வீரேசலிங்கம்) விதவைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென முடிவு செய்துள்ளதாக என்னிடம் கூறினான். விதவைத் திருமணம் செய்துகொள்வதாக இருப்பின், சென்னையில் உள்ள வீடுகளில் இருக்கும் பெண்களில் ஒருத்தியை அவனுக்கு மணம் முடிக்குமாறு என் மனைவி சொல்லவே, நான் அதற்கு ஒத்துக் கொண்டேன்.

திருமணம் நடக்க இருப்பது போலவே இருந்தது. அவன் ஒருமுறை ராஜமகேந்திரவரம் சென்று தன் நண்பர்களுடன் கலந்து பேசிய பிறகு விதவைத் திருமணம் தனக்கு விருப்பமில்லையென்று சொல்லி விட்டான். பின்னர், மைசூரிலிருந்த செருக்குமில்லி வேங்கடரத்னம் தம் மகளை வீரேசலிங்கத்திற்குக் கொடுத்து மணம் முடிக்க விருப்பம் இருப்பதாகத் தெரிவித்தார். நானும் அதற்கு இசைவு தெரிவிக்கவே அவர் அவனைத் தம்முடன் அழைத்துச் சென்றார். வீரேசலிங்கம் பெங்களூரில் பிராயச்சித்தம் செய்துகொண்டு, திருமணம் முடித்துக் கொண்டான். திருமணம் முடிந்த பிறகு எங்களிடம் வராமல் தனியாகப் போய்விட்டான்.

ஏழெட்டு ஆண்டுகள் சென்னையிலிருந்துவிட்டு, 1905 தொடக்கத்தில் வந்தபொழுது ராஜமகேந்திரவரம் ஓரளவு எனக்குப் புதிதாகக் காட்சியளித்தது. முன்பிருந்தது போல் இப்போது எனக்கு மாணவர்தம் உதவி இல்லை. இருப்பவர்கள் என் விரிவுரைகளைக் கேளாதவரானதால் அவர்களிடையே சமூகச் சீர்திருத்த ஆர்வமில்லை. ஊரிலிருந்த பெரிய மனிதரிடையேயும் சீர்திருத்த ஆர்வம் குறைந்து விட்டது. வழக்கறிஞர் பலர் புதியவர். இருந்தாலும் தேசிராஜு பாப்பய்யா முதலான செயல்வீரர்கள் எனக்குப் புதிய நண்பராயினர்.

ராஜமகேந்திரவரம் திரும்பி வந்ததும், நான் முதன் முதலில் செய்த வேலை, 'ஸ்ரீ விக்டோரியா மகளிர் பள்ளி' என்னும் பெயரில் ஒரு மகளிர்ப் பள்ளியைத் தொடங்கியதாகும். இரண்டாவது வேலை, 'சத்தியவாதினி' எனும் பெயரில் மார்ச்சு மாதம் முதல் தேதியிலிருந்து ஆங்கிலம், தெலுங்கு ஆகிய இரு மொழிகளில் ஒருவார இதழை வெளியிடத் தொடங்கியதாகும். மகளிர்ப் பள்ளி, 1905 ஜனவரி 16 ஆம் தேதி எங்கள் சொந்த வீட்டில் இடம்பெற்றது. நான் குடியிருக்கச் சிறு பகுதியைத் தவிர வீடு முழுவதும் பள்ளிக்கெனவே ஒதுக்கப்பட்டது. இந்தப் பள்ளி, விதவை பாதுகாப்பில்லத்தையொட்டியே ஏற்படுத்தப்பட்டது.

நான் சென்னையில் ஏற்படுத்திய பாதுகாப்பில்லம், என் தலை மறைந்த உடனே மறைந்துவிட்டது—என்னோடு புறப்பட்டு ராஜமகேந்திரவரம் வந்ததென்று சொல்லலாம். மகளிரும் படிக்கக்கூடிய பள்ளி ஒன்றுகூட இங்கில்லை. நற்குடி மகளிர்க்கும் இளம் பெண்களுக்கும் பயன்படும்படியான ஒரு கல்வி நிலையம் அமைப்பது நல்லதென்று இதை உருவாக்கினேன். இந்தப் பள்ளியில் படிப்பதற்கு இளம் பெண்களை மட்டுமல்லாமல், சில குடும்பத்தினர் தம் மனைவியரையும் அனுப்பினர். முதியவரான ஓர் ஆசிரியருடனும் நான்கு

இளம் பெண்களுடனும் இந்தப் பள்ளி தொடங்கப் பெற்றது. அரைமாத காலத்தில் பெண்களின் எண்ணிக்கை 49 ஆயிற்று. ஆண்டு முடிவில் 90 ஆயிற்று. அடுத்த ஆண்டு ஏறத்தாழ 150 வரை உயர்ந்தது. முதலாண்டு முடிவில் மூன்று ஆசிரியர்களும், மூன்று ஆசிரியைகளும் பள்ளியில் பணியாற்றலாயினர். முதலாண்டு நான் என் கையிலிருந்து ரூ. 1708, 9 அணு 9 பைசா செலவு செய்தேன்.

நான் சென்னையிலிருந்து திரும்பி வந்ததிலிருந்து பிராம்ம சமாஜக் கோட்பாட்டாளனாக மாறவேண்டும் என்று எண்ணிவந்தேன். நான் நெடுங்காலத்திற்கு முன்பே வருணுசிரமம் மீறிய பிராம்மணனாக மாறி யிருப்பேன். ஆனால், விதவைத் திருமணக் காரியத்திற்குக் குறையேற் படுமென்று அப்படிச் செய்ய முடியாமல் இடையூறுகளைப் பொறுத்துக் கொண்டிருந்தேன். இடையூறுகளைப் பொறுத்துக் கொள்வதென்றால் என்ன என்று சிலர் ஐயப்படலாம். முதல் திருமணத்தை நடத்திய உடனே சங்கராசாரியார் என்னைச் சாதியிலிருந்து விலக்கிவிட்டார். என் கட்சியில் சேர்ந்தோர் அனைவரும், ஒவ்வொருவராகப் பிராயச் சித்தம் செய்துகொண்டு என்னை விட்டுப் போய்க்கொண்டிருக்க நான் ஒருவனே எஞ்சியிருந்தேன். இந்த இக்கட்டான நிலையில் நான் ஹிந்துவாக இருந்தும் என்னுடன் அமர்ந்து சாப்பிடுவதற்கு ஹிந்துக்கள் யாரும் தயாராக இல்லை. வருணுசிரமத்தைத் துறக் காதவனாக இருந்ததால் பிற மதத்தாரோடும், பிராம்மணர் அல்லா தோரோடும் அமர்ந்து சாப்பிடுவதென்பது என்னால் இயலாமலி ருந்தது. இத்தகைய சூழலில் தனித்துவிட்ட எனக்கு இடையூறு இல்லாமல் வேறென்ன இருக்கும்? நான் பூணூலை நீக்கிவிட்டு, குல தருமத்தைத் துறந்துவிட்டு, பிராம்மணக் கோட்பாட்டை மீறிய வனாகிவிட்டால், பிராம்மணன் அல்லாதோருடன் மட்டுமல்லாமல் கிறித்துவர் முகம்மதியரோடும் உணவருந்த வழியேற்படும்.

காலம் செல்லச் செல்ல, விதவைத் திருமணம் செய்து கொண் டோரின் எண்ணிக்கை பெருகி, கலந்து விருந்துண்ணும் (interdining) அளவிற்குப் போதுமானதாயிற்று. மறுமணங்கள் செய்துகொண் டோர் எண்ணிக்கை உயர்ந்ததால் யார் வீட்டிலாயினும் திருமணம் நடத்த முடியும். திருமணங்களை ஒவ்வொருவர் வீட்டிலும் நடத்தி, அவர்களைப் பழக்குவிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன், கௌத்தா ஸ்ரீராம சாஸ்திரியின் திருமணத்தைக் கூனூரி புருஷோத் தம் அவர்களின் வீட்டில் நடத்தினேன். மற்றொரு திருமணத்தைத் தணுக்கு வேங்கடாசலபதி ராவின் வீட்டில் நடத்தினேன்.

நான், விதவை பாதுகாப்பில்லத்திற்காகவும், பள்ளிக்காகவும் எங்கள் வீட்டை அடுத்திருந்த எங்கள் பெரிய தந்தையாரின் பகுதியையும் வாங்கி, எங்கள் வீட்டோடு சேர்க்க வேண்டுமென்று முயன்று வந்தேன். இதற்கிடையில், மங்களூரிலிருந்து ராமசந்திர ராவும், அவர் மனைவியும் 1905 மே மாதத்தில் என்னைப் பார்க்க வந்தனர். ஒருநாள் ஒரு தோட்டத்தின் வழியே பொழுது போக்காக நடந்துகொண்டிருந்த போது, அந்தத் தோட்டம் விதவை பாதுகாப்பில்லம் கட்டுவதற்கு வசதியாக இருக்குமென்று அவர் என்னிடம் குறிப்பிட்டார். அந்தத் தோட்டம் என் நண்பரான சல்லபல்லி ரங்கய்ய பந்த்துலுக்குச் சொந்தமானது. ரங்கய்ய பந்த்துலுவின் வீட்டுக்குச் சென்று விதவை பாதுகாப்பில்லம் கட்டுவதற்கென அத்தோட்டத்தை எனக்குத் தருமாறு கேட்டேன். தோட்டத்தை யாரோ மூவாயிர ரூபாய்க்குக் கேட்டதாகவும், நல்ல காரியத்திற்கென நான் கேட்பதால் ரூபாய் 2,500க்குக் கொடுப்பதாகவும் சொன்னார். ஆர்பத்நாட் கம்பெனியில் என் பணம் ரூபாய் 2,000 இருந்தது. அந்தத் தோட்டத்தை வாங்குவதற்கென இந்த 2,000 ரூபாயை வரவழைத்தேன். இதில் எனக்குக் கடவுளின் அருளுதவி தெளிவாகத் தெரிகிறது. இந்தத் தொகையை நான் வரவழைத்துக் கொண்ட பின்னர் விரைவிலேயே ஆர்பத்நாட் கம்பெனி திவாலாகி விட்டது. சென்னையில் இருந்த வீடுகளை அதுவரையில் நான் விற்கவில்லை. அந்த விடுகளை விற்று, கிடைத்த தொகையுடன் புதிதாக வாங்கிய தோட்டத்தில் விதவை பாதுகாப்பில்லத்தைக் கட்ட வேண்டுமென்று எண்ணினேன்.

'சத்தியவாதினி' என்ற ஆங்கில-தெலுங்கு வார இதழுக்குச் சந்தா மூலம் வந்தது போக, அதற்கான செலவில் எஞ்சிய பகுதி முழுவதையும் நானே ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. தம் முதல் மனைவிக்குத் தாய்மைப் பேறு கிட்டாத காரணத்தாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ, முதல் மனைவி உயிரோடிருக்கும் போதே போலவரம் ஜமீந்தார் இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். ஹிந்து தர்ம சாத்திரங்களின்படி இத்தகைய திருமணங்கள் தவறுகாமற்போனலும் கல்வியாளர் நிறைந்த இந்தக் காலத்தில் பகுத்தறிவுடையோர் பார்வையில் தவருகவே தோன்றும். இந்தத் திருமண விஷயமாக 1901 மார்ச்சு 29 'சத்தியவாதினி' இதழில் இவ்வாறு எழுதினேன் :

'போலவரம் ஜமீந்தார் அவர்கள் அண்மைக் காலத்தில் தம் விவேகத்தைத் துறந்து, அறிவு பூர்வமாகத் தாம் மணந்த மனைவி

கதறியழுமாறு விட்டுவிட்டு, பத்து வயதுப் பெண் ஒருத்தியை மீண்டும் மணம் புரிந்தாரென்று கேள்வியுற்று நாம் படும் வேதனை சொல்லத் தரமன்று. இவர் தொடக்க காலத்தில் சமூகச் சீர்திருத் தத்தில் ஆதரவு காட்டுபவராக இருந்து, விதவை பாதுகாப்பில்லத் திற்கு ஆயிரம் ரூபாய் வழங்கியது கண்டு, இவரால் இந்த நாட்டிற்கு வெகு நன்மை விளையப் போகிறதென்று நினைத்திருந்தோம். ஆனால் இவர் கற்ற கல்வியையும், தம் வயதுக்கு இருக்க வேண்டிய விவேகத்தையும் மண்ணாக்கிவிட்டு, நாட்டிற்குக் கேடுவிளைவிக்கும் முறையில் நடந்து கொள்வாரென்று நாங்கள் ஒரு நாளும் கற்பனையில் கூட நினைத்ததில்லை. அண்மைக் காலத்தில் ஆரிய மதக் காப்பாளராக மாறி, 'ஆரியமத போதினி'க்குத் தலைமைப் புரவல ராயினாரென்று கேள்விப் பட்டோம். 'ஆரியமத போதினி' இந்தத் திருமணத்தை எவ்வாறு விளக்கிப் பாராட்டப் போகிறதோ, பார்க்க வேண்டியுள்ளது...எவ்வளவு படித்தவராயினும் நேர்மை தவறிப் போனால் மனிதனென்ற பெயருக்கே தகுதியற்றவராகி விடுவார். தவறு செய்வது புதுமையல்ல. செய்த தவற்றை உணர்ந்து, அதற்கு வருந்தி, இனிமேல் தன் நடத்தையைச் சீர்ப்படுத்திக் கொள்வது அறிவாளனுக்கு அடையாளம். எனவே, உத்தமியான தம் முதல் மனைவியை மீண்டும் அழைத்து வந்து, வீட்டில் வைத்துக்கொண்டு ஆதரித்து, விரும்பிக் கொணர்ந்த இந்தப் புது மனைவி பருவமடைந்து குடும்பம் நடத்த வரும்பொழுது, இந்த முதல் மனைவிக்குக் கொடுத்த துன்பத்தையே கொடுக்காமல், அந்த அபலையை 'தன்னில் பாதி' (அர்த்தாங்கி) என்ற சொல்லுக்கு ஏற்றாற்போல் ஆதரிக்க வேண்டு மென்று நம் ஜமீந்தார் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறோம். முதல் மனைவி இவ்வாறு தவிக்க, ஒன்று மறியாத தம் பச்சிளம் மகளை இரண்டாம் மனைவியாகக் கொடுக்க அந்தப் புது மாமனாருக்கு எப்படித்தான் மனம் வந்ததோ ! உலகத்தில் எத்தகை யோரும் பணத்துக்கு ஆசைப்பட்டு தாம் பெற்ற பெண்களையும் பலி கொடுப்பார்கள் அல்லவா !'

இந்த 'ஆரியமத போதினி' இதழாசிரியர் குறிப்பாக என்னையும், பொதுவாகச் சமூகச் சீர்திருத்தவாதிகளையும் கண்டபடித் திட்டுவதற் கென அவதரித்த மகாபுருஷர். நான் எழுதிய, மேற்கண்ட வாக்கியங்கள் போலவரம் ஜமீந்தாருக்கும், 'ஆரியமத போதினி' இதழாசிரியருக்கும் மனத்தாங்கலை உண்டாக்கின. 'ஆரியமத போதினி' இதழாசிரியர் மிகச் சினந்தெழுந்து, என்னை வைது பத்திரிகையில் எழுதினார். அவர் எழுதியவற்றுக்கெல்லாம் நான்

பதில் சொல்லியிருந்தாலும், இதற்குத் தொடர்பானதை மட்டும் இங்குத் தர விரும்புகிறேன் :

'மிக அண்மைக் காலத்தில் விதவை பாதுகாப்பில்லத்திற்குப் போய் ஆயிரம் கொடுத்த அருளாளரை நான் நன்றி மறந்து வைதேனும்! ஒருவர் நன்மை கருதிச் சொல்லும் அறிவுரைகள் வசவுகளாம்! அறிவுரை கூறுவது நன்றியற்ற செயலாம்! ஒருவர் ஆதரவைத் துய்க்கும் நேரத்தில், அவர் தவருன பாதையில் செல்வாருனல் காதுக்குக் கசப்பான நல்லுரைகளைக்கூறும் துணிவு இல்லாமல் பசப்பு வார்த்தைகளைப் பேசுவது நன்றி மறவாமை!... இந்த அபூர்வ எழுத்தாளர் தம் இயல்பை எனக்கு உரைத்து, தம் அறிவு இலட்சணத்தை அம்பலப்படுததிக்கொள்கிருர். ஆயிரம் ரூபாய் அல்ல, இன்னும் பத்தாயிரம் ரூபாயாயினும், புகழ் பாடுவதற்கும், தம் தீய நெறியைப் பாராட்டுவதற்கும் கொடுப் பார்களேயானுல், நான் தூசாக மதித்து மறுத்து விடுவேன். நான் அதிகப் பணக்காரனல்லாமல் போனுலும், ஜமீந்தார் எனக்குக் கொடுக்க முடியாமல் போனுலும், என் சுகபோகங்களைக் குறைத்து மிச்சப்படுத்தி, இந்த தர்ம காரியத்திற்காக இதற்குப் பத்துமடங்கு அதிகமாக நான் கொடுத்திருப்பது இந்த உலகம் அறியும். ஜமீந்தார் ஆயிரம் ரூபாயை விதவை பாதுகாப்பில்லத்திற்காகக் கொடுத்தாரே யன்றி, என் உபயோகத்திற்காக அல்ல.'

நான் தோட்டத்தை வாங்கியபிறகு அங்குக் குடியிருந்தாலொழிய தோட்டம் உருப்படாதென்றெண்ணி, முன்பு பாழடைந்து கிடந்த வீட்டைச் செப்பனிட்டு, அதில் குடி போகலாம் என்று என் மனைவி யிடம் சொன்னேன். பெருங்காடு போன்ற அந்தத் தோட்டத்தில் குடியிருப்பது ஆபத்தானது என்றும், திருடர் தொல்லையிருக்கு மென்றும், குளிர்காலத்தில் குளிர் அதிகமாக இருக்கும் என்றும் என் மனைவி எனக்கு அறிவுரை கூறினுள். நம்மைக் காப்பாற்ற ஈசனிருக்க, பாம்புகள் முதலான கொடிய பிராணிகளுக்கு அஞ்ச வேண்டா மென்றும், திருடர் பயம் இல்லாமலிருக்க நாய்களை வளர்க்கலா மென்றும், குளிர் காலத்தில் நம் விட்டுக்கே மீண்டும் வரலாம் என்றும் சொல்லி, இணங்க வைத்து, தோட்டத்திற்குக் குடிபோனேம். அங்குள்ள தூய காற்றினுல் என் இருமல் சற்றுக் குறைந்தது. என் மனைவிக்கும் உடல் நலம் கூடியது.

இனி, கிணறு ஒன்று தோண்ட வேண்டிய வேலை இருந்தது. என்னிடம் அப்போது நூறு ரூபாய் மட்டுமே இருந்தது. ஆயிரம் ரூபாய்க்குக் குறைந்து கிணறு வேலையை முடிப்பது கடினம். கடவுள்

மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, கிணறு தோண்டும் வேலையில் இறங்கினேன். இதற்கிடையில், மிஸ் மான்னிங்க் அம்மையார் தம் உயிலில் ரூபாய் 50 எனக்குக் கொடுக்க வேண்டுமென்று எழுதி வைத்ததாக, அவர்தம் உயிலை நிறைவேற்றும் பொறுப்பாளர் எனக்கு எழுதினர். சென்னையிலிருந்து பென்னி கம்பெனியார் எனக்கு ரூ. 650—1—0 அனுப்பினர். இந்தத் தொகைகளைக் கொண்டு கிணறு வேலையை முடித்தேன். இந்த உதவி உண்மையில் கடவுள் அருளால் கிட்டியதே தவிர வேறென்றுமல்ல !

முதன்முதலில் மக்டானல்ட் துரை எனது 'ராஜசேகர'த்தைப் பற்றி அந்த அம்மையாரிடம் சொல்லியிருந்தார். பிறகு அம்மையார் சென்னை வந்த பொழுது எங்கள் வீட்டிற்கு வந்து, என் மனைவியைத் தழுவிக் கொண்டதுடன், எங்கள் வீட்டிலிருந்த பாதுகாப்பில் லத்தைச் சார்ந்த விதவையரைக் கண்டு மகிழ்ந்தார்கள். ராம் மோகன் ராய் அவர்கள் இங்கிலாந்து சென்றபொழுது, நோய்கண்ட காலத்தில், மிஸ் கார்ப்பெண்டர் ஆகியோருடன் சேர்ந்து அவருக்குப் பணி விடை செய்தவர்களில் இந்த அம்மையாரும் ஒருவர். இறப்ப தற்கு முன்பு, வைத்தியர் ராம்மோகன் ராய் அவர்களின் தலைமுடியை வெட்டியபோது, அந்த முடியைத் திரட்டி, பத்திரப் படுத்தி வைத் திருந்த இந்த அம்மையார், அதை அன்புடன் எனக்குக் கொடுத் தார்கள். அந்த அன்பளிப்பு மதிப்பிட வொண்ணாததென்று உணர்ந்து, இப்போதும் பத்திரமாக வைத்துள்ளேன்.

1905 இல் சாதாரண பிராம்ம சமாஜ மதப் பிரசாரகரான பாபு ஹேமசந்திர ஸர்க்கார் ராஜமகேந்திரவரம் வந்தார். அப்பொழுது நான் அவரிடம், என் தந்தையாரின் சிராத்தத்தைப் பிராம்ம சமாஜ விதிகளின்படி நடத்த எண்ணியிருப்பதாகவும், அப்போதிலிருந்து அனுஷ்டானங்களை விட முடிவு செய்திருப்பதாகவும் சொன்னேன். அதன் பிறகு, இரண்டு மாதங்களில் பாப்பய்யா தாம் பூணூலை நீக்கி விட்டு, பிராம்மண அனுஷ்டானத்திலிருந்து விலகி, தம் தந்தையின் சிராத்தத்தைப் பிராம்ம சமாஜ விதிப்படி நடத்த விரும்புவதாகவும் சொல்லி, என்னிடம் ஆலோசனை கேட்டார். நான் அவருக்கு ஊக்கம் கொடுத்து, அன்றைய விருந்தில் கலந்து கொள்வதாகவும், விரைவிலேயே நானும் பிராம்மண அனுஷ்டானத்திலிருந்து விலக இருப்பதாகவும் சொல்லி, கல்கத்தா நகரத்திலிருந்த என் நண்பர் பண்டித சிவநாத சாஸ்திரியாருக்கு எழுதி, சிராத்த காரியத்தை நானே நடத்தி, ஏனையோருடன் கலந்து விருந்து உண்டேன். இந்த விஷயத்தில் அவர் வழிகாட்டியாக விளங்கியதற்கு மிகவும் மனம்

மகிழ்ந்தேன். வெகு விரைவிலேயே பரலோகப் பயணம் மேற்கொள்ள இருந்த என் அனுஷ்டானத் துறவை விட, இளம் வயதினரும், ஒப்பில்லாத கவிஞரும், சீர்திருத்தச் செம்மலுமான பாப்பய்யா அனுஷ்டானத்தைக் கைவிடுவது, பரிசுத்த ஆத்திக மதம் பரவுவதற்கும், சமூக மறுமலர்ச்சிக்கும் மிகவும் பயனுள்ளதாக இருக்குமென்று நான் நம்பினேன்.

1906 பிப்ரவரி 15 ஆம் தேதி, என் தந்தையாரின் நினைவு நாளை நான் பிராம்மண தர்மத்துக்கு முரணாகக் கொண்டாடினேன். அன்று முதல் குலதருமத்தைக் கைவிட்டு, அனைத்துலக ஒருமைப்பாட்டை ஏற்றுக்கொண்டு, பிராம்மண அனுஷ்டானத்தைக் கைவிடுவதாக அறைகூவல் விடுத்து, வரவேற்கப்பட்ட கிறித்துவர்கள், மற்றும் எல்லாச் சாதியினருடனும் சேர்ந்து சமபந்தியில் விருந்துண்டேன். அப்பொழுது விதவை பாதுகாப்பில்லம் தனியாக இல்லையாதலால், எங்கள் வீட்டிலேயே இருந்த இரண்டு மூன்று விதவையர், நான் யாரோடு விருந்துண்டாலும் கவலையில்லை என்றும், பூணூலை நீக்காமல் இருந்தால் எங்கள் வீட்டிலேயே இருப்பதாகச் சொல்லினர். அவர்களுக்காக நான் 15 நாட்கள் வரைப் பூணூலைப் போட்டுக் கொண்டிருப்பதாகவும், இதற்கிடையில் அவர்கள் விரும்பினால் வேறு இடத்திற்குப் போய்விடலாம் என்றும், போக முடியாமலிருப்பவர்க்கு வேறு இடம் ஏற்பாடு செய்வதாகவும் கூறினேன். பிராம்மண விதவையர் இருவர் எங்கள் வீட்டை விட்டுச் சென்றனர். ஒரு பிராம்மணரல்லாத விதவை மட்டும் எங்கள் வீட்டிலேயே இருந்தாள். 13 நாட்களுக்குப் பிறகு பூணூலை நீக்கிவிட்டு எல்லாரிடமும் சொல்லி விட்டேன்.

நான் வாங்கிய தோட்டத்திற்குப் பக்கத்திலிருந்த மற்றொரு தோட்டத்தையும் 600 ரூபாய்க்குச் சல்லபல்லி ராமய்யாவிடமிருந்து வாங்கினேன். இந்தத் தோட்டம் ஒரு நெடுஞ்சாலைக்குப் பக்கத்தி லிருந்ததால் விதவை பாதுகாப்பில்லம் முதலியவற்றை அங்குக் கட்டவேண்டுமென எண்ணினேன். ஒருமுறை முலுகுட்ள அச்சுத ராமய்யா என்னைப் பார்க்க வந்தார். நான் வாங்கிய தோட்டங்களை அவருக்குக் காட்டி, புதிய தோட்டத்தில் அநாதை யில்லமும் விதவை பாதுகாப்பில்லமும் கட்ட எண்ணியிருப்பதாகச் சொன்னேன். நான் கேளாமலே, அவர் அந்த இல்லங்களை கட்டித் தருவதாக உறுதி கூறினார். அச்சுதராமய்யா ராஜமகேந்திரவரக் கல்லூரியில் என் மாணவராக இருந்தவர். என்னிடம் பெருமதிப்புக் கொண்டவர். சென்னையிலிருந்த காலத்தில் ஒருமுறை நான்

ராஜமகேந்திரவரம் வந்தபொழுது, என்னைத் தம் வீட்டுக்கு விருந்துக்கு அழைத்து, எங்கள் வீட்டிலிருந்து அவர் வீடுவரை மேள தாளங்களுடன் ஊர்வலமாக அழைத்துப்போக ஏற்பாடு செய்தார். அப்படி ஏற்பாடு செய்வதாக இருந்தால் நான் வர இயலாதென்று கூறிவிட்டேன். அவரும் ஒத்துக் கொண்டு, குதிரை வண்டியில் என்னைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். பல நண்பர்களுடன் சேர்ந்து விருந்தை முடித்த பிறகு, நன்றி தெரிவிக்கும் முறையில் பேசி என் கழுத்தில் பூமாலை அணிவித்து, என்னுடன் சேர்ந்து புகைப் படம் பிடித்துக் கொண்டார். பிறகு தம் வீட்டின் முன்னர் வாண வெடிகளை வெடிக்கச் செய்தார். என்னை என் வீட்டுக்குத் திரும்ப அழைத்து வரும்போது, தம் வீட்டருகில் ஒன்றும் செய்யாமல், என் வண்டி கடைத் தெருவை நெருங்கியபொழுது வண்டி முன்னர் இசை மேளம் முழங்க ஏற்பாடு செய்ததுடன், வழி நெடுகிலும் வாண வெடிகளை விட்டுக் கொண்டு, வண்ண மத்தாப்புகளையும் அதிர் வெடிகளையும் எரிக்கலானார்.

முன்பு இவ்வாறு செய்த என் நண்பரின் வாக்குறுதியை நன்றியுடன் ஏற்றுக்கொண்டு என் வணக்கத்தைத் தெரிவித்தேன். அவர் விரைவிலேயே வேலையைத் தொடங்கி, புதிய தோட்டத்தில், தற்போதுள்ள விதவை பாதுகாப்பில்லத்தைக் கட்டித் தந்தார். அதில் விதவையர் வசிப்பதற்கெனப் பத்து அறைகளும், நான்கு வருணத்தினருக்கு நான்கு சமையலறைகளும், பாதுகாப்பில்லத்தில் பணியாற்றுபவர் குடியிருப்பதற்கென மூன்று பெரிய அறைகளைக் கொண்ட ஒரு வீடும் அடங்கியுள்ளன. இவற்றைக் கட்டுவதற்கு 5,000 ரூபாய் பிடித்திருக்கும் என்று நான் எண்ணினேன். கிணறு தோண்டுவதற்கும், குளியலறை, கழிநீர் அறை முதலியன கட்டுவதற்கும், பூந்தோட்டம் ஒன்றை அமைப்பதற்கும் மேற்கொண்டு நான் ரூபாய் ஆயிரம் செலவிட்டேன்.

நான் பிராம்மண அனுஷ்டானத்தைக் கைவிட்ட நான்கு மாதங்களில் என்னை வைவதற்கென்று 'ஹிந்துதேசாபிவர்தனி' என்ற ஓர் அரைமதியப் பத்திரிகை, எங்கள் பட்டணத்திலிருந்து வெளிவரத் தொடங்கியது. பிரமுகர்கள் ஊக்கம் அளிக்கவில்லையெனில் அந்த ஆசிரியர் பத்திரிகையை வெளியிட முன்வந்திருக்கமாட்டார். அவர் ஏழெட்டு ரூபாய்ச் சம்பளம் பெற்றுக் கொண்டிருந்த ஒரு திண்ணைப் பள்ளி ஆசிரியர். ராஜமகேந்திரவரத்துக்கு அண்மையில் வந்தவர்; அவருக்கு என்னைத் தெரியாது; எனக்கும் அவரைத் தெரியாது. இந்தச் சார்புப் பத்திரிகையின் முதல் இதழில், அதாவது 1906 ஜூலை

1 ஆம் தேதி இதழில், விதவை பாதுகாப்பில்லத்தில் உள்ள விதவையர் தாசிகளென்றும், அந்த இடத்திலேயே வேசித் தொழில் நடைபெறுவதாகவும் மக்கள் எண்ணுவதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது.

இந்த அவதூறைப் படித்த பிறகு நான் ஒரு வழக்கறிஞர் மூலம், பத்திரிகாசிரியர் மன்னிப்பு கேட்க வேண்டுமென்றும், கேட்கவில்லையானால் சட்டப்படி நடவடிக்கை எடுக்கப்படுமென்றும் அறிவிப்பு அனுப்பினேன். அதை எடுத்துக் கொண்டு அவர் நியாபதி சுப்பாராவ் பந்த்துலுவிடம் ஆலோசனை கேட்கப் போக, அவர் சியாமாராவ் எனும் அந்தப் பத்திரிகாசிரியரைக் கண்டித்ததுடன், மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று அறிவுரை சொல்லி அனுப்பிவிட்டார். இருந்தாலும் அவரை வைத்து, நாடகத்தை நடத்தி வந்த மகானுபாவர்கள் அந்த அறிவுரையை அவர் ஏற்காத வண்ணம் தடுத்துவிட்டனர்.

தலைமை மாஜிஸ்டிரேட் கச்சேரியில், நான் அவர் மேல் ஒரு வழக்கைத் தொடர்ந்தேன். என் எதிர் தரப்பினர் தொடக்க காலத்தில் என் பிரதிவாதிக்கு ரூபாய் நூறு கொடுத்ததாகவும், வழக்கறிஞர் ஒருவரை ஏற்பாடு செய்து கொடுத்தனர் என்றும் எனக்குத் தெரியவந்தது. ஆனால் பின்னர், எங்கே தங்கள் பெயர்கள் வெளிப்பட்டு விடுமோ என்று அஞ்சி, சியாமா ராவைச் சிக்கலில் மாட்டி விட்டு அவர்கள் தப்பிச் சென்றனர். தலைமை மாஜிஸ்டிரேட் சியாமாராவுக்கு, ஏறத்தாழ ரூபாய் ஆயிரம் அபராதமும், 18 மாதங்கள் சிறைத் தண்டனையும் விதித்தார். குற்றமற்றவரை முன்னால் தள்ளி விட்டு உண்மையான குற்றவாளிகள் தப்பிச் சென்றனர். அவர் அந்தத் தீர்ப்பின் மேல், மாவட்ட நீதிபதியிடம் மேல்வழக்கு தொடரவே, அபராதம் ரூபாய் 300 ஆகக் குறைக்கப் பட்டதுடன், அதுவரை அனுபவித்த சிறைவாசமே போதுமென்று தீர்ப்பு வழங்கப் பட்டது.

1906 டிசம்பர் 15 ஆம் தேதி, என் பணிகளை ஆதரிக்கும் நண்பர்களை ஒன்று திரட்டி, நான் தொடங்கிய செயல்களை நிறைவேற்றுவதற்கென 'ஹிதகாரிணி சமாஜம்' (நலம்புரி சங்கம்) என்னும் பெயரில் ஒரு சங்கத்தினைத் துவக்கினேன். அதில் அப்போது 36 பேர் உறுப்பினர் சேர்ந்தனர். இந்தச் சங்கம் பிறகு பதிவு செய்யப்பட்டது. விதவைப் பாதுகாப்பில்லங்கள், அநாதைச் சிறுவரில்லங்கள், பள்ளிகள், சிறப்பப்பள்ளி முதலியவற்றை ஏற்படுத்தி, அவற்றை நடத்துவது இந்தச் சங்கத்தின் முக்கிய நோக்கங்களாகும்.

ஒன்பது பேர் கொண்ட செயற்குழு ஒன்று உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டது. 1907 இல், சங்க விதிகள் வெளியிடப்பட்ட பொழுது, செயற்குழுவில் நாத்திகர்கள் இருக்கக் கூடாதென்ற விதியிருந்ததால், டங்கட்டூரி ஸ்ரீராமுலுவும் மற்றொருவரும் தம் உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டனர். இந்தச் சங்கப் பணிகள் தங்கு தடையின்றி நடப்பதற்கென, சிறிதேயெனினும், என் சொத்து முழுவதையும் (சுமார் ரூபாய் 43,500) சங்கத்திற்குக் கொடுத்து விட்டேன். இந்தச் சொத்திற்கான பொறுப்புப் பத்திரத்தை (Deed of Trust) எழுதி, 1908 மே 2 ஆம் தேதி பதிவு செய்தேன். என் வாழ்நாளில் இந்தச் சொத்து, சங்கத்தின் சார்பில், என் பொறுப்பில் இருக்க வேண்டுமென்று மட்டும் பொறுப்புப் பத்திரத்தில் எழுதியிருந்தேன். என் வாழ்நாளில், புத்தக விற்பனையால் வரும் தொகையைத் தவிர சொந்தத்திற்கென்று நான் எதையும் வைத்துக்கொள்ளவில்லை. சென்னையிலிருந்த வீடுகளையும் விற்றுவிட்டு ரொக்கமாய் ரூபாய் 3,000 கொடுத்தேன்.

இதற்கிடையில், எதிர்பாராத விதமாக, வங்காள அரசியல் பெருங்கடலிலிருந்து தேசிய சுயஆட்சி அலையொன்று புறப்பட்டு இந்த நாட்டின் மீது விழுந்து, பிற எல்லா அலுவல்களையும் மூழ்கடித்து விட்டது. வங்கத் தலைவர்களில் ஒருவரான விபின் சந்திர பால் ராஜமகேந்திரவரத்துக்கு வந்து, தேசிய சுயஆட்சி பற்றிச் சில சொற்பொழிவுகள் ஆற்றி, இளைஞர்கள் மாணவர்கள் மனங்களில் ஒரு வகையான உத்வேகத்தையும், நாட்டுப்பற்றையும் வித்திட்டுச் சென்றார். இளைஞர்கள் தாற்காலிக வீராவேசத்தின் காரணமாகத் தலைவிரித்தாடி, ‘ வந்தே மாதரம் ’ என்ற கூக்குரலெழுப்பிக் கொண்டு இஷ்டம் போல் திரியத் தொடங்கினர். கல்லூரி மாணவர்களும் இந்த அல்லோல கல்லோலத்தில் அகப்பட்டு, பாடங்களை வெறுத்து, ஆசிரியர்களைப் புறக்கணிக்கத் தொடங்கியதால், அவர்களில் பலர் கல்லூரியிலிருந்து விரட்டப்பட்டனர்.

அரசியல் விஷயங்களில், எனக்கும், எங்கள் தோட்டத்தில் இருந்த வருக்குமிடையே அடிக்கடி விவாதங்கள் நிகழ்ந்து வந்தன. என்னோடு அவர்கள் ஒத்துப்போவதென்பது சாதாரணமாக நடப்பதில்லை. ஆங்கிலேயரின் ஆட்சி இந்தியாவிற்கு ஏராளமான பயன்கள் விளைவித்துள்ளது என்ற என் வாதத்தைத் தவறென்று கருதி, காருமூரி காமராஜு என்னுடன் பேசுவதையே நிறுத்திவிட்டார். எங்கள் சங்கத்தினரில், எங்கள் தோட்டத்திலிருந்தவர் கருத்தே இப்படியிருக்க, ஏனைய இளைஞர்களின் கருத்தைப்பற்றிச் சொல்ல

வேண்டிய தேவையில்லை. என்னை நாட்டுப்பற்று அற்றவன் என்றும், தம்மோடு தொடர்பு கொள்ள தகுதியற்றவன் என்றும் அவர்கள் கருதி, சமூக விரோதியிடம் நடந்து கொள்வதுபோல் என்னுடன் பழகுவதை நிறுத்தி ஒதுங்கினர்.

அரசியல் விஷயத்தில் எனக்கு அக்கறையே இல்லை என்று சொல்ல முடியாது. நான் 14 ஆண்டுகள் விவேகவர்தனியின் ஆசிரியராக இருந்து, அதில் அரசியல் கட்டுரைகள் பல எழுதியுள்ளேன். 'இந்திய தேசிய மகாசபை' 1887 இல், முதல் முறையாகச் சென்னையில் கூடிய பொழுது நான் ஒரு பேராளனுக அனுப்பப் பட்டேன். சாதி, மத, குல ஆசாரங்களில் சீர்திருத்தம் காணுமல், அரசியல் ஒன்றில் மட்டும் சீர்திருத்தம் வருவதால் நாடு முன்னேறிவிடும் என்ற நினைப்பு எனக்கு எப்போதும் இருந்ததில்லை. நாட்டு முன்னேற்றத்துக்கு எல்லாத் துறைகளிலும் சமமாகப் பணியாற்ற வேண்டுமென்பது என் கருத்து. ஆங்கிலேயரின் ஆட்சி தொடர்ந்திருந்தால்தான் நாடு முன்னேற்றம் அடையும் என்பதில் எனக்கு உறுதியான நம்பிக்கையுண்டு. இதில் எந்தவிதக் குறையுமில்லை என்று சொல்லும் எண்ணம் எனக்கில்லை. ஆங்கிலேயர் ஆட்சியில் குறைகள் மலிந்துள்ளன.

பால் அவர்களின் சொற்பொழிவின் காரணமாகத் தோன்றிய நாட்டுப்பற்று, ஆங்கிலேயர் ஆட்சித் தரப்பில் நல்ல வார்த்தை ஏதேனும் சொல்பவரை நிந்திக்கும் அளவிற்கு வளர்ந்துவிட்டது. ஆங்கிலேய ஆட்சியை நிந்திப்பவன் கல்வியறிவில்லாதவனுயினும், நன்னடத்தையற்றவனுயினும் நாட்டுப்பற்றுமிக்க நாயகனுக விளங்கினுன். பிரார்த்தனைச் சங்கப் பிரமுகர்களில் ஒருவரான நாளமு கிருஷ்ணுராவ், ராஜத்துரோகியும் கொலைகாரனுமான குதீராம் போஸின் புகைப்படத்தைக் கொண்டுவந்து, நகர மன்றத்தில் என் பெயரில் இருந்த படிப்பகத்தில் மாட்டியதோடல்லாமல் யார் சொன்னுலும் அதை எடுக்க மறுத்துவிட்டார். அதை ஆதாரமாகக் கொண்டு என் எதிர் தரப்பினர், ராஜத்துரோகிகள் சங்கத்திற்கு நான் தலைவனென்று, கலெக்டர் முதலான ஐரோப்பியரிடம் சொல்லலாயினர். இந்தப் படம் படிப்பகத்தில் எப்படி மாட்டப்பட்டதென்பதைத் தெரிவிக்குமாறு மாவட்டக் கலெக்டர் எனக்கு எழுதினுர். நாளமு கிருஷ்ணுராவ் அவர்களின் விவேகமின்மையினுல் அந்தப் படம் அங்கு மாட்டப்பட்டு பிறகு அகற்றப்பட்டதென்றும், என் பெயர் தாங்கியுள்ளதே தவிர, அந்தப் படிப்பகத்திற்கும் எனக்கும் எந்த வகைத் தொடர்பும் இல்லையென்றும் நான் அவருக்குப் பதில்

எழுதிவிட்டேன். இப்படி எழுதியதனுல் நாளமு கிருஷ்ணு ராவிற்கு என் மீது அளவு கடந்த சினம் பிறந்தது.

பிரார்த்தனைச் சங்கத்தினரில் சிலர் அப்போது தாம் ஏற்றுக் கொண்ட மதக்கோட்பாடுகளையே மறந்துவிட்டனர். ‘மக்கள் அனைவரும் உடன்பிறந்தவரே’ என்று எண்ணுவது அந்தக் கோட்பாடுகளில் ஒன்று. இந்தக் கோட்பாட்டின் அடிப்படையில் நோக்கும் போது, ஆங்கிலேயர் நம் உடன் பிறந்தாராக இருக்க, நியாய மெனினும் அநியாயமெனினும் அவர்களைப் பரிகசித்துக் கொடுமைப் படுத்தியவனை நாட்டுப்பற்று மிக்க மாபெரும் மனிதன் என்று சங்கத் தினர் கருதுவது மிகவும் வருந்தத் தக்கதாகும்.

1908 ஏப்ரல் 18 ஆம் தேதி, ஆந்திர பரிசுத்த ஆத்திகச் சபையில் நான் இவ்வாறு கூறினேன் : ‘உண்மையான நாட்டுப் பற்றுக்கு மாருகப் பல பேரிடையே ஒருவகைத் தவருன பற்று பரவி வருகிறது. நம் நாட்டில் நிலவும் குறைகளும் நிறைகளாகப் புகழப்பட்டு, பிற நாட்டவரின் நிறைகளும் குறைகளாக இகழப்படும் பழக்கம் பரவி, உண்மையான நாட்டு முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டைப் போடப் படுகின்றது... தவருன பற்று மிக்க வாய்ச்சொல் வீரர்கள் தன்னலத் தியாகம் செய்ய வேண்டிய தேவை வரும்போது கோழைகளாகி மறைந்து விடுவர்... பரிசுத்த ஆத்திக மதச் சார்புள்ளவர்கள் என்று சொல்லிக் கொள்ளும் நாம், எப்போதும் நாட்டுப் பற்று என்ற பெயரையோ, அல்லது வேறு எந்த நல்ல பெயரையோ சொல்லிக் கொண்டு அந்நியர்களை வெறுக்கக் கூடாது.’

இவ்வாறு பேசியதற்காக, அந்தச் சபையிலிருந்த பிராம்மண அனுஷ்டானத்தைக் கைவிட்ட ஒருவர், ‘பயந்தாங்கொள்ளி’ என்று எனக்கு ஒரு புதுப் பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்தார்.

சீர்திருத்தப் பிரியர்கள் பிருந்தாவனிபுரத்தில் விருந்து நடத்த முயற்சித்தனரே தவிர, போகராஜு பட்டாபி சீதாராமய்யா வீட்டில் நடந்த விருந்தில், விருந்தளித்தவரும், முட்னூரி கிருஷ்ணுராவ், ராமாச்சாரியார், பாவகேஸ்வர ராவ், இன்னும் ஒருவரும் ஆகப் பஞ்ச பாண்டவர் போல ஐவர் மட்டுமே என்னுடன் சேர்ந்து சகோதர-இயல்பு விருந்தினைச் சிறப்பித்தனர்.

விதவைத் திருமணம் செய்து கொண்டவரில் ராஜமகேந்திரவரத் தில் இருந்த சிலர், நான் பிராம்மண அனுஷ்டானத்தைக் கைவிட்டதன் காரணமாகத் தாம் பயனும் புகழும் அடைய வேண்டு மென்ற எண்ணம் கொண்டு, அதற்கென ஒரு சூழ்ச்சி செய்தனர். எனக்கு ஒரு பாராட்டு நடத்தும் சாக்கில் விதவைத் திருமணம்

செய்து கொண்டவரைப் பல்வேறு இடங்களிலிருந்து ராஜமகேந்திர வரத்துக்கு வரவழைத்தனர். எல்லாரும் ஒன்றுகூடிய பிறகு, திருமெள்ள வேங்கடசுப்பா ராவும், புல்லாபட்ள கவரய்ய சாஸ்திரியும் முன்னோடிகளாக இருந்து அனைவரிடமும் பேசி, வேறொரு புதிய சங்கத்தை உருவாக்குவதற்கு உடன்படச் செய்தனர்.

அன்றிரவே, பந்தரிலிருந்து வந்து எங்கள் வீட்டில் இறங்கியவர்கள் சாப்பாட்டிற்குச் சென்றபொழுது, எங்கள் வீட்டில் இறங்கிய காரணத்தால் வரக் கூடாதென்று சொல்லி அனுப்பி விட்டனர். என்னைப் பாராட்டுவதற்கென்று சொல்லி நடித்து, அழைக்கப்பட்ட விருந்தினரில் எங்கள் வீட்டில் இறங்கியவர்கள் தம்முடன் சமபந்தி யில் சாப்பிட அருகதையற்றவர்கள் என்று விரட்டப்பட்ட அந்த அவமதிப்பைக் கண்டு எனக்கு அளவுகடந்த கோபம் வந்தது. மறுநாள், அவர்கள் என்னைத் தம் இடையில் அமர்த்திக்கொண்டு புகைப்படம் எடுக்கப் போவதாகச் சொல்லி அழைத்தபோது, என் மனம் கட்டுக்கடங்காமல் போயிற்று. இத்தகையவரோடு சேர்ந்து புகைப்படம் பிடித்துக் கொள்வதையே அவமானமாகக் கருதுவதாக வும், இத்தகையோருடன் சமபந்தியில் உணவருந்துவதைவிடச் சண்டாளருடன் சேர்ந்து சாப்பிடுவதைப் பெரிதும் மதிப்பதாகவும் எல்லார் முன்னுலேயே, முகத்தில் அறைவதுபோல் சொல்லி விட்டேன்.

விதவைத் திருமணச் சங்கத்தை ஏற்படுத்தியதில் எனக்குக் கோப மில்லை. அந்தப் பணிக்கென எத்தனைச் சங்கங்கள் ஏற்பட்டாலும். அத்தனைக்கத்தனைத் திருமணங்கள் நடந்தாலும் எனக்கு மகிழ்ச்சியே. அதற்கு முன்னர் திருமெள்ள வேங்கடசுப்பா ராவும், மற்றொருவரும் வந்து என்னிடம் கேட்டபொழுது, ஹிதகாரிணி சங்கத்தில் சேர வேண்டும் என்றும், விதவைத் திருமணம் செய்துகொண்டவரைக் கொண்டு ஒரு கிளைச் சங்கத்தை அமைத்து, அதன் மூலமாகவே திருமணங்களை நடத்த எண்ணியிருப்பதாகவும் கூறியிருந்தேன். நான் சங்கத்திற்குக் கொடுத்த தொகை முழுவதையும் தம் கையில் வைத்துவிட்டால் ஓர் ஆட்டம் ஆடலாம் என்பதே தவிர, ஹிதகாரிணி சங்கத்தின் ஆதரவில் இருந்து திருமண முயற்சிகளைப் பெருக்கும் எண்ணம் அவர்களுக்கில்லை. எனவே அவர்கள் ஹிதகாரிணி சங்கத்தில் சேரவில்லை. சுதந்திரமாக ஒரு சங்கத்தை ஏற்படுத்தி, சந்தா திரட்டி, அறிக்கைகள் அச்சடித்து, இரண்டாண்டுகள் ஓரளவு சத்தத்தை எழுப்பினர். இப்போது அந்தச் சங்கம் என்ன ஆயிற்றோ, சந்தாப் பணமெல்லாம் என்ன ஆயிற்றோ—தெரியாது. அவர்கள்

இதுவரையில் ஒரு திருமணத்தையேனும் நடத்தவில்லை. எங்கள் விதவை பாதுகாப்பில்லத்திலேயே விதவையர் சேர்ந்து வருகின்றனர். ஆண்டாண்டுதோறும் நான்கோ, ஐந்தோ, ஆறோ திருமணங்கள் நடந்துகொண்டே யுள்ளன.

பள்ளியில் நான்கு ஆசிரியைகளையும், ஓர் ஆசிரியரையும் நியமித்து அதிக அளவு செலவு செய்துவந்தேன். அவ்வாறிருந்தும் பள்ளியால் விளைய வேண்டிய அளவு பயன் விளையாமலிருந்தது. பள்ளியை ஏற்படுத்திய நோக்கம் நிறைவேறவில்லை. எவ்வளவோ இடையூறுகளுக்கிடையே இரண்டு மாணவியர் இரண்டாவது ஃபாரத்திற்கு வந்தனர். அவர்களில் ஒருத்தி கன்னிப்பெண், மற்றொருத்தி இளம் விதவை. முதல் பெண்ணுக்குத் திருமணம் நடந்த பின்னர், மாமனார் பள்ளியிலிருந்து நிறுத்திவிட்டார். இரண்டாவது பெண் உறவினர் பழிக்கின்றனர் என்ற காரணத்தால் நிறுத்தப்பட்டாள். இவர்களை இடைநிலைத் (எட்டாம் வகுப்பு)த் தேர்வுக்கேனும் அனுப்ப வேண்டும் என்று எண்ணியிருந்த எனக்கு ஏமாற்றமே உண்டாயிற்று. இந்தப் பள்ளியைப் படிப்படியாக மகளிர் உயர்நிலைப் பள்ளி ஆக்கவேண்டும் என்ற என் முடிவில் தொடக்கத்திலேயே ஒரு மாற்றம் செய்யவேண்டி வந்தது. இந்தப் பள்ளிக்குச் செலவிடும் தொகையனைத்தும் வீணே என்றும், பருவமடைந்த பெண்களைப் பெற்றோர் படிக்கவைக்க மாட்டார்கள் என்றும் தோன்றியது. தொடக்கக் கல்வி பயிற்றுவதற்கு நகரத்திலேயே அரசினர் பெண்கள் பள்ளிகளும், கிறித்துவச் சங்கப் பெண்கள் பள்ளிகளும் இருக்க, இந்தப் பள்ளி தேவையில்லாமலிருந்தது. எப்போதாவது பெண்கள் உயர்நிலைப் பள்ளி ஏற்படுத்த வேண்டுமெனில், பாதுகாப்பில்லத்திலுள்ள விதவையரையும், அநாதை இல்லத்தில் (orphanage) உள்ள பெண்களையும் கொண்டே நடத்த முடியுமே தவிர, வேறு வழியில் இயலாதென்று உணர்ந்து, அநாதை இல்லத்தையும் உருவாக்க நினைத்தேன். சாதாரணமாக நன்னடத்தையுள்ள ஆசிரியைகள் கிடைப்பது அரிது. எங்கள் பள்ளி ஆசிரியைகளில் சிலர் தகராறு வளர்த்துக்கொண்டு, ஒருவர் வண்டவாளத்தை ஒருவர் வெளிப்படுத்தித் தாள்களில் எழுதி, பள்ளியிலும், தெருச் சுவர்களிலும், விளக்குத் தூண்களிலும் ஒட்டத் தொடங்கினர். அதனால் எங்கள் பள்ளியை, 1908இல் கோடை விடுமுறைக்குப் பின்னர், எங்கள் தோட்டத்தில் ராமசந்திர ராவின் வீட்டில் நடத்தலானேன். தகராறு வளர்த்துக்கொண்ட ஆசிரியைகளை வேலையிலிருந்து நீக்கிவிட்டேன். விதவை பாதுகாப்

பில்லத்தைச் சார்ந்த விதவையரும் இந்த வீட்டில்தான் இருந்தனர். அவர்களுக்குக் கல்வி புகட்டுவதற்கென வயதான ஆசிரியர்களை நியமித்தேன். அநாதைக் குழந்தைகள் இல்லத்தைப் பிட்டாபுரம் ராஜா அமைக்கத் தொடங்கியதால் நான் அந்த முயற்சியைக் கைவிட்டேன்.

நான் சென்னையிலிருந்து திரும்பிவந்த பிறகு என் மனப் புலனில் ஆத்திகப் பள்ளி ஏற்படுத்தும் விதை மீண்டும் முளைவிடத் தொடங்கியது. சிலக்கமர்த்தி லக்ஷ்மீநரசிம்மம் பட்டணத்தில் ஓர் இடைநிலைப் பள்ளியைச் சில ஆண்டுகளாக நடத்திக்கொண்டிருந்தார். நான் அந்தப் பள்ளியை ஹிதகாரிணி சங்கத்திற்குக் கொடுக்குமாறு கேட்கவே, அவர் மகிழ்ச்சியோடு ஒத்துக்கொண்டு, பெஞ்சுகள், படங்கள் முதலான எல்லாச் சாதனங்களோடும், 1907 செப்டம்பர் மாதத்தில் அதை எங்கள் வசம் ஒப்படைத்தார். இனி அதை உயர் நிலைப் பள்ளியாக அமைக்கக் கருதினேன். இந்த விஷயமாகப் பள்ளி மேற்பார்வையாளரான யேட்ஸ் துரையிடமும், அரசினர்க் கல்லூரித் தலைவரான ஹெண்ட்டர் துரையிடமும் பேசி ஒத்துக் கொள்ளுமாறு செய்தேன். பள்ளிக் கட்டடத்தைக் கட்டுவதற்கு 2000 ரூபாய்க்குக் கோட்டை அருகில் ஒரு வீட்டை வாங்கியதுடன், அதன் அக்கம் பக்கத்திலிருந்த வீடுகளையும் விலை பேசினேன்.

எங்கள் பட்டணத்தில் உயர்நிலைப் பள்ளிகள் இரண்டு இருந்தன. ஒன்று கிறித்துவ மதச் சார்புடையது; இரண்டாவது அரசினருடையது. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரித் துணைத் தலைவரான மல்லாதி வேங்கடரத்னம், எங்கள் பள்ளி தம் பள்ளிக்குப் போட்டியாக இருக்குமென அஞ்சி, எங்கள் பள்ளிக்குக் கல்வி மேலதிகாரி ஒப்புதல் அளிக்காதபடிச் செய்ய வேண்டுமென ஹெண்ட்டர் துரையிடம் கூறினார். அரசினர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக்கு ஹெண்ட்டர் துரை தலைவராவார். அதனால், எங்கள் பள்ளியை உயர்நிலைப் பள்ளியாக்க ஒப்புதல் அளிக்குமாறு கல்வி மேலதிகாரிக்கு நாங்கள் விண்ணப்பித்தபோது, ஹெண்ட்டர் துரை எதிர்ப்பாக எழுதவே, அவர்கள் ஒப்புதல் அளிக்காததுடன், பள்ளியின் எதிர்காலம் பற்றியே ஏதேதோ எழுதினர்.

அதன் பிறகு, நான் சென்னைக்குச் சென்று, பள்ளி ஏற்படுத்துவது பற்றிய என் நோக்கத்தை அவருக்குத் தெளிவுபடுத்தினேன். தாம் சுட்டிக்காட்டிய குறைகளைச் சரி செய்துவிட்டால் அடுத்த ஆண்டு ஒப்புதல் அளிப்பதாகக் கூறினர். நான் அந்தப் பள்ளியை, பணம் சம்பாதிக்கும் நோக்கத்துடனும், எனக்கு வேண்டியவருக்கு வேலை

கொடுப்பதற்காகவும் தொடங்கியிருப்பதாகவும், கல்வித் துறையினர் அந்தப் பள்ளிக்கு ஒப்புதல் அளித்தால் மாணவர்கள் வீணுகிப் போவரென்றும் ஹண்டர் துரையிடம் போய் யாராரோ ஏதேதோ சொல்லியிருந்தனர். நான் அவரைக் கண்டு பேசி, அவருக்கு உண்டான தவருன எண்ணங்களை ஓரளவு திருத்திப் பள்ளியை நிர்வகிக்க ஒரு கிளைச் சங்கத்தை ஏற்படுத்துவதாகவும், அதில் அவரும் இருக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டேன். துரையவர்கள் ஓரளவு என் பக்கம் சார்ந்து, கிளைச் சங்கத்தில் இருந்து பணியாற்ற ஒத்துக் கொண்டார். கலைக் கல்லூரித் தலைவர், பள்ளித் துணை மேற்பார்வையாளர், தலைமையாசிரியர், நான், மற்றும் ஹிதகாரிணி சங்கத்தினர் இருவர், காகிநாடா கல்லூரித் தலைவரான வேங்கடரத்னம் நாயுடு ஆகியோரடங்கிய கிளைச் சங்கம் ஒன்றை அமைத்து, வேங்கடரத்னம் நாயுடு வரையறுத்த விதிகளை அவருக்குக் காட்டி, அவருடைய இசைவைப் பெற்ருேம். கல்வி மேலதிகாரி அடுத்த ஆண்டு நான்காவது ஃபாரத்துக்கும், மறு ஆண்டு ஐந்து, ஆறு ஃபாரங்களுக்கும் ஒப்புதல் அளித்து, எங்கள் பள்ளியை முழுமையான உயர்நிலைப் பள்ளியாக்கினர்.

பள்ளிக் கட்டடத்தைப் பற்றி ஒரு சில எழுத வேண்டி உள்ளது. ஆண்டவன் அருளால், பிட்டாபுரம் சம்ஸ்தான அதிபதியான ஸ்ரீராஜா குமார மகீபதி சூர்யராவ் பகதூர், பள்ளிக் கட்டடத்திற்கென முதலில் அறுவதாயிரம் ரூபாய் கொடுப்பதாக மனமுவந்து வாக்களித்தார். இவர் உதவியுடன் நான் வாங்கிய மனையில் பள்ளிக் கட்டடம் கட்ட எண்ணினேன். கட்ட இருக்கும் கட்டடத்தின் திட்டப் படம் ஒன்றை வரைவித்து, பள்ளி மேற்பார்வையாளரான யேட்ஸ் துரையின் ஒப்புதலைப் பெற்ற பின்னர், கல்வி மேலதிகாரிக்கு அனுப்பினேன். அவரும் அதற்கு ஒப்புதல் அளிக்கப் போவதாகவே காணப்பட்டது. இருந்தாலும் புதிய தடையொன்று முளைத்தது.

அந்தக் காலத்தில் 'வந்தே மாதரம்' ஆர்ப்பாட்டம் நாடு முழுவதும் பரவியிருந்தது. ஒன்றும் அறியாத பள்ளி மாணவருக்கும், பாமரருக்கும், ஐரோப்பியர்கள் தெருவில் போகும்போது, 'வந்தே மாதரம்' என்று கோஷமிடுவது ஒரு பொழுதுபோக்கு ஆகிவிட்டது. பிடிக்காதவர் சிலர் எங்கள் பட்டணத்திலிருந்த துணைக் கலெக்டரான பிரெய்ட் ஃபுட் துரையிடம், பள்ளிக் கட்டடத்தை அங்குக் கட்ட அனுமதித்தால், மாணவர்கள் கும்பல்கூடி, ஐரோப்பியரைப் பரிகசிப்பர் என்று சொல்லி அவரை நம்ப வைத்தனர். ஐரோப்பியர் வசிக்கும் இடத்திற்கு அருகாமையில் இருந்ததால் அந்த இடத்தில்

பள்ளியைக் கட்டக் கூடாதென்று அவர் என்னிடம் கூறினர். அந்தத் துரையை அதற்கு முன்பே எங்கள் பள்ளிக் கிளைச்சங்கத்தில் உறுப்பினராக இருக்க வேண்டுமென்று கேட்டிருந்தேன். பள்ளியை அங்குக் கட்டாமலிருந்தால் தாம் உறுப்பினராக இருப்பதாக அவர் கூறினர். அவர் இல்லாமற் போனாலும் சரி, பள்ளியை அங்குக் கட்டுவது தவிர்க்க முடியாது என்று சொல்லிவிட்டேன். துரையவர்கள் இறுதி முயற்சியாக, பள்ளியை அங்குக் கட்டுவதற்கு ஒப்புதல் தரக்கூடாதென்று, மாவட்டக் கலெக்டர் மூலம் கல்வி மேலதிகாரிக்கு எழுதி அனுப்பிவிட்டார். இந்தத் துரை யெழுதிய காரணத்தைச் சொல்லாமல், மாணவர் விளையாடுவதற்குப் போதிய இடமில்லை யென்ற காரணம் காட்டி, அந்த இடத்தில் பள்ளியைக் கட்டுவதற்கு ஒப்புதல் தராமல், வேறு பெரிய விளையாட்டு மைதானம் உள்ள இடத்தில் கட்ட வேண்டுமென்று கல்வி மேலதிகாரி எழுதி விட்டார்.

இப்பொழுது பள்ளிக்கென ஒரு புதிய இடத்தைத் தேடவேண்டிய நிலை வந்தது. இன்னிசுபேட்டையைச் சார்ந்த ஹாக்குமுபேட்டையில் ஆறு ஏக்கர் நிலம் ஒன்று விற்பனைக்கு வந்தது. 1200 ரூபாய்க்கு நான் அந்த நிலத்தை வாங்கினேன். நிலத்தின் நடுவில் இருப்புப் பாதை (railway line) அமைந்திருந்ததால், அதற்கு ஒருபுறமாக இருந்த, ஓர் ஏக்கருக்குச் சற்று அதிகமாக இருந்த இடம்தான் பள்ளி கட்டுவதற்கு உகந்ததாக இருந்தது. இருப்புப் பாதைக்கு மறுபுறமிருந்த நான்கைந்து ஏக்கர் நிலம், இடைவழியில்லாமற் போனதால் விளையாட்டு மைதானமாகப் பயன்படாமல் வீணாகக் கிடந்தது. பிறகு, முதல் நிலத்தைச் சார்ந்திருந்த ஒன்றரை ஏக்கர் நிலத்தை 950 ரூபாய்க்கு வாங்கி அத்துடன் சேர்த்தேன்.

பள்ளிக் கட்டடம் கட்டும் வேலையில் நான் ஒருவனே இறங்கி, செங்கல், சுண்ணாம்பு, கற்கள், மரம் முதலியவற்றை முடிந்தவரையில் மலிவாக வாங்கி வேலையை நடத்தலானேன். முதலில் 20,000 ரூபாயில் கட்டடத்தை முடிக்க வேண்டுமென்று திட்டமிட்டோம் என்றாலும், 40,000 ரூபாய் இல்லாமல் அழகான பெரிய கட்டடம் கட்ட முடியாதென்று தெரிந்தது. எங்கள் ஆசையை நிறைவேற்றுவதற்கெனக் கல்பவிருக்ஷம் போல் பிட்டாபுரம் ராஜா 40,000 ரூபாய் கொடுக்க இசையவே, நாற்பதாயிர ரூபாய்க் கட்டடம் அறுபதாயிர ரூபாய்க் கட்டடமாக உருப்பெற்றது. கடவுள் அருளாலும், ராஜாவின் கருணையாலும் எங்களுடைய இந்தப் பள்ளிக் கட்டடம், பட்டணத்திற்கு ஓர் அணிகலனாக உருவாயிற்றென்று சொல்லலாம். இந்தக்

கட்டடத்தைப் பார்க்க வந்த ஒரு பொறியியல் மேலலுவலர், 'இதைக் கட்டி முடிக்க 1,25,000 ரூபாய் பிடித்ததா?' என்று கேட்டார்.

இந்தப் பள்ளிக் கட்டடத்தின் இரண்டாவது மாடியில் ஆயிரம் பேர் அமரத் தக்க இரண்டு மண்டபங்கள் உள்ளன. இடைவேளையில் மாணவர்கள் ஓய்வெடுக்க ஒரு பெரிய அறை உள்ளது. இந்தப் பள்ளியில் இரு சிறப்புக்கள் உள்ளன. ஒன்று, ஆண்களோடு பெண்களையும் சேர்த்துக் கொண்டு பள்ளியிறுதித் தேர்விற்குப் பயிற்சி தருவதாகும். மாணவர் பள்ளியில் மாணவியரையும் சேர்த்துக் கொள்வது குழப்பங்களைக் கொண்டுவரும் என்று பலர் ஐயப்பட்டனர். அப்படி ஐயப்படுவதற்கு ஓரளவு இடமிருந்தாலும், பெண்களுக்கு மதிப்பு கொடுக்கும் நல்ல பண்பை ஆண்களுக்கு இளமையிலேயே பயிற்றுவிக்கும் எண்ணத்துடன் பெண்களையும் சேர்த்துப் படிக்கவைக்கும் முறையை உருவாக்கினேன். சாதாரணமாக, மாணவியர் மாணவரோடு சேர்ந்து மூன்றாவது ஃபார்ம் வரையில் படிக்கலாம். எங்கள் பள்ளியில் பெண்கள் அனைவருக்கும் இலவசமாகவே படிப்புச் சொல்லித் தந்தோம். இப்படி நாங்கள் காட்டிய வழியைப் பின்பற்றி, காகிநாடா கல்லூரியினரும் பெண்களைச் சேர்த்துக் கொள்ளத் தொடங்கியுள்ளனர்.

எங்கள் பள்ளியில் இரண்டாவது சிறப்பு: ஹரிஜனக் குழந்தைகளையும் சேர்த்துக் கொள்ளுதலாகும். சில ஆண்டுகளாக ஐந்தாறு ஹரிஜன மாணவர் எங்கள் பள்ளியில் உயர் வகுப்புக்களில் படித்து வருகின்றனர். மற்ற மாணவரும் அவர்களிடம் சகோதரத் தன்மை காட்டி வருகின்றனர். மாணவியரைப் போலவே, முதல் ஃபாரத்திலிருந்து மேல் வகுப்புகளில் படிக்கும் ஹரிஜன மாணவரிடமும் சம்பளம் வாங்காமல் இலவசமாகவே பாடம் சொல்லித் தருகிறோம். கிறித்துவப் பள்ளியிலும் கூட கிறித்துவரல்லாத ஹரிஜனக் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்வதில்லை என்று சில நாட்களுக்கு முன்னர் கேள்வியுற்றுப் பெரிதும் வியப்படைந்தேன்.

1911 நவம்பர் 27 ஆம் தேதி பள்ளியின் புதுமனை புகுவிழா மிகவும் கோலாகலமாக நடைபெற்றது. கல்கத்தாவிலிருந்து, நகர்க் கல்லூரித் தலைவரான ஹேரம்ப சந்திர மைத்ர அவர்கள் வந்து, புதுமனை புகு விழாவை நடத்திச் சொற்பொழிவாற்றினர். அன்று மாலை பட்டணத்துப் பிரமுகர்கள் அனைவரும் வந்து மகிழ்ந்தனர். எனக்குத் தெரியாமலே, பிட்டாபுரம் ராஜா கல்வி மேலதிகாரிக்கு எழுதி, 'ஹிதகாரிணி பள்ளி' என்ற பெயரை என் பெயருக்கு மாற்றியதாக அவரிடமிருந்து வந்த தந்தியையும், ராஜா அவர்களின் கடிதத்தையும்

அந்த விழாவில் படித்தனர். காரியம் மிஞ்சிவிட்டதற்கு ஒன்றும் செய்ய முடியாமல் சும்மா இருக்க வேண்டியவனுனேன். மாற்றிய பெயர், காசு செலவிடாத என்னுடையதாக அல்லாமல், எல்லாச் செலவுகளையும் ஏற்றுக்கொண்ட ராஜா அவர்களின் பெயராக இருந்திருந்தால் எனக்கு மிக மிக மகிழ்ச்சியாக இருக்கும். இப்போது அந்தப் பள்ளியில் 500 மாணவர்கள் படித்து வருகின்றனர். அது ஆத்திக உயர்நிலைப் பள்ளி என்று வழங்கப்படுகிறது. ஆத்திகப் பிரார்த்தனையுடன் பள்ளி பணியாற்றத் தொடங்குவது தவிரப் பள்ளியில் இப்பொழுது ஆத்திகப் பயிற்சி ஒன்றும் நடைபெறுவ தில்லை.

விதவை பாதுகாப்பில்லத்தில் சேர்பவர்கள், சாதாரணமாகத் திருமண விருப்புடனே வருவோராதலால், படிப்பில் அவ்வளவு அக்கறை கொள்வதில்லை. அவர்களில் யாருக்கேனும் படிப்புச் சொல்லிக் கொடுத்து, விதவை பாதுகாப்பில்லக் காரியங்களைக் கவனிக்கும் ஆற்றலும் திறமையும் உள்ளவராகத் தயாரிக்க வேண்டு மென்று நான் எவ்வளவோ முயன்று வந்தேன். இவ்வாறிருக்க, என் இளம் பருவத் தோழனுன கணபர்த்தி யோகானந்தத்தின் மகள், சுந்தரம்மா எனும் 16 வயது இளம் விதவை, பாதுகாப்பில்லத்தில் வந்து சேர்ந்தாள். அவள் எங்கள் வீட்டிலேயே இருக்க விரும்பிய தால், அப்படியே வைத்துக்கொண்டு நானும் என் மனைவியும், அவளை எங்கள் மகள் போலவே பார்த்து வந்தோம். அவள் கல்வியில் மிகவும் ஆர்வங்கொண்டு, திருமணத்தைக்கூட ஒதுக்கி விட்டு, விதவை பாதுகாப்பில்லத்தைக் கவனிப்பது போன்ற பொதுத் தொண்டுகளில் காலத்தைக் கடத்தப் போவதாக இளமை உற்சாகத்தோடு சொல்லிக்கொண்டிருந்தாள். நானே அக்கறை எடுத்து அவளுக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுத்து ஓராண்டுக் காலத்தில் ஆங்கிலத்தில் இரண்டாவது ஃபாரத்திற்குத் தகுதி யுள்ளவளாக ஆக்கினேன்.

பாதுகாப்பில்லத்திலிருந்த ஒவ்வொரு விதவைக்கும் சாப்பாட் டுக்கென மாதத்திற்கு ஐந்து ரூபாயும், துணிமணிகள் புத்தகங்கள் முதலானவற்றுக்குத் தனியாகவும் கொடுத்து வந்ததுடன், மருத்துவச் செலவுகளையும் நாங்களே ஏற்றுவந்தோம். விதவை பாதுகாப்பில் லத்தை நிர்வகிப்பதில் பல கஷ்டங்கள் உள்ளன. வரும் விதவையர் பல்வேறு பகுதிகளிலிருந்து வருபவர்; பல்வகைக் குணங்களுடைய வராக இருப்பர்; அவர்களுடைய பழைய நடத்தையைப் பற்றி ஒன்றும் தெரியாது. பொதுவாகப் படிப்பு வாசனையற்றவராக

இருப்பவராதலால் ஒருவரோடு ஒருவர் தகராறு வளர்த்துக்கொள்வர். வந்த அடுத்த நாளிலிருந்து கல்யாணம், கல்யாணம் என்று தொல்லை கொடுப்பர். தகராறுகளின்போது தம் பக்கம் பேசவில்லை யென்று சாப்பிடாமல் கோபித்துக்கொண்டு மூலையில் உட்கார்ந்து விடுவர்.

அனுமாயம்மா என்னும் விதவை, பாதுகாப்பில்லத்தில் வந்து சேர்ந்தாள். அவள் கண்ணில் நோய் கண்டிருந்தது. நாங்கள் அந்த ஆண்டு (1908) பெங்களூர்ப் பயணத்தை நிறுத்திவிட்டு, அவளை அழைத்துக் கொண்டு சென்னைக்குச் சென்று, கண்ணுக்கு வைத்தியம் பார்க்கலானோம். டாக்டர் அவளைக் காற்றிலும், வெய்யி லிலும் அலையவிடக் கூடாது என்று விதித்திருந்தார். ஒரு நாள் அவளை வீட்டில் விட்டுவிட்டு நாங்கள் வெளியே வண்டியில் சென்று வந்தோம். அன்று அவள் அழுத அழுகையும், செய்த அட்ட காசமும் சொல்லி முடியாது. அழுகையால் அவள் கண்கள் வீங்கி, தொடக்க நிலைக்கு வந்துவிட்டன. ஏன் அவளை அழைத்து வந்தோம் என்று நாங்கள் மிகவும் வேதனைப் பட்டோம். அவள் கண்களைச் சரி செய்து, திரும்பி வந்த பின்னர், அவளும் வேறு இருவரும் சேர்ந்து, ஒரு நாள் சமையலை நிறுத்தி, ரொட்டி செய்யத் தொடங்கவே, பாதுகாப்பில்லத்து வேலையைக் கவனித்து வந்த சுந்தரம்மா சோறே வடித்துக் கொள்ளும்படி வற்புறுத்தப் போக, சமையல் செய்யாமல் தகராறு வளர்த்தனர். அந்த மூன்று பேரும் ஒரு நாள், தமக்கு உடனே திருமணம் நடத்தவில்லையென்றால் ஓடிப் போவதாகப் பயமுறுத்தினர். நான் அவர்களை அனுப்பி விடுவதே நல்லதென்று எண்ணினேன். அவளுக்கொரு வரன் விஷயமாகக் கரகபுரத்தி (கரக்பூர்)லிருந்து, தண்டபாணி அவர்கள் எழுதியிருந்த தால், அனுமாயம்மாவை ரெயில் வண்டியிலேற்றி அனுப்விட்டேன். ஏனைய இருவரையும் வேறு இருவருக்குக் கொடுத்துத் திருமணம் முடித்து அனுப்பித் தொலைத்தேன். அவர்கள் அவசரப்படாம லிருந்தால் அவர்களுக்கு அதைவிட நல்ல வரன்கள் கிடைத் திருக்கலாம்.

விதவைத் திருமணம் செய்து கொண்டவர்களில் ஒருவர் பாதுகாப் பில்லத்திற்கு ஒரு விதவையை அனுப்பினார். அந்த விதவை கருவுற் றிருந்ததாக விரைவிலேயே தெரிய வந்தது. நாங்கள் சென்னைக்குச் செல்வதற்கு முன்னர் இத்தகைய விதவை ஒருத்தி எங்கள் வீட்டிற்கு வந்தாள். கர்பமாக இருப்பது தெரியவந்த உடனே, நாங்கள் அவளை எங்கள் வீட்டிலிருந்து அனுப்பிவிட்டோம். அவள் தன் ஊருக்குப்

போகாமல் கருச் சிதைப்பதற்கு மருந்து சாப்பிட்டு இறந்து போனாள். அந்த அகாலமரணச் செய்தி கேட்டு நாங்கள் மிகவும் வருந்தினோம். அதேபோல், இந்த விதவையையும் துரத்தி விட்டால், இவள் கதி என்னவாகுமோ என்று கவலைப்பட்டோம். இத்தகைய விதவையைப் பாதுகாப்பில்லத்தில் வைத்திருப்பது நியாயமல்ல. துரத்திவிடுவது எங்கள் மனத்திற்கு ஒப்பவில்லை.

இத்தகையோருக்கென வழுவிய பெண்டிர் மீட்பில்லம் (Rescue Home) ஒன்றை நிறுவ எண்ணி, அவளை வேறு ஓரிடத்தில் ஓர் அறையில் இருத்திக் காத்து வந்தோம். அவளுக்கு என் மனைவியே பிரசவம் பார்த்தாள். ஆண் குழந்தை பிறந்து இறந்து விட்டது. குண்டூரில், ஏற்கனவே விதவைத் திருமணம் செய்துகொண்டு மனைவியை இழந்திருந்த புரோகிதர் ஒருவருக்கு அவளைக் கொடுத்துத் திருமணம் நடத்தி அனுப்பி வைத்தோம்.

பிறகு இந்த வழுவிய பெண்டிர் மீட்பில்லத்திற்கு ஒரு கோமட்டி (செட்டி) விதவை வந்தாள். இவள் காகிநாடாவில், தன் பிறந்த வீட்டிலிருந்து சில நகைகளை எடுத்துக்கொண்டு, ஒரு பிராம்மண னல்லாதவனுடன் ஓடிவிட்டவள். உறவினர்கள் மாஜிஸ்டிரேட் டிடம் வழக்கைத் தொடரவே, அந்த இருவரையும் குற்றவாளிகள் என்று முடிவு செய்து, அவனுக்கு ஆறு மாதமும், இவளுக்கு நான்கு மாதமும் சிறைத் தண்டனை விதித்தார். இவள் சிறையிலிருந்து வெளிவந்த பின்னர், இவளுடைய சித்தப்பா முதலானவர்கள் இவளை எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்து, என் மனைவியின் கால்களில் விழ வைத்தனர். இனிமேல் நன்னடத்தையோடு இருப்பதாகச் சொன்னதன் பேரில், இந்த விதவையை வழுவிய பெண்டிர் மீட்பில் லத்தில் சேர்த்துக் கொண்டோம். இவள் பெயர் கனகரத்னம். சில மாதங்கள் கடந்த பின்னர், காகிநாடாவிலிருந்து சலாதி கிருஷ்ண மூர்த்தி வந்து கனகரத்னத்தைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொல்லவே, இருவருக்கும் திருமணம் நடத்தி அவர்கள் இருவரையும் பெண்டிர் மீட்பில்லத்திலேயே வைத்திருந்தோம். மேற்சொன்ன இருவரைத் தவிர வேறு நால்வர் இந்தப் பெண்டிர் மீட்பில்லத்தில் வந்து சேர்ந்தனர். அவர்களில் இன்னுமொருத்திக்குத் திருமணம் நடந்தது. மற்றவர் குழந்தைகளைப் பெற்ற பின்னர், சொல்லியும் சொல்லாமலும் ஓடிக்கொண்டிருந்தனர்.

* * *

ஸ்ரீ ராஜமகேந்திரபுர விக்டோரியா ஹிந்து விதவை பாதுகாப்பில் லத்தின் விதிகள் :

1. நம்மில் சில பெண்கள், ஓரளவு கல்வி கற்ற உடனே ஆணவம் கொண்டு, வேலை செய்வது தமக்கு இழுக்கு என்றெண்ணி, சோம்பேறிகளாகிக் கெட்டுப் போகின்றனர். இந்த விதவை பாதுகாப்பில்லத்தில் இத்தகைய தவருன எண்ணத்திற்குச் சிறிதேனும் ஆதரவு காட்டப்படாது. இதில் சேர்ந்தவர்களனைவரும் உழைப்பதற்குப் பழக்கப் படுத்திக்கொள்ள வேண்டும். சமையல் செய்வது, கொண்டு வந்த பொருள்களைப் பத்திரமாகப் பாதுகாப்பது, செலவுகளுக்குக் கணக்கு வைப்பது, சில்லறை வேலைகளைக் கவனிப்பது முதலான கடமைகளை முறை வைத்துக்கொண்டு நிறைவேற்றுவதால் வீட்டுப் பொறுப்புக்களை நிர்வகிக்கும் பயிற்சியைப் பெறுவர். இங்கு இருப்பவர் ஒவ்வொரு நாளும், தத்தம் துணிகளைத் தாமே துவைத்துக் கொள்வதுடன் அவரவர் படுக்கைகளை அவரவரே போட்டுக்கொண்டு காலையில் சுருட்டிவைக்க வேண்டும்.

2. யாருக்கேனும் நோய் கண்டால் மருத்துவம் பார்க்க வைத்தியர் ஏற்பாடு செய்யப் படுவார் என்ருலும், இங்குள்ள விதவையரே பணிவிடைகளும், பத்தியச் சாப்பாடு முதலியவற்றையும் முறை வைத்துக் கொண்டு கவனிக்க வேண்டும்.

3. ஏழை இளம் விதவையருக்கு இலவசமாகச் சாப்பாடு, துணிமணிகள், புத்தகங்கள் முதலானவை வழங்கப்பட்டு, கல்வி கற்பிக்கப் படும். ஆறு மாதங்களுக்கொருமுறை ஈரிரண்டு உடைகள் கொடுக்கப் படும்.

4. யாரேனும், பிற பெண்களுடன் வம்பு பிடித்துக்கொண்டிருந்தாலும், விதிகளை மீறி நடந்து வந்தாலும், பாடங்களைப் படிப்பதில் அக்கறை காட்டாமலிருந்தாலும் பாதுகாப்பில்லத்திலிருந்து வெளியேற்றப்படுவர்.

* * *

முழுகுட்ள அச்சுதராமய்யா அன்போடு கட்டிக் கொடுத்த புதிய விதவை பாதுகாப்பில்லத்தின் புதுமனை புகுவிழா 1908 நவம்பர் 15 ஆம் நாள் நடைபெற்றது.

1908 இல் அரசினர் என்னைக் கோதாவரி மாவட்டத்தின் திருமணப் பதிவாளராக (Registrar of Marriages) நியமித்தனர். என் முன்னிலையில் நடக்க இருந்த முதல் திருமணம் காமராஜு ஹநுமந்த ராவின் திருமணமாகும். நான் மகளைப் போல் பாவித்து வந்த கனபர்த்தி சுந்தரம்மா, தானும் பிராம்ம சமாஜத்தில் சேர்ந்து என்னுடன் பணியாற்றுவதற்கும், பிராம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஒருவரைத் திருமணம் செய்து கொள்ளவும் விருப்பம் தெரிவித்தாள்.

சுந்தரம்மாவுக்கும் ஹநுமந்தராவுக்கும் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. இந்தத் திருமணத்துடன், புலவர்த்தி வேங்கட சுப்பராவின் திருமணத்தையும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. எல்லா ஏற்பாடு களும் முடிந்த பின்னர், ஹநுமந்த ராவ், திருமண நாளன்று ஆண் பெண்டிர் அனைவரும் ஹரிஜனங்களோடு ஒன்றாக விருந்து சாப்பிட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். அதற்கு என் மனைவி முதலானவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. பெண்களைத் தனிப் பந்தி யாக விட்டுவிட வேண்டும் என்றும், மற்றொரு நாள் அனைவரும் ஹரிஜனங்களோடு கலந்து விருந்து சாப்பிடலா மென்றும் நான் பல வகைகளில் சொல்லியும் அவர் என் பேச்சைக் கேட்கவில்லை. அதனால் முடிவு செய்யப்பட்ட திருமணம் அப்போதைக்கு நிற்க வேண்டியதாயிற்று.

இத்தகைய சூழ்நிலையில் 1908 அக்டோபர் 18 ஆம் தேதி நடக்க வேண்டிய இத் திருமணம் தடைப்பட்டு, புலவர்த்தி வேங்கட சுப்பா ராவின் திருமணம் ஒன்று மட்டுமே நடந்தேறியது. பிட்டாபுரம் ராஜா அனுப்பிய மோதிரம், கடிகாரம் முதலான அன்பளிப்புகள் அவருக்கு மட்டுமே வழங்கப்பட்டன. ஹநுமந்த ராவ் தேசிய சுய ஆட்சிக் கட்சியால் ஆட்கொள்ளப்பட்டு, விதவை பாதுகாப் பில்லத்தில் தம் ஆசிரியர் பதவியைத் துறந்து, பிருந்தாவனபுரத்தை அடைந்து, அங்குப் பணியாற்றத் தொடங்கினர். பிறகு ஹநுமந்த ராவ் தம் பழைய பிடிவாதத்தைத் தளர்த்தி, அரசியல் ஈடுபாடுகளை விட்டுவிட்டு, சமூகத் தார்மிக விஷயத்திலேயே பணியாற்றுவதற்கு ஒப்புக்கொண்டு ராஜமகேந்திரவரம் மீண்டும் வந்தார். சுந்தரம்மா, ஹநுமந்த ராவ் ஆகிய இருவருக்கும், 1909 ஜூலை 25 ஆம் தேதி திருமணம் நடைபெற்றது. திருமணத்திற்குப் பின்னர் சுந்தரம்மா விதவை பாதுகாப்பில்லத்தின் மேற்பார்வையாளராகவும், ஹநுமந்த ராவ் ஹிதகாரிணி சங்கத்தின் துணைச் செயலாளராகவும் நியமிக்கப் பட்டனர். இருவரும் சேர்ந்து ரூபாய் 25 ஊதியம் பெற்றுக்கொண்டு பணியாற்றி வந்தனர்.

1907இல் ஒரு நாள் இரவு மயக்கம் வந்து விழுந்து தேறிய பிறகு, நான் மெலிவடைந்து, நோய்வாய்ப்பட்டிருந்தேன். அந்தச் சமயத்தில் இங்குப் பண்டித சிவநாத சாஸ்திரியார் வந்தார். கல்கத்தா பார்க்க ஆசை இருந்ததால், நானும் என் மனைவியும் சிவ நாத சாஸ்திரியாருடன் ஏப்ரல் 4ஆம் தேதி கல்கத்தாவுக்குப் புறப்பட் டோம். வழியில் புவனேசுவரத்தில் தங்கி அங்குள்ள கோயில் களையும், அருகிலுள்ள பௌத்த குகை மண்டபங்களையும் பார்த்து

விட்டு, கல்கத்தா அடைந்து அங்குச் சில நாட்கள் சிவநாத சாஸ்திரி யாரின் விருந்தினராக இருந்தோம்.

ஏற்கனவே என் பெயர் கல்கத்தாவில் சிறப்பாகப் பரவியிருந்த தால், சாதாரண பிராம்ம சமாஜத்தினர் மட்டு மல்லாமல், ஆதி பிராம்ம சமாஜத்தினரும், நவவிதான் சமாஜத்தினரும் என்னைச் சிறப்பித்து அன்புடன் வரவேற்றனர். நான் அங்கு ஓரிருவார காலம் இருந்து, பார்க்க வேண்டியவற்றை யெல்லாம் பார்த்து நலமாக ராஜ மகேந்திரவரம் மீண்டேன். இந்தப் பயணம் எனக்கு ஓரளவு நலம் பயத்தது.

அந்த ஆண்டு, கோடையில் முதன் முறையாக நான் பெங்களூர் சென்றேன். மைசூரிலிருந்து வெளியான செய்தித்தாள்கள் அனைத்தும் என்னைப் பாராட்டிக் கட்டுரைகள் வெளியிட்டன. பெங்களூரிலிருந்த முன்னேற்றச் சங்கம் (Progressive Union) எனக்கு ஒரு வரவேற்பளித்துச் சிறப்பித்தது. அங்குச் சில நாட்கள் இருந்து விட்டு மைசூருக்குச் சென்றேன். அங்கு மகாராணி கல்லூரியில் எனக்கு ஒரு வரவேற்புக் கூட்டம் நடத்திச் சிறப்பித்தனர். சிவ சமுத்திரம் சென்று காவேரி நீர்வீழ்ச்சியையும், அதைக் கொண்டு மின் சக்தியை உண்டாக்கும் அமைப்பையும் பார்த்தோம். கோலாருக்குச் சென்று தங்கச் சுரங்கங்களில் வேலை செய்யும் முறை யையும் பார்த்தோம். பார்க்க வேண்டிய சிறப்பான இடங்களையெல் லாம் பார்த்துவிட்டு, மீண்டும் பெங்களூர் போய்ச் சேர்ந்தோம். அந்த நகரமக்கள் கூட்டம் கூட்டி, நான்கு மொழிகளில் எனக்கு வரவேற்பிதழ்களைப் படித்தளித்தனர். ஜூன் 15ஆம் நாள் அளித்த ஆங்கில வரவேற்பிதழ் :

'தங்கள் எழுத்துக்களும், வாழ்க்கையும் எங்களிடையே தூண்டி விட்ட பெருமதிப்பையும், வியப்பையும் வெளியிடுவதில் பெங்களூர் வாழ் மக்களாகிய நாங்கள் பெருமகிழ்ச்சி யடைகின்றோம்.

'தற்காலத் தெலுங்கு இலக்கியத்தை உருவாக்கி வளப்படுத்திய பெருமை தங்களைச் சாரும். தங்கள் படைப்புக்கள் இந்தியாவெங்கும் பரவியுள்ள பெருவாரியான தெலுங்கு மக்களை ஊக்குவித்துவரும் தனிப்பெரும் சிறப்புடையனவாகும்.

'சமூகச் சீர்திருத்தத் துறையில் தங்கள் இடையறா உழைப்பைப் பார்க்கின், மனப்பூர்வமான நம்பிக்கைகளில் தளராத உறுதி பூண்டு, மற்றவர் உபதேசம் செய்யும் அளவில் நிற்கத் தாங்கள் மட்டும் துணிந்து செயலாற்றும் தனிப்பெரும் மனிதர்களில் தாங்கள் ஒருவர் என்பது வெள்ளிடை மலையாகும்.

'பிறரைப் பணியாற்றத் தூண்டுவோர் இந்த உலகில் மிகப் பலராவர். ஆனால், தங்களைப் போல், அமைதியுடன், பொறுமையுடன், தன்னலம் பேணாச் சிந்தையுடனும் கடமைகளை நிறைவேற்றிப் பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவர் மிக மிகச் சிலரேயாவர்...'

நான் வெகு விரைவிலேயே ஒரு விதவைத் திருமணம் நடத்துவதற்காகப் பரம்புரம் சென்றேன். அந்த நகரமக்கள், 1907 ஜூலை 7 ஆம் நாள் வரவேற்பளித்து இதழை வழங்கினர். 1908 இல் நான் சென்ற பொழுது பந்தர் நகரமக்கள் என்னை வரவேற்றுப் பாராட்டிதழை அளித்தனர். இதே முறையில் நான் பாபட முதலிய இடங்களுக்குச் சென்றபோது என்னை வரவேற்று இதழ்களைப் படித்தளித்தனர். வசைமாரி பெய்து கல்லெறிந்த காலம்போய், இப்போது புகழ்மாலை சூட்டிப் பூமாலை அணிவிக்கும் காலம் வந்தது. இருந்தாலும் எனக்கு அந்தப் பழைய காலமே மகிழ்ச்சி நிறைந்ததாக இருந்தது. எதிர்த் தரப்பினர் திட்டத் திட்ட, வேகமும் வீராவேசமும் பெருகி, அதிகமான பிடிவாதத்துடனும், ஆர்வத்துடனும் பணியாற்ற முடிந்தது.

சென்னை இராஜதானி ஆளுனரான லாலி துரையவர்கள் 1909இல் ராஜமகேந்திரவரம் வந்தபோது எனக்குப் பேட்டியளித்து, என்னுடன் நீண்ட நேரம் அன்போடு அளவளாவிவிட்டு, தாம் வந்து எங்கள் விதவைப் பாதுகாப்பில்லத்தைப் பார்வையிடுவதாகக் கூறினார். அங்கு வருவதற்குச் சரியான பாதை இல்லையென்று சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்த்தேன். ஆனால், அவர் விடாமல், வண்டி வருவதற்கு வழியில்லை என்றால் தாம் நடந்தே வருவதாகக் கூறினார். அதற்குப் பிறகு நான் வீட்டுக்கு வந்து, இடையில் ஒரு ஞாயிற்றுக்கிழமை இருக்கவே, உடனே 40 கூலியாட்களை அமர்த்தி இரவு பகலாக வேலை செய்யச் சொல்லி, திங்கட்கிழமை விடிவதற்குள் ஒரு வழியாக வண்டி வருவதற்கேற்ற பாதையைப் போடச் செய்தேன். அவர் அன்று காலை 7 மணிக்கு எழுந்தருளி, விதவை பாதுகாப்பில்லத்தைப் பார்வையிட்டு மகிழ்ந்து சென்றார்.

1908 ஏப்ரல் 14 ஆம் தேதி எனக்கு அறுபதாண்டுகள் நிறைவெய்தின. என் மனைவியின் தூண்டுதலின் பேரில் நான் மணிவிழாவை நடத்தும் முயற்சியில் ஈடுபட்டு, நண்பர்களுக்கு அழைப்பிதழை அனுப்பினேன். தொலைவிடங்களிலிருந்து நண்பர்கள் பலரும், விதவைத் திருமணம் செய்து கொண்டவர்களும் வருகை தந்து என்னைச் சிறப்பித்தனர். அன்றைய விழா மிகவும் வெற்றிச் சிறப்புடன் நடந்தேறியது.

1909 ஆம் ஆண்டுக் கோடையில், நான் பெங்களூர் செல்லக் கருதி, என் மனைவியையும், சுந்தரம்மா, ஜானகம்மா ஆகிய இருவரையும் உடனழைத்துக் கொண்டு, வழியில் சென்னையில் சமர்த்தி ரங்கய்ய செட்டி அவர்கள் வீட்டில் தங்கினேன். இந்த ரங்கய்ய செட்டி, நான் சென்னையில் இருந்த காலத்தில், நான் கேளாமலே, விதவை பாதுகாப்பில்லத்தின் செலவுகளுக்கென மாதம் பத்து ரூபாய் வீதம் அனுப்பி வந்தார். பின்னர் நான் அவரை ஒருமுறைச் சந்தித்தபொழுது, மாதந்தோறும் பத்து ரூபாய் அனுப்புவதைவிட ஒரு நிலையான ஏற்பாட்டைச் செய்வது பயனுள்ளதாக இருக்குமென்று சொன்னேன். அவர் ஹிதகாரிணி சங்கத்தின் பேரில் ஆயிரம் ரூபாய் எழுதிவைத்து என் கோரிக்கையை நிறைவேற்றினார். அவரை இவ்வாறு செய்யுமாறு நான் கேட்டுக் கொண்டபொழுது என் நண்பரின் முடிவு அவ்வளவு விரைவில் நெருங்கும் என்று எண்ணவேயில்லை. கிருஷ்ணா மாவட்டத்திற்குச் சென்று திரும்பி வரும்போது, ஜூன் 19ஆம் தேதி நிகழ்ந்த மாபெரும் ரெயில் விபத்தில் என் நண்பர் அகால மரணமடைந்தார்.

ராஜமகேந்திரவரத்தில் விதவை பாதுகாப்பில்லம் முதலியவற்றுக்காக எனக்குக் கடன் பெருகிக் கொண்டிருந்தது. ஹிதகாரிணி சங்க உறுப்பினர் சந்தாவும், திரட்டப்பட்ட சந்தாவும் பணியாட்களின் சம்பளத்திற்கே போந்தும் போதாமலுமிருந்தன. வீட்டு வாடகை முதலானவற்றின் மூலமாக வந்ததைத் தவிர எஞ்சியதையெல்லாம் நானே ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. நான் ஹிதகாரிணி சங்கத்திற்குக் கொடுத்த ரொக்கத்தில் 3,500 ரூபாய் என்னிடம் மிச்சம் இருந்தது. அதுவும் செலவாகித் தீர்ந்து போயிற்று.

இந்த நிலையில் சங்கத்தினர் அனைவருக்கும் சந்தா திரட்ட வேண்டுமென்ற வேட்கை பிறந்தது. எனவே அவர்கள் பண உதவி கோரி, ஆங்கிலத்தில் ஒரு வேண்டுகோளை எழுதி அச்சடித்து என்னிடம் கொடுத்தனர். மேலும் சுற்றுப் பயணம் மேற்கொண்டு சந்தா திரட்டக் கூடியவர் தேவைப்பட்டனர். துணைச் செயலாளரான ஹநுமந்த ராவை உடனழைத்துக்கொண்டு, குடும்பத்துடன் நான் பம்பாய் சென்று சந்தா திரட்ட வேண்டுமென்று ஹிதகாரிணி சங்கத்தினர் முடிவு செய்தனர்.

நாங்கள் மறுநாள் சிகந்தராபாத் சென்று, அன்று அங்குத் தங்கலானோம். அங்கு டாக்டர் ஜீ. நாயுடு, நான் ஏற்றுச் செல்லும் பணியை அறிந்து, முதற் சந்தாவாக 15 ரூபாய் என்னிடம் கொடுத்தார். நான் அவர்கள் வீட்டுக்குச் சென்றபோது, கவியரசியான

சரோஜினி நாயுடு உடல்நலம் குன்றிப் படுத்த படுக்கையாக இருந்தார். அவர் தம் குழந்தைகளை அழைத்து, ‘உங்க தாத்தா வந்திருக்கிறார், பாருங்க’ என்று என்னைச் சுட்டிக் காட்டினார். அவர்கள் திருமணத்தை நான் சென்னையில் நடத்தியிருந்ததால் அவர் என்னை அவ்வாறு குறிப்பிட்டார். சரோஜினி தேவியாரின் தந்தை தம் மகள் திருமணத்தை என் வீட்டிலேயே நடத்த வேண்டுமென்று என்னைக் கேட்டுக் கொண்டார். ஆனால், நான் அவ்வாறு செய்யாமல் சங்க மண்டபத்தில் நடத்தி வைத்தேன்.

சிகந்தராபாதில் ஒருநாள் தங்கிவிட்டு, மறுநாள் காலையில் புறப்பட்டுப் பம்பாய்க்குச் சென்றோம். அங்கு, என் நண்பரும், ஹிந்து சமூகச் சீர்திருத்தப் பத்திரிகையின் ஆசிரியருமான நடராஜய்யர் எங்களைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்த படித்தவர், சீர்திருத்தவாதிகள், பிரார்த்தனைச் சமாஜத்தினர் ஆகியோரிடையே என் பெயர் பிரபலமடைந்திருந்ததால் அந்த நகரத்தவரும் எனக்கு வரவேற்பளித்துச் சிறப்பித்தனர். நீதிபதி சந்திரவார்க்கர் அந்தக் கூட்டத்தில் என்னைப் பாராட்டிப் பேசினார். என் மாணவராகிய கண்டீடி லக்ஷ்மி நரசிம்மமும், நண்பரான கணேச நாராயண சந்திரவார்க்கரும் எனக்கு விருந்தளித்தனர்.

நான் விருந்துகளுக்காக அல்லாமல் சந்தா நிமித்தமாகச் சென்றவனாதலால், மற்றும் சில நண்பர்கள் விருந்துக்கழைத்தபொழுது போகாமல், நண்பர்கள் உதவியுடன் சந்தா திரட்டத் தொடங்கினேன். நான் அங்கிருந்த ஒரு வார நாட்களில் 900 ரூபாய் சந்தா சேர்த்தேன். இந்த விஷயத்தில் ‘ஆந்திர பத்திரிகா’ ஆசிரியரான காசீநாதுல நாகேசுவரராவ் பந்துலு, மற்றும் நடராஜய்யரும் எனக்கு மிகவும் துணைபுரிந்தனர். அவர்கள் ஆற்றிய உதவியை நான் என்றும் மறக்க இயலாது. நான் அங்கிருக்கும்போதே, அது வரையில் புனா விதவை பாதுகாப்பில்லத்திலிருந்த இரண்டு விதவையரைப் புனாவிலிருந்து ராஜமகேந்திரவரத்துக்கு அனுப்பி வைத்து, நானும் என் மனைவியும் புனாவில் தங்கலானோம். நாங்கள் அங்குத் தங்கிய இரண்டு நாட்களும் புனா விதவை பாதுகாப்பில்லத் துவக்குநரும், என் நண்பருமான கர்வே பண்டிதரின் விருந்தினராக இருந்து, ஒரு நாள் அந்த விதவை பாதுகாப்பில்லத்திலேயே தங்கி, அதன் நடைமுறைகள் பலவற்றையும் அறிந்தோம்.

என் நண்பரான கோலாசலமு வெங்கடராவ் என்னைப் பல்லாரிக்கு வரவேண்டும் என்று அழைத்திருந்ததால், புனாவிலிருந்து நானும் என் மனைவியும் பல்லாரிக்குச் சென்றோம். அவர் எங்களைத் தம்

வீட்டிலேயே தங்கவைத்து, பயணச் செலவுகள் நிமித்தம் 100 ரூபாய் கொடுத்ததுடன், ஹிதகாரிணி சங்கத்திற்கு முன்பு கொடுத்திருந்த 3,000 ரூபாய் பங்குகளைத் (shares) தவிர, சபாபதித் தொழிலகத்தில் மேலும் இரண்டாயிர ரூபாய் பங்குகளையும் அளித்துதவினர். பிறகு நானும் என் மனைவியும் அவரிடமிருந்து விடைபெற்றுக் குண்டகல் வழியாக ராஜமகேந்திரவரம் வந்து சேர்ந்தோம். அதன் பின்னர் நான் காகிநாடா சென்று, அங்கு 1,332 ரூபாய் அளவில் சந்தா திரட்டினேன். இவ்வாறு திரட்டிய தொகையைக் கொண்டு ஹிதகாரிணி சங்கத்திற்கான கடனை ஓரளவு தீர்த்தோம்.

1910 கோடையில் நாங்கள் மீண்டும் பெங்களூருக்குச் சென்றோம். இந்த முறை எங்களுடன் நியாபதி ஜானகம்மாவையும், காமிராஜு கட்ட மங்கம்மாவையும் அழைத்துச் சென்றோம். இம்முறை நாங்கள் அங்கு எங்கள் சொந்த வீட்டிலேயே இறங்கினோம். நாங்கள் செல்வதற்குள் என் நண்பர்கள் வீட்டைக் கட்டி, வசிப்பதற்கேற்ற வகையில் முடித்திருந்தனர். எங்கள் உடல்நலம் சிறப்பதற்கு அந்த இடம் மிகவும் துணைபுரிந்ததால், ஆண்டில் ஆறு மாதங்கள் அந்த வீட்டில் தங்கி அனுபவிக்க வேண்டுமென்று என் மனைவி முடிவு தெரிவித்தாள். நானும் ஒத்துக்கொண்டேன்.

இந்த முறை, நாங்கள் உடனழைத்து வந்த நியாபதி ஜனகம்மா வுக்குத் திருமணம் நடத்தி வைத்தோம். இது பெங்களூரில் நடை பெற்ற முதல் விதவைத் திருமணமாகும். விதவைத் திருமணச் சட்டம் மைசூர் இராச்சியத்தில் அமலில் இல்லை. எனவே, நாங்கள் இத் திருமணத்தை ஆங்கிலேய ஆட்சிக்குட்பட்ட தண்டுபட்டில் நடத்த வேண்டியதாயிற்று. இந்த வகைத் திருமணம் அங்குப் புதுமையானதால் பெங்களூரிலிருந்த பெருமக்கள் திரண்டுவந்து, தாம்பூலம் முதலியவற்றை ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து சென்றனர்.

எங்களுடன் வந்த மங்கம்மா விதவை பாதுகாப்பில்லத்திலிருந்த அனைவரிலும் என் மனைவிக்கு மிகவும் பிடித்தமானவள். அவளும் என் மனைவியைத் தாய் போலப் பாவித்தாள். அவள் பாதுகாப் பில்லத்திலேயே இருந்தாலும், அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து, என் மனைவிக்குத் தேவையான பணிவிடைகளைச் செய்து வந்தாள். 'நம்ம மங்கம்மாவுக்குக் கல்யாணம் பண்ணி அனுப்பிச்சிடாதீங்க; கல்யாணம் பண்ணி நம்ம கிட்டெயே வச்சுக்குவோம்' என்று என் மனைவி என்னிடம் பலமுறை சொல்லியிருக்கிறள்.

# 4. தளர் நிலை:
## 1910 முதல் 1913 வரை

1910 ஆம் ஆண்டில் பெங்களூரிலிருந்து மீண்டுவந்து இரண்டு மாதங்கள் முடிவதற்கு முன்பே எதிர்பாராத முறையில் கோர விபத்து ஒன்று நிகழ்ந்து என்னை இந்த உலகத்தில் ஆதரவற்றவனாக ஆக்கிவிட்டது.

பெங்களூரிலிருந்து என் மனைவி இங்கு ராஜமகேந்திரவரத்துக்கு முழுமையான உடல்நலத்துடன் வந்தாள். பின்னரும் நோய்க்கான அறிகுறி ஒன்றும் தென்படவில்லை. ஆகஸ்ட்டு 11 ஆம் நாள் காலையிலும் மாலையிலும், தானே சுயமாகச் சமைத்துப் படைத்தாள். இரண்டு நாட்களுக்கு முன்னர் எங்கள் பசு ஒன்று கன்று பெற்றிருக்க, முந்திய நாளைப் போலவே அன்றும் திரட்டுப்பால் செய்து எனக்குக் கொஞ்சம் கொடுத்து, பிறருக்கும் கொடுத்து, தானும் கொஞ்சம் எடுத்துக்கொண்டாள். நான் உண்டு முடித்து மாடிக்குப் போன பிறகு வீட்டு வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு, பசுக்களுக்கு வைக்கோல் போட்டுவிட்டு, இரவு பத்து மணிக்கு மாடிக்கு வந்து, வெராந்தாவிலிருந்த கட்டிலில் படுத்துத் தூங்கினாள். என் மனைவி மாடிக்கு வருவதற்கு முன்னரே நான் தூங்கிவிட்டேன்.

விடியற்காலை நான்கு மணிக்கு என் மனைவி எழுந்திருந்து, ஒரு மணி நேரம் என்னிடம் பேசிக்கொண்டிருந்துவிட்டு, ஐந்து மணிக்குக் கடவுள் பிரார்த்தனை செய்துவிட்டு, கீழே இறங்கிப் போவது வழக்கம். நான் அன்று இரவு மூன்று மணிக்கு முன்னரே எழுந்து கீழே இறங்கிச் சென்றேன். நான் கதவு திறக்கும் சத்தம் கேட்ட உடனே, 'கீழே போறீங்களா? விளக்கு இருக்குதா? சாக்கிரதையாப் பாத்துப் போங்க' என்று அவள் குரல் கொடுப்பது வழக்கமானாலும் அன்று அப்படி ஒன்றும் கேட்கவில்லை. நான் கீழே சென்று திரும்பி வந்து, என் மனைவியின் கட்டிலருகில் சென்று மெதுவான குரலில், 'தூங்கறியா?' என்று கேட்டேன். ஒன்றும் பதில் வராமல் போகவே நான் சென்று என் கட்டிலில் விழித்துக் கொண்டே படுத்திருந்தேன். கடிகாரம் நான்கு அடித்தது. நான் அப்பொழுது என் கட்டிலிலிருந்து எழுந்து என் மனைவி கட்டிலருகில்

நின்றுகொண்டு, 'இன்னும் முழிப்பு வரல்லியா ?' என்று கேட்டேன். பதில் வரவில்லை. தூக்கத்தைக் கெடுக்க விருப்பமில்லாததால் எழுப்பாமல், சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். கடிகாரம் ஐந்து அடித்தது. என் மனைவி அப்பொழுதும் எழுந்து வரவில்லை. நான் போய் அழைத்தும் பதில் கொடுக்காமலிருக்கவே, மேலே கையை வைத்துத் தட்டி எழுப்பலானேன். உடல் சில்லென்று பட்டதுடன், எழுந்திருக்காமலிருக்கவே ஒன்றும் தோன்ருமல், எப்படியோ படியிறங்கிச் சென்று, டாக்டரை அழைத்து வருவதற்கென விதவை பாதுகாப்பில்லத்தில் குடியிருக்கும் திலவர்த்தி சுப்பாராவை எழுப்பி, 'எனக்குக் கையும் காலும் ஓடலே. நீ ஓடிப் போய் பக்கத்துத் தோட்டத்திலே இருக்கற டாக்டரை எழுப்பு' என்று சொல்லி அனுப்பிப் பின் தொடர்ந்தேன். நான் போய்ச் சேர்வதற்குள் டாக்டர் எழுந்து வெளியே வந்தார். 'என் மனைவி மயக்கமாகக் கிடக்கிருள், உடனே வரணும்' என்று சொல்லவே அவர் மருந்து புட்டிகள் முதலியவற்றை எடுத்துக்கொண்டு என் பின்ஞலேயே வந்தார்.

அவர் என்னுடன் படியேறி மாடிக்கு வந்து என் மனைவியைச் சோதித்துவிட்டு, 'உயிர் பிரிந்துவிட்டது' என்று மெதுவான குரலில் சொன்ஞர். நான் அவர் பேச்சை நம்பாமல், நன்ருகப் பரிசோதிக்கச் சொன்னேன். 'உயிர் பிரிந்து மூன்று நான்கு மணி ஆகியிருக்கும்' என்று சொல்லிவிட்டு அவர் எழுந்தார். வாயிற்படியருகில் நின்று, 'தைரியமா இருங்க' என்று எனக்கு அவர் ஆறுதல் சொல்லி விட்டுப் படியிறங்கிச் சென்ருர். நான் சுவர்மீது சார்ந்திருக்க, தலை கிறுகிறுப்புடன் கால் நடுக்கம் கொண்டு அப்படியே தரையில் உட்கார்ந்து கண்ணை மூடிக்கொண்டு, 'கடவுளே! வயசான காலத்திலே எனக்கு இப்படியொரு சோதனையா?' என்று சொன்னேன். அவ்வாறு சொன்னபொழுது, 'ஐயா, வருத்தப்படாதே. இது உங்கள் இருவர் நன்மைக்காக நடந்ததே' என்ற சொற்கள் எனக்குத் தெளிவாகக் கேட்டன. கீழேயிருந்து எனக்கு யாரோ ஆறுதல் சொல்கிருர்கள் என்று நினைத்துக் கண் திறந்து பார்த்தேன். எங்கேயும் யாரையும் காணவில்லை. இதெல்லாம் என் பிரமையாகவே இருக்கலாம் என்ருலும் எனக்கு மட்டும் அது கடவுளின் அருள்வாக்கென்றே உறுதியாகப்பட்டது. அதுவரையில் எனக்கிருந்த கவலையெல்லாம் உடனே மறைந்து, என் மனம் தெளிவுபட்டுக் கவலையற்றதாகிவிட்டது.

நான் எழுந்து என் மனைவியிடம் சென்று பார்க்க, ஜீவகளை ஒன்றும் மறையாமல் சுகமாகப் படுத்துத் தூங்குவது போலவே என் கண்ணுக்குத் தென்பட்டது படுக்கை, போர்வை அப்படியே இருக்க, தலையில் வைத்த ரோஜா மலர் வாடாமல், கட்டிய புடவை கலையாமல் இருப்பதைப் பார்க்க என் மனைவி எந்தவிதத் தொல்லையும் படாமல், கைகால்கள் உதைத்துக் கொள்ளாமல், முனகலுமில்லாமல், இரவு ஒரு மணிக்கோ, இரண்டு மணிக்கோ தூக்கத்திலேயே உயிர் துறந்தாள் என்பது தெளிவாயிற்று.

என் மனைவியின் மரணச் செய்தி பட்டணத்தில் பரவவே, மக்கள் திரண்டு எங்கள் தோட்டத்திற்கு வரத் தொடங்கினர். வந்தவர் களில் சிலர் தம் குடும்பத்தில் யாரோ ஒருவர் போய்விட்டதுபோல் தேம்பித் தேம்பி அழலாயினர். ஆறுதல் சொல்லி என்னைத் தேற்ற வந்தவர்களில் சிலர் என்னைப் பார்த்ததும் 'ஓ' என அழத் தொடங் கவே நான் அவர்கள் அழுகையை நிறுத்த வேண்டியதாயிற்று. நான் மேலுக்கு எவ்வளவு தைரியத்துடன் காட்சியளித்தாலும் துன்பக் கனல் தாங்க முடியாமற் போனபோதெல்லாம் மாடிக்குச் சென்று கடவுளைப் பிரார்த்தித்துப் பொங்கிவரும் துக்கத்தைச் சற்று அடக்கிக் கொண்டிருந்தேன்.

என் மனைவியின் மறைவுக்கு மரியாதை காட்டும் நிமித்தமாகக் கிறித்துவப் பள்ளியும், ஹிதகாரிணி பள்ளியும் அன்று மூடப்பட்டன. ஓர் ஆங்கிலக் கட்சிப் பத்திரிகை தவிர ஏனைய செய்தித் தாள்கள் அனைத்தும் என் மனைவி மறைவு பற்றிய அநுபந்தங்களை வெளி யிட்டன. அந்தப் பத்திரிகை அச்சகங்கள் அனைத்தும் அன்று மூடப் பட்டன. நீதிபதிகள் யாவரும் தம் கச்சேரிகளை அடைத்துவிட்டு, சிலர் வழக்கறிஞர்களுடன் எங்கள் தோட்டத்திற்கு வந்தனர். இவ்வாறு நகரமக்கள் அனைவரும் என் துன்பத்தில் பங்கேற்று, தம் துயரைத் தெரிவித்தமைக்கு நான் என்றும் கடப்பாடு உடையேன்.

மூன்று மணி ஆன பின்னர் பிரேதத்தை ஆனந்தாசிரமத்துக்குக் கொண்டு சென்று, பிரார்த்தனைகள் நடத்திய பின்னர், தோட்டத் திலேயே ஒரு மூலையில் தகனம் செய்தோம். இந்த மரணச் செய்தியை யாரோ தந்திமூலம் தெரிவித்துவிட்டதால், அடுத்த நாளிலிருந்து எனக்குப் பரிவு தெரிவிக்கும் தந்திகளும், கடிதங்களும் வரத் தொடங்கின.

என் மனைவி வளர்த்து ஆளாக்கிய கோகுலபாட்டி வீரேசலிங்கம் விரைவிலேயே வந்தான். அவன் மனைவிக்குக் கொடுப்பதற்கென என் மனைவியின் பெட்டியைத் திறந்து, பனாரஸ் சேலையை வெளியே

எடுத்தபோது, எவ்வளவு அடக்க முயற்சித்தாலும் அடங்காமல் என் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழியலாயிற்று. அவனும் 'ஓ' என்று அழுதுவிட்டான். பனாரஸ் சேலையை அவன் கையில் கொடுத்துவிட்டு, மற்ற சேலைகளில் ஒன்றைப் புலவர்த்தி சுப்பாராவின் மனைவிக்கும், மற்றொரு வெலகபட்டுச் சேலையை என் மனைவியின் மைத்துனிக்கும் கொடுத்துவிட்டு, மற்ற சேலைகளையும் ரவிக்கைகளையும் விதவை பாதுகாப்பில்லத்தினர் அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்துவிட்டேன்.

என் மனைவியின் அஸ்தியை வைத்துச் சமாதி கட்டும் எண்ணத்துடன் சில பகுதியை நான் ஒரு பெட்டியில் பத்திரப்படுத்திக் கொண்டேன். விதவைத் திருமணம் செய்துகொண்டவர்கள் கேட்கவே எஞ்சியதைக் கொண்டுபோகச் சொன்னேன். கோகுலபாட்டி வீரேசலிங்கம் தனக்குக் கொடுக்குமாறு கேட்கவே ஓரளவு அவனுக்கும் கொடுத்தேன். நாங்கள் வளர்த்து ஆளாக்கியவர்களில் கோகுலபாட்டி வீரேசலிங்கம் ஒருவன், புலவர்த்தி சுப்பாராவ் மற்றொருவன். வீரேசலிங்கம் தன் நான்காவது மாதத்தில் எங்கள் வீட்டுக்கு வந்து அன்போடு ஆதரிக்கப்பட்டவன். என் மனைவியைப் பெற்றதாய்போல் பாவித்து, அவள் சொற்படிக் கேட்டு வந்தவன். என் மனைவியும் பெற்ற மகனைப்போலவே அவனிடம் அன்பு செலுத்தி வந்தாள். தன் மருமகளை அவனுக்குக் கொடுத்துத் திருமணம் நடத்தி, தன்னிடமே இருத்திக் கொள்ளவேண்டுமென்று எண்ணியிருந்தாள். தன் முதுமைப் பருவத்தில் தனக்கு அவன் ஆதரவாக இருப்பான் என்று கருதி இருந்தாள். அவன் மைசூரில் சம்பந்தத்தை ஏற்றுக் கொண்டபொழுதும் பிராயச்சித்தம் செய்துகொண்டு தன்னை விட்டுப் போகப் போகிறான் என்பது அவளுக்குத் தெரியாது. அந்த விஷயம் தெரிந்தபொழுது அவள் மனம் வருந்தி, சில வாரங்கள் மனநோய்க்காளாகி இருந்தாள்.

ஆனந்தாசிரமத்துக்கு அருகாமையில் தோட்டத்தில், 'ராஜலக்ஷ்மி நிவாஸம்' என்ற பெயரில் ஒரு கட்டடத்தைக் கட்டி, அதில் என் மனைவியின் அஸ்தியைப் புதைத்தேன். இந்தப் பளிங்குக்கல் சமாதி கல்கத்தாவில் பாங்குறச் செய்யப்பட்டது. என் மனைவிக்குப் பூக்களென்றால் மிக மிகப் பிடிக்கும். ஆகையால் சமாதியைச் சுற்றிலும் 'ராஜலக்ஷ்மி பூங்கா' என்ற பெயரில் ஒரு பூந்தோட்டம் அமைக்கப்பட்டது. என் மனைவியின் பெயரில் தோட்டத்தில் தர்மத்துக்கென ஒரு கிணறு கூட வெட்டப்பட்டது.

என் மனைவியின் வாழ்க்கை வரலாற்றை மிகச் சுருக்கமாகச் சொல்வது நல்லதல்ல என்று கருதி இங்குச் சற்று விரிவாகச் சொல்ல விரும்புகிறேன்.

திருமதி ராஜலக்ஷ்மி, காத்தேரு கிராமத்தில் அத்தங்க்கி பட்டாபி ராமய்யா, கொண்டமாம்பா ஆகியோருக்கு மகளாக 1851 நவம்பர் மாதத்தில் பிறந்தாள். 1910ஆகஸ்ட்டு 12ஆம் தேதி விடியற்காலையில் பரமபதப் பிராப்தி யடைந்தாள். மரண காலத்தில் அவள் வயது 58 ஆண்டு 8 மாதம் 25 நாட்கள். பட்டாபிராமய்யாவுக்கு இவள் இரண்டாவது மகள். பிறக்கும் பொழுதே தாயை இழந்துவிட்ட இவளைத் தாய்மாமனும், காத்தேரி கர்ணமுமான வென்னேட்டி வெங்கட்ரத்னமும், அவர் மனைவியாரும் வளர்த்து ஆளாக்கினர். பிறந்தகத்தார் அவளுக்கு வைத்த பெயர் பாப்பம்மா. அவர்கள் சாகும் வரை அவளைப் பாப்பாயி என்றே அழைத்து வந்தனர்.

அந்தக் காலத்தில் பெண்கள் படிப்பது இழிவென்று கருதப்பட்டிருந்தாலும், தாமிருந்தது ஒரு கிராமமே யென்றாலும் தாய்மாமன் அவளைப் பள்ளிக்கு அனுப்பிப் படிக்க வைத்திருந்தார். இந்தத் தாய் மாமனே எட்டு வயதில் இவளைப் பன்னிரண்டு வயதான எனக்குக் கொடுத்துத் திருமணம் நடத்தி வைத்தார். அவள் தோத்திரப் பாடல்களும் நைவேத்திய முறைகளும் கற்றறிந்து, வீட்டில் ஆண்களில்லாத நாட்களில் தானே பூஜைகள் நடத்தி வந்தாள். பன்னிரண்டு வயதில் சாந்தி முகூர்த்தம் நடத்தி அவளை என் வீட்டுக்கு அனுப்பி வைத்தனர். என் தாயாரான பூர்ணமாம்பா என் மனைவியின் பெயரை மாற்றி ராஜலக்ஷ்மி என்ற தம் தாயார் பெயரை இட்டு அப்படியே அழைத்து வந்தார்.

குடித்தனம் செய்ய வந்ததிலிருந்து காலம் செல்லச் செல்ல எங்கள் இருவரிடையே பரஸ்பர அன்பு பெருகிக் கருத்தொருமித்தவர்கள் ஆனோம். அவள் என்னிடம் மிகமிக நம்பிக்கை பூண்டவளாகி, நல்லதாயினும் கெட்டதாயினும் என்னைப் பின்பற்றி, என்னைப் போலவே மாறிவிட்டாள். நான் எந்த முயற்சியில் ஈடுபட்டாலும், என்னைப் பின்னுக்கு இழுக்காமல், என் நிழல்போல் நின்று, உற்சாகப் படுத்தும் சொற்களைச் சொல்லி, என்னை முன்னேக்கி அனுப்பிக் கொண்டிருந்தாள். எனக்குச் சற்று கோபச் சுபாவம்; என் மனைவிக்குச் சாந்த சுபாவம். எப்போதாவது ஆவேசம் கொண்டு நான் யாரையும் பொருட்படுத்தாமல், வேகம் கொண்டு மதம் பிடித்த யானைபோல் திரிய முற்பட்டால், அவள் அங்குசமாக மாறி என்னைக் கட்டுப்படுத்தி மீண்டும் பழைய நிலைக்குக் கொண்டு வருவாள்.

'ஆறு கடமைகளிலும் உற்ற துணையாவாள் தர்மபத்னி' என்று சொன்னது ஏறத்தாழ என் மனைவிக்கு அப்படியே பொருந்தும் என்பது என் நம்பிக்கை. என் நம்பிக்கைக்கு, நான் அவளிடம் கொண்டிருந்த உறுதியான பற்றே காரணமாக இருக்கலாம்.

தம்மவர்கள் எனக்குக் கொடுத்துத் திருமணம் நடத்தி வைத்த பாவத்தால் என் மூலம் என் மனைவி எத்தனையோ தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியிருந்தது. என் மனைவி சிரித்த முகத்தோடு அவற்றையெல்லாம் தாங்கிக்கொண்டிருந்தாள். நான் விதவைத் திருமண முயற்சிகளைத் தொடங்கியதிலிருந்து என் மனைவிக்குக் கஷ்டங்கள் வரத் தொடங்கின. என் உறவினர், நண்பர்கள், ஊர் மக்கள், பழைய ஆசாரப் பிரியர்கள் ஆகிய அனைவரும் என்னை மீட்பதற்கு எல்லா வழிகளையும் கையாண்டு பார்த்து, இறுதிக் கட்டமாக என் மனைவியைப் பிடித்துக் கொண்டனர். ஆனால் காரியம் வெற்றி யடையவில்லை. தன்னை வளர்த்து ஆளாக்கிய தாய்மாமனும் உறவினர்களும் வந்து, ஏதோ கோரமான விபத்து நடந்து விட்டது போல் அழுதுகொண்டு, 'உன் கணவனை இந்தக் காரியத்திலிருந்து காப்பாற்று' என்று பரிதாபமாக வேண்டிக் கொண்டனர். அவள் அந்தப் பரிதாப அழுகைக் கெல்லாம் விட்டுக் கொடுக்காமல், 'அவர் எடுத்துகிட்ட காரியம் நல்லதுன்னே நானும் நம்பறேன். எவ்வளவு கஷ்டம் வந்தாலும் நான் அவருக்குத் துணையாவே நிப்பேன்' என்று உறுதியாகச் சொல்லிவிட்டாள்.

அப்பொழுது அவர்கள், 'எங்களை யெல்லாரையும் விட்டுட்டுப் போறியா?' என்று ஓலமிடத் தொடங்கினர். 'நான் உங்களை எப்பவும் கைவிட மாட்டேன். ஒருவேளை நீங்கதான் என்னை விட்டுடுவீங்களோ என்னமோ!' என்று அவள் பதில் சொல்லலானாள். நான் மேற்கொண்டேன் என்பதற்காக மட்டுமல்லாமல் ஆதரவற்ற இளம் பெண்களின் கஷ்டத்தைப் போக்குவதில் அவளுக்கும் ஆர்வம் இருந்தது. திருமண ஆசையுடன் எங்கள் வீடு நாடிவந்த விதவையரை, நான் வீட்டில் இருந்தாலும் இல்லாவிட்டாலும், உள்ளே அழைத்துச் சென்று, நீண்ட நாள் பழகியவள் போல் அன்பாகப் பேசி, தைரியம் சொல்லி அவர்களிடம் ஆதரவு காட்டுவாள். படிக்கத் தெரியாதவர்களுக்கு எழுத்தறிவித்து, ஒவ்வொருநாளும் பலகைமேல் அவர்களை எழுதவைத்து, 'நீங்க கல்யாணம் பண்ணிகிட்டு புருஷன் வீட்டுக்குப் போறதுக்குள்ளே படிப்பு கத்துகிட்டு, உங்க கஷ்ட சுகங்களை எங்களுக்குக் கடிதாசி யிலெ எழுதறதுக்குக் கத்துக்கணும்' என்று உற்சாகப் படுத்தி, கல்வி

யுடன் அறிவுரைகளும் தருவாள். வந்தவர்களில் யாரேனும் அறியாமையினாலோ, பழைய பழக்க வழக்கங்களினாலோ சற்று முட்டாள்தனமாக நடந்து கொண்டால், அவர்களது தவறுகளை வெளியே தெரியவிடாமல், தாய்போல் இரகசியமாகப் பாதுகாத்து, அவர்களைக் கண்டித்து நேர் வழிக்குக் கொண்டுவருவாள்.

வீட்டுக்கு எந்த விதவை வந்தாலும், நான் கல்லூரிக்குப் போயிருந்தாலும், வீட்டிற்குள் அழைத்துச் சென்று ஆதரித்து, நான் வீட்டுக்கு வந்து ஆடைகளைக் களையும் பொழுதே, சிரித்த முகத்தோடு என்னருகில் வந்து, 'உங்களுக்கு ஒரு நல்ல சேதி சொல்லட்டுமா' என்று சொல்லி உள்ளே அழைத்துச் சென்று எனக்கு அந்த இளம் பெண்ணை அறிமுகப்படுத்துவாள். திருமணத்திற்கென எங்கள் வீட்டுக்கு வந்த விதவையரிடம் தன் பெண்கள் போல் அன்பு காட்டி, அவர்களுக்குக் கல்வி புகட்டியும், நல்லவர்களாகத் திருத்தப் பாடுபட்டும், திருமணத்திற்குப் பின்னர் அவர்களோடு கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டு அவர்களுடைய க்ஷேமநலங்களை விசாரித்தும், தேவைப்பட்டால் அவர்களுக்குப் பிரசவம் பார்த்தும், நோய்வாய்ப்பட்ட காலத்தில் அவர்களுக்கு வேண்டியதைக் கவனித்துப் பின்னர் வீட்டுக்கு அனுப்பியும், அவர்களிடம் மிகமிகப் பரிவோடு நடந்து வந்தாள். துரதிர்ஷ்ட வசத்தாலும், வஞ்சக ஆண்களின் காரணமாகவும் மானமிழந்து வழுக்கி விழுந்த அபலைகளிடத்திலும் என் மனைவி இதே அன்பைக் காட்டி வந்தாள். அத்தகையோருக்கென, 'வழுவிய இளம் பெண்டிர் மீட்பில்லம்' ஒன்றை எங்கள் வீட்டு எதிரிலேயே நிறுவி, தானே அக்கறையோடு பாடுபட்டு, அவர்களைப் பழைய தவறான வழியிலிருந்து மீட்டு நல்வழியில் செலுத்த முயன்று வந்தாள். என் மனைவியின் வாழ்நாளில் அத்தகையோர் ஐவர் காப்பாற்றப் பட்டனர். அவர்களில் மூவருக்குத் திருமணம் நடத்தப்பட்டது. மற்ற இருவர் கருவுற்று, கருச்சிதைக்க முயன்று உயிரிழந்து பரலோகம் சென்றுவிட்டனர்.

இறுதியாக, கருத்தரித்து வந்த ஒரு பிராம்மண விதவையை என் மனைவி இங்குள்ள கிறித்துவ மகப்பேறு நிலையத்திற்கு அனுப்பினாள். அந்த விதவை தான் பெற்ற பெண் குழந்தையை அந்த நிலையத்தின் அதிகாரிகளிடம் ஒப்படைத்து விட்டு ஓடிப்போக முயன்றது தெரியவே என் மனைவி வண்டியிலேறி நிலையத்திற்குச் சென்று தாயையும் சேயையும் எங்கள் வீட்டிற்கு அழைத்து வந்தாள். பிறகு தாய் தன் மகளை எங்கள் வீட்டில் விட்டுவிட்டுத் தன் வயதான தாயாருடன் சொந்தக் கிராமத்துக்குச் சென்றுவிட்டாள். என்

மனைவி அந்தக் குழந்தைக்குப் பிரேமாவதி என்று பெயர் வைத்து, அன்புடன் கவனித்துத் தானே வளர்த்து வந்தாள். இதற்கிடையில் அவள் எதிர்பாராமல் மறைந்து விடவே, கவனிப்பவர் இல்லாததால், நான் அந்தக் குழந்தையை மகப்பேறு நிலைய அதிகாரிகளிடமே ஒப்படைக்க வேண்டியதாயிற்று. அந்தக் குழந்தை அவர்களிடம் இப்பொழுது நலமாக வளர்ந்து வருகிறது.

கோடையில் ஒரு நாள் நான் பள்ளிக்குச் சென்றிருந்த பொழுது ஹரிஜனன் ஒருவன் எங்கள் தெருவில், வீட்டின் முன்னர் மணலில், மூர்ச்சை யடைந்து விழுந்து விட்டான். கடும் வெயிலில் அனல் போன்ற மணலில் நினைவில்லாமல் விழுந்து கிடக்கும் அந்த ஹரிஜனனின் நிலையைப் பார்த்துப் பரிதாபப்பட்டு, என் மனைவி தெருவில் நின்றபடி, அக்கம் பக்கவத்தரையும், போவோர் வருவோரையும் அழைத்து, அவனைத் தூக்கி எங்கள் வீட்டுத் திண்ணைமேல் கிடத்துவதற்குத் தனக்கு உதவுமாறு கேட்டுக்கொண்டாள். ஆனால் அவன் சாதியில் பறையனானதால், பிராம்மணரல்லாதவரும் அவனைத் தொடுவதற்கு விரும்பாமல் தம் வழியே போகலாயினர். சிறிது நேரம் ஆன பின்னர் கனபர்த்தி ஸ்ரீராமுலு அவ் வழியாக வரநேர்ந்தது. என் மனைவி எல்லாரிடமும் கேட்டுக் கொண்டது போலவே அவரையும் கேட்டுக்கொண்டாள். அவரும் என் மனைவியும் சேர்ந்து ஒவ்வொரு பக்கம் பிடித்து அந்த ஹரிஜனனைத் தூக்கி எங்கள் திண்ணையில் படுக்க வைத்தனர். பிறகு என் மனைவி உள்ளே சென்று குளித்து விட்டு, அவனருகில் வந்து அவனுக்குச் செய்ய வேண்டியதைக் கவனிக்கலானாள். ஆண் பெண்கள் அனைவரும் தன் உடன் பிறந்தாரே என்றும், அவர்களுக்கு உதவி செய்வதே பெரும் தர்மம் என்றும் இதயபூர்வமான நம்பிக்கையே என் மனைவியின் பரோபகாரப் பணிக்குத் தூண்டுகோலாக இருந்தது.

அவள் உண்மையான கடவுள் பக்தி உடையவள். அவளுக்கு விக்ரக ஆராதனையில் நம்பிக்கை நெடுங்காலத்திற்கு முன்பே போய் விட்டது அவள் அக்கம் பக்கத்திலுள்ள பெண்களை எங்கள் வீட்டில் கூட்டி ஒரே-கடவுள் வழிபாட்டை ஊக்குவித்து, பிரார்த்தனை சமாஜத்தைத் துவக்கி வைத்தாள். அத்துடன் பரிசுத்த ஆத்திக பாவத்தைத் தூண்டிவிடும் கீர்த்தனைகளை இயற்றித் தன் சமாஜத்தில் ஒவ்வொரு வாரமும் பாடச் செய்ததிலிருந்து அவளுடைய ஒரே-கடவுள் பிடிப்பு திக்கெட்டும் பரவலாயிற்று. பெண்களுக்கென ஒரே-கடவுள் பிரார்த்தனை சமாஜமும், தனிப்பட்ட பிரார்த்தனை மண்டபமும் இந்தப் பட்டணத்தில் தவிர சென்னை இராஜ்யத்தில்

வேறெங்கும் இல்லை. அவள் இந்தப் பிரார்த்தனை சமாஜத்தின் சார்பில் ஒவ்வோர் ஆண்டும் உற்சவம் நடத்தி, சந்தா திரட்டி, முடவர் குருடர் முதியவர் முதலானவருக்கு உணவு வழங்குவதற்கு மிகவும் பாடுபட்டு வந்தாள்.

மனிதப் பிறப்பானதால் என் மனைவியிடமும் சில குறைகளிருந்தன எனினும், குணங்களின் நிறைவைக் கொண்டு அவளைப் பெண்கள் திலகம் என்று சொல்லலாம். அத்தகைய பெண்கள் திலகம் அதிர்ஷ்டக் கட்டையான எனக்குத் துணைவியாக இறுதிவரையில் இல்லாமற்போனதற்கு நான் பெரிதும் வருந்துகிறேன்.

என் மனைவி மறைந்த மறுநாளிலிருந்து எனக்குச் சமைத்துப் போடுவதற்கும், வேண்டியவைதைக் கவனிப்பதற்கும் யாருமில்லை. என் கஷ்டத்தைப் பார்த்துப் பரிதாபப்பட்டு, விதவையரில் இரண்டாவதாகத் திருமணம் செய்துகொண்ட ராச்சர்ல ரத்னம்மா என்பவள் எனக்குப் பணிவிடைகள் செய்வதற்கென எங்கள் தோட்டத்திற்கு வந்து சேர்ந்தாள். கணவன் இறந்து போகவே இவள் சில ஆண்டுகள் என் வீட்டிலேயே தங்கியிருந்து, என் உணவு முதலிய தேவைகளைக் கவனிக்கும் முறையை நேரில் அறிந்திருந்தாள். இவள் பாதுகாப்பில்லத்து விதவையரையும் கவனித்துக் கொள்வாள் என்று என் மனைவியை இழந்த துன்பத்திலும் ஓரளவு மகிழ்ச்சியடையலானேன். ரத்னம்மா என்னிடம் தங்கி எனக்குப் பணிவிடை செய்வது நீண்ட காலம் நீடிக்கவில்லை. இவளுடைய தாயார் படுத்த படுக்கையாகி எழுந்திருக்க முடியாமற்போகவே, அவர்களைக் கவனிப்பதற்கு யாருமில்லை என்ற செய்தி வரவே, வேறு வழியில்லாமல் இவள் போகவேண்டியதாயிற்று. இவளுடைய தாயார் இவளை மீண்டும் என்னிடம் வரவிடவில்லை. தோட்டத்தில் வந்து தனி வீட்டில் இருக்கலாமென்றும், மகள் அவர்களுடைய தேவைகளையும் கவனித்துக் கொள்வாளென்றும் எப்படி எப்படியோ சொல்லியும் பயனில்லாமற் போய்விட்டது.

வேறு கதியில்லாமல் நான் புலவர்த்தி சுப்பாராவின் வீட்டில் அடைக்கலம் புகவேண்டியவனானேன். அங்குத் தங்கியிருந்த காலத்தில் நான் சாப்பாட்டிற்கென மாதத்திற்குப் பத்து ரூபாய் ரொக்கமாகக் கொடுத்து வந்தேன். என் தோட்டத்திலிருந்து விறகு அனுப்பி வந்தேன். எங்கள் வீட்டிலிருந்து பாலும் தயிரும் கொடுத்து வந்தேன். அடிக்கடி, காய்கறிகள் முதலியன வாங்கித் தந்து வந்தேன். ஒரு கறி செய்து கொஞ்சம் சோறு போட்டால் போதும். ஆனால் எனக்கு அதுகூடச் சரியாகக் கிடைக்கவில்லை. பகல் பத்து

மணிக்கு முன்னால் ஒரு நாளும் சமையல் முடியாது. சோறு, முரட்டு அரிசியைக் கொண்டு வடிக்கப்பட்டும், ஒரு நாள் பாதி வெந்தும் வேகாமலும், ஒரு நாள் குழைந்து போயும் இருந்து வந்தது. ஒரு நாள் இரவு எனக்குக் கறி போதாமல் போய்விட்டது. இன்னும் கொஞ்சம் போடுமாறு நான் கேட்கவே, சுப்பாராவின் மனைவி தீர்ந்து விட்டது என்று சொன்னாள். சுப்பாராவ் அடுத்த அறையிலிருந்து இதைக் கேட்டார். பிறகு அவர் சாப்பிடச் சென்ற பொழுது கறி போடவே, 'அவர் கேட்டப்போ ஏன் போடலே?' என்று சொல்லி மனைவியை அடித்தார். தனக்கே அக்கறையிருந்து கவனிக்க வேண்டுமே தவிர கட்டாயப்படுத்தி எவ்வளவு காலம் செய்ய வைக்க முடியும்?

ஒரு நாள் நான் குளிப்பதற்குச் சென்றபொழுது பாதுகாப்பில்லத்தி லிருந்த துர்கம்மா, மங்கம்மா ஆகிய இருவரும் எனக்கு எண்ணெய்த் தேய்ப்பதாகச் சொல்லி வற்புறுத்தினர். அவர்களுடைய பிடிவாதத் துக்குத் தலைகுனிந்து தலைக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டேன். குடுமியெல்லாம் சடை கட்டிப்போய் வாருவதற்கு இயலாமற் போயி ருந்தது. என் மனைவி போன பின்னர் நான்கு மாதங்களுக்குப் பிறகு இதுவே முதல் தலைமுழுக்காகும்.

ஒவ்வொரு சமயம் நான் அவர்களைக் கோபித்துக் கொண்டாலும், விதவை பாதுகாப்பில்லத்தில் இருந்தவர்கள் என்னைத் தந்தை போல் பாவித்து, என்னை பாபய்யா (அப்பா) என்று அழைத்து வந்தனர். நானும் அவர்களை என் மக்கள் போலவே பார்த்து, அவர் களுக்கு எந்த விதக் குறையுமில்லாதபடி, முடிந்தவரைக் கவனித்து வந்தேன். திடீரென்று என் மனைவி இறந்து விட்டதால், பாதுகாப் பில்லத்தினர் தம் தாயார் போய்விட்டதுபோல் கொஞ்ச காலம் விசனத்தில் ஆழ்ந்திருந்தனர். அவர்களில், என் மனைவிக்கு மிகவும் பிரியமானவளான மங்கம்மா ஏக்கம் கொண்டு நோய்வாய்ப்பட்டாள். மருந்து கொடுத்து வந்தாலும் அவள் நலமடைவதற்கு நீண்ட காலம் பிடித்தது.

என் தேவைகளைக் கவனிக்கக் கூடியவர்களைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டியது மிகத் தேவையென்றும், சுப்பாராவின் வீட்டில் இருப்பது நல்லதல்லவென்றும் கருதி, விதவை பாதுகாப் பில்லத்தில் இருப்பவர்களில் யாரேனும் திருமணம் செய்துகொண்டு என் கடைசிக் காலம் வரையில் என் அருகிலிருந்து, என் பணிவிடை களைக் கவனிப்பாரேயானால், அவர்களுக்கு ஆயிரம் ரூபாய் கொடுப்ப தாகச் சொன்னேன். அப்பொழுது துர்கம்மா, மங்கம்மா, வெங்கட

சுப்பம்மா ஆகிய மூவரும் எனக்குப் பணிவிடைகள் செய்வதாக முன்வந்தனர். இவர்கள் மூவரும் பொருளுக்கு ஆசைப்படாமல், என்னிடம் கொண்ட அன்பின் காரணமாகவே, என் ஆதரவற்ற நிலைக்குப் பரிதாபப்பட்டே என் நலத்தைப் பேண முன் வந்தனர்.

இதற்கிடையில், நடுத்தர வயதினரும், நல்ல நிலையில் இருந்த வருமான ஒருவர், நியோகி விதவையை மணம்புரிய விரும்புவதாக பரம்புரத்திலிருந்து எனக்குக் கடிதங்கள் எழுதி வந்தார். பாதுகாப் பில்லத்தில் மங்கம்மா ஒருத்தியே நியோகி விதவையாவாள். அவளைப் பற்றி எழுதியபொழுது அவளைத் திருமணம் செய்துகொள்ள அவர் சம்மதம் தெரிவித்தார். இந்த விஷயத்தை மங்கம்மாவிடம் தெரிவித்த பொழுது, எனக்குப் பணிவிடைகள் செய்வதை விட்டுப்போக வேண்டியிருக்கும் என்பதற்காக அவள் அதை மறுத்துவிட்டாள் இதிலிருந்து அவளுடைய பேச்சு பொய்யல்ல என்று நம்பி அவ ளுடைய பாதுகாப்பில் இருக்கலாமென்று முடிவு செய்து கொண்டேன்.

1911 ஆம் ஆண்டில் நான் பெங்களூர் செல்வதற்கு ஒரு மாதத் திற்கு முன்னால் தென்னேட்டி வேங்கட தீக்ஷிதுலு, ஆசன்ட்டாவில் தம் நண்பர் ஒருவர் பள்ளியில் உடற்பயிற்சி ஆசிரியராக இருந்து வருவதாகவும், விதவைத் திருமணம் செய்து கொள்ள விரும்பு வதாகவும் கூறினார். அந்த வேலையே இங்குக் கிடைக்குமானால் அவர் இங்கேயே இருப்பாரா என்று கேட்டேன். மகிழ்ச்சியோடு இருப்பாரென்று அவர் பதில் சொன்னார். மங்கம்மா விஷயத்தைத் தீக்ஷிதுலுக்குச் சொல்லி, அவளைத் திருமணம் செய்துகொண்டு என்னருகிலேயே இருப்பதாக இருந்தால், நான் அவருக்கு வேலை வாங்கிக் கொடுத்து, வீடு கட்டிக்கொடுத்து, பெண்ணுக்கு 300 ரூபாய் அளவில் நகைகளும், 200 ரூபாய் ரொக்கமும் கொடுப்பதாகச் சொன் னேன். அவர் தம் நண்பரை இங்கு வரவழைத்தார். அவர் பெயர் போத்தராஜு சூர்யபிரகாச ராவ். நான் அந்த இருவரையும் சந்திக்கச் செய்து, அவர்கள் மனம் ஒத்த பின்னர் திருமணம் நிச்சயித்து, நான் பெங்களூரிலிருந்து திரும்பி வந்த உடனே திருமணம் நடத்தி வைப்ப தாகக் கூறினேன். நான் பெங்களூருக்குச் செல்வதற்கு மூன்று நாட்களுக்கு முன்னர் மங்கம்மா எனக்குச் சமைத்து வைக்கத் தொடங்கினாள்.

1911 மார்ச் 27 ஆம் தேதி நான் பெங்களூருக்கு மங்கம்மாவையும் உடனழைத்துக்கொண்டு சொந்த வீட்டிற்குச் சென்றேன். எங்கள் வீட்டில் எல்லா வசதிகளும் நிறைந்திருப்பினும் எனக்கு அங்கிருக்க

மனம் ஒப்பவில்லை. எங்குப் பார்த்தாலும், கடந்த ஆண்டு நானும் என் மனைவியும் நடந்த இடங்களும், பேசிய பேச்சுக்களும் நினைவுக்கு வந்து என் மனைவி அப்போதுதான் மரணமடைந்தாற்போல் வேதனைப் படலானேன். அந்த வீட்டில் இருப்பது எனக்கு நரகத்தி லிருப்பதுபோல் இருந்ததால் அதை விற்றுவிடுவதென முடிவு செய்து விட்டேன். எனவே, உடனே வீட்டை விற்றுவிட்டு ராஜமகேந்திர வரம் திரும்பிவிட்டோம். மங்கம்மாவின் திருமணம் அக்டோபர் 8ஆம் நாள் நடைபெற்றது. நான் வாங்கிய இரண்டு பனாரஸ் சேலை களில் ஒன்றை முகூர்த்தத்தின்போது கட்டுவதற்கென்று மங்கம்மா வுக்கும், அதன் ஜோடியான மற்றொரு சேலையைச் சுப்பாராவின் மனைவிக்கும் கொடுத்தேன். விதவை பாதுகாப்பில்லத்தில் இருந்த அனைவர்க்கும் சட்டைத் துணிகள் வாங்கிக் கொடுத்தேன்.

நான் பெங்களூருக்குச் சென்றிருந்த காலத்தில் சுப்பாராவ் காட்டிய கடுமையை எதிர்த்து, விதவை பாதுகாப்பில்லத்தில் இருந்த அனைவரும் ஒன்று சேர்ந்து வெளியேறப் போவதாக எனக்கு ஒரு கூட்டுமனு அனுப்பினர். அவர்கள் மனம் இளகும்படியாக நான் ஒரு நீண்ட கடிதம் எழுதினேன். அவர்கள் அமைதியடைந்து தங்கள் போராட்டத்தை நிறுத்திக் கொண்டனர். மங்கம்மாவுக்குத் திருமணம் ஆனபிறகு, விதவை பாதுகாப்பில்லக் காரியங்களைக் கவனிப்பதற்கென அவளுக்கு ஆறு ரூபாயும், தோட்டத்தைக் கவனிப்பதற்கென அவள் கணவனுக்கு ஆறு ரூபாயும் மாதச் சம்பள மாகக் கொடுக்கச் சங்கத்தினர் முடிவு செய்தனர். பள்ளிக் கிளைக் குழுவினர், சூர்யபிரகாச ராவைப் பள்ளியில் துணை உடற்பயிற்சி ஆசிரியராக, பன்னிரண்டு ரூபாய் சம்பளத்தில் நியமித்தனர். என் சாப்பாடு முதலியவற்றை நிரந்தரமாகக் கவனிக்கும் பொறுப்பாளர்கள் கிடைக்கப்பெற்று அவர்களோடு நான் வசிக்கத் தொடங்கினேன்.

1911 டிசம்பர் இறுதியில் எனக்குக் காய்ச்சல் கண்டு நாளடைவில் உச்ச கட்டத்தை எட்டிவிட்டது. 1912 ஜனவரி மூன்றும் தேதி பிற்பகலில் ரெப்பாப்ரகட பாப்பய்யா, ஜயந்தி கங்கன்னு, குந்தூரி வேங்கடரத்னம் ஆகியோர் வந்து என் அருகில் அமர்ந்திருந்தனர். சற்று நேரத்தில் உள்ளேயிருந்து காபி வரவே, அதைக் கொஞ்சம் குடித்தேன். சீக்கிரத்திலேயே நினைவிழந்து பின்னால் சாய்ந்து விட்டேன். என் உதடுகள் கறுத்துவிட்டனவாம், மூச்சு நின்று விட்டதாம், நாடி இருப்பது தெரியவில்லையாம். அங்கிருந்தவ ரனைவரும் என் உயிர் பிரிந்துவிட்டதாகவே நினைத்து வேதனைப் படத் தொடங்கினராம். இந்த நிலையில் கால் மணிநேரம் இருந்துவிட்டு

கடவுள் கருணையால் தேறி, கண் திறந்து பார்க்கலானேன். என் உடல் என் வசமில்லாதிருந்தது. பிறர் உதவியில்லாமல் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கம் திரும்பிப் படுக்க முடியாமற் போய்விட்டது. ஜனவரி 24ஆம் தேதி வரையில் மங்கம்மாவும், அவள் கணவனும் மாடியில் என் அறையிலேயே துணைக்குப் படுத்துவந்தனர். 15 நாள் வரையில் நான் மாடியில் நடமாடக்கூட முடியாமல் கிடந்தேன். பிப்ரவரி 14ஆம் தேதி கொஞ்சம் பலம் பெற்று நடமாடத் தொடங்கி, ஓரளவு வேலையைக் கவனிக்க முடியுமென்று நினைக்கலானேன்.

பெங்களூர் செல்வதற்கு முன்பு நண்பர் குழாத்தைக் கூட்டி, என் நோயைத் தீர்த்து வைத்ததற்குக் கடவுளுக்கு நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டேன். விதவை பாதுகாப்பில்லத்தில் இருந்தவர்களும், பட்டணத்திலிருந்தவர்களும் இந்த வழிபாட்டு நேரத்திலும், அதற்கு முன்பு நோய்வாய்ப்பட்டிருந்த போதும் வந்து பார்த்து என்னிடம் ஆதரவு காட்டிவிட்டுப் போயினர். ஆனால், பதின்மூன்று ஆண்டுகள் என் கைகளால் வளர்க்கப்பட்டு, என்னிடம் கல்வியறிவு பெற்ற புலவர்த்தி சுப்பாராவின் மனைவி மட்டும், எங்கள் தோட்டத்திலேயே இருந்து வந்தாலும், ஒரு முறையேனும் என்னை வந்து பார்த்துச் செல்லும் பாவத்துக்கு ஆளாகவில்லை; பார்த்து வருமாறு சுப்பாராவும் அனுப்பவில்லை. நன்றியறிதல் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்?

என் மனைவி மறைந்த ஓராண்டுக்குள்ளேயே நான் அவளுக்கொரு சமாதியைக் கட்டுவித்தேன். தேசிராஜு பெதபாப்பய்யா என் மனைவிக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே மறைந்துவிட்டார். அப்பொழுது ஒரு குழு அமைக்கப்பட்டு, அவர் பெயர் நிலையாக நிறுத்துவதென்று முடிவு செய்யப்பட்டு, சந்தா திரட்டப்பட்டது. அவ்வளவே தவிர செயலில் ஒன்றும் நடக்கவில்லை. நம்மில் யாராவது ஒருவர் முனைந்து செய்தால்தான் வேலை நடக்குமே தவிர, குழுவிற்கு ஒப்படைத்துவிட்டால் ஒன்றும் நடக்காது. எல்லாரும் இணைந்து குழுவின் மூலமாகச் செயலாற்றும் நல்ல பண்பை நம்மவர்கள் இன்னமும் கற்றுக்கொள்ள வேண்டியுள்ளனர். நான்காண்டுகள் கடந்தும் பெதபாப்பய்யாவுக்குச் சமாதியாவது எழுப்பும் முயற்சி எடுக்கப்படாதது கண்டு, நான் முன்னின்று, 1912 இறுதியில் சமாதிக்கு வேண்டிய கட்டடத்தை எங்கள் தோட்டத்திலேயே கட்டுவித்து, சமாதி அமைப்புக்காகக் கல்கத்தாவில் ஏற்பாடு செய்தேன். இது முடிந்து வந்துள்ளது. விரைவிலேயே பாப்பய்யாவின் அஸ்தி அதில் வைத்துச் சிறப்பிக்கப்படும்.

ஹிதகாரிணி சங்கம், விதவை பாதுகாப்பில்லம் முதலியவற்றுக்காக ஆகும் செலவுகளில் பெரும் பகுதியை நானே ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. சங்கத்தை முன்னிட்டு நான் செலவிட்ட தொகை ஆறுயிரம் ரூபாய்க்கும் மேலும் போய்விட்டது. சங்கத்தினருக்கு அதைத் தீர்க்கும் வழியில்லாமற் போகவே, சங்கத்தின் செலவுகளுக் கென மாதம் மாதம் நூறு ரூபாய், நானே கொடுத்து வரவேண்டி யுள்ளது. பண வருவாய்க்கு எனக்கு இரண்டு வழிகள் இருந்தன. ஒன்று நான் எழுதிய புத்தகங்களின் விற்பனை; இரண்டாவது பல்கலைக் கழகத் தேர்வாளர்ப் பொறுப்பு. சக்தியின்மையின் காரணமாக நான் புதிய புத்தகங்களை எழுத முடியாமலிருப்பதாலும், அறிவு நிரம்பிய இளைஞர்கள் பலர் தோன்றிப் பல்வேறு விஷயங்கள் பற்றியும் புத்தம் புதிய புத்தகங்களை இயற்றி வெளியிட்டு வருவதாலும் என் புத்தக விற்பனை இப்போது குறைந்துவிட்டது.

1887லிருந்து இடையருது 25 ஆண்டுகள் நான் பல்கலைக் கழகத் தேர்வாளனுக இருந்து அதன்மூலம் ஏறத்தாழ 20 ஆயிரம் ரூபாய் சம்பாதித்து, எல்லாவற்றையும் சமூகத் தொண்டிற்கென்றே செல விட்டுவிட்டேன். என் மனைவியின் மறைவிற்குப் பின்னர் 1911லிருந்து தேர்வாளர்ப் பொறுப்பு வேண்டாமென்று மறுத்து விட்டதால் எனக்கு அந்த வகையில் வருவாய் அற்றுப் போய் விட்டது. என் வருவாய் குறைந்து விட்டதால் விதவை பாதுகாப் பில்லம் முதலியவற்றை நிர்வாகிப்பது மிகவும் கடினமாக உள்ளது. என் நெஞ்சில் மூச்சு இருக்கும் வரையில் நான் இந்த விதவை பாதுகாப்பில்லம் முதலியவை அற்றுப்போக விடமாட்டேன். என் வாழ்நாள் முழுவதும் நாட்டு முன்னேற்றத்திலேயே கழிக்கத் திட்ட மிட்டுள்ளேன். உதவியற்ற, சக்தியற்ற, ஏழமையுற்ற எனக்கு, என் போன்ற கருத்துள்ளவர்கள் உதவி செய்ய முன்வந்து, விதவை பாதுகாப்பில்லம் முதலியவற்றைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்பார்கள் என்று நம்புகிறேன். என் சொந்தப் பாதுகாப்புக்காக நான் பிறரை வேண்ட மாட்டேன். அதற்குப் போதுமான சொற்பத் தொகையைக் கடவுள் எனக்கு ஓய்வுச் சம்பளம் என்ற வடிவத்தில் அருளியுள்ளார்.

# விண்ணப்பம்

நல்லெண்ணம் கொண்ட ஆந்திரப் பெருமக்களே! என் உடன் பிறந்த ராஜமகேந்திரபுர வாசிகளே!

என் இறுதி விண்ணப்பமாக இந்தச் சிற்றுரையை உங்கள் முன்னர் வைக்கிறேன். ஆந்திர நாட்டு முன்னேற்றத்துக்குத் தற்போது பணியாற்றும் வல்லோர்களில் ஒருவனாக எண்ணத் தக்கவனாக இல்லாமல் போனாலும், பாடுபடத் தொடங்கியவர்களில் நான் ஒருவன் என்று சொல்லிக் கொள்வது வெறும் புகழ்ச்சியாகக் கருதப்படாது என நினைக்கிறேன். நான் எப்போதும் செல்வம் பெற்றவனாகவோ, வலிமை பெற்றவனாகவோ, அதிகாரம் பெற்றவனாகவோ, பெருங் கல்வியறிவு பெற்றவனாகவோ இருந்ததில்லை. அரும் பெருங் காரியங் களில் வெற்றி வாய்ப்புக்குத் தேவையானவற்றில் எதுவுமே என்னிடம் இல்லாமல் போனாலும், நாட்டுப்பற்று ஒன்று மட்டும் ஓரளவு பெற் றிருந்த காரணத்தால், என் சக்திக்கு உட்பட்டதா இல்லையா என்ற ஆராய்ச்சியில் இறங்காமல், நாட்டை முன்னேறச் செய்யும் பணியில் அடியெடுத்து வைக்கத் துணியலானேன். அந்தப் பணியை என்னால் எந்த அளவு சாதிக்க முடிந்தது என்பதைச் சொல்ல முடியாது என்றாலும், அதன் நிமித்தமாக என்னிடமிருந்த சொற்பத் தொகையையும், இளமையையும், சக்தியையும், கல்வியையும், அறிவையும் செலவழித்து, உங்கள் ஆதரவுக்குப் பாத்திரமாக இயன்றது என்பதை மட்டும் சொல்ல முடியும். நம் நாட்டில் ஏனைய வர்களும் என்னைக் கௌரவப்படுத்தி வருவதிலிருந்து தெலுங்கு நாட்டில் ராஜமகேந்திரவரம் சீர்திருத்தங்களுக்குப் பிறப்பிடம் என்று பெயர் பெற்றுள்ளது. இதுவரையில் உயிர் பிழைக்கச் செய்த சீர்திருத்தக் கொடி படர்ந்து தழைத்துப் பலன் தரச் செய்ய வேண்டிய பொறுப்பை நீங்கள் ஏற்றுக் கொள்ளவேண்டிய தேவை வந்துள்ளது. இந்தப் பொறுப்பை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு ராஜமகேந்திர வரத்துக்கு இதுவரையில் கிட்டியுள்ள புகழைவிட இரட்டிப்புப் புகழை ஈட்டித் தரவேண்டுமென்று உங்களை, உங்கள் முதிய சகோதரனை நான் வணக்கத்தோடு வேண்டிக் கொள்கிறேன்.

இந்தப் புகழ் தெலுங்குநாடு முழுவதுக்கும் உரியதே தவிர ராஜ மகேந்திரவரம் ஒன்றுக்கு மட்டுமே சொந்தமல்ல. நான் தமிழ்

நாட்டிலும், கன்னட நாட்டிலும் சுற்றுப்பயணம் செய்த காலங்களில், அங்கிருப்பவர்கள் சமூகச் சீர்திருத்த விஷயங்களில் தம் நாடுகளை விடத் தெலுங்கு நாடே மிகமிக முன்னேற்றம் கண்டுள்ளதென்று சொல்லிக் கொள்வதை நான் பன்முறை கேட்டு, ஆந்திர நாடு பெற்ற சிறப்புக்கு மகிழ்ந்து பெருமிதப்பட்டிருக்கிறேன். ஆந்திரப் பெரு மக்களே! எண்ணற்ற நற்பயன்களுக்கு விளைவிடமான சமூகச் சீர்திருத்தக் கொடியைப் பேணிப் பாதுகாப்பீராக. நீங்கள் அந்தப் பொறுப்பை ஏற்றுத் தங்குதடையின்றிப் பணியாற்ற வேண்டுமென்று ஆந்திரத்தாய் தன் அன்புச் செல்வங்களைப் பல்வகையானும் வேண்டிக் கொள்கிருள்...

நாடு முன்னேற வேண்டுமெனில் சீர்திருத்தம் எல்லாத் துறைகளி லும் இணைந்து செயல் புரிய வேண்டுமே தவிர, ஒரு துறையில் மட்டும் நடந்தால் போதாது. ஒரு முகமான வளர்ச்சி எப்போதும் உண்மை யான வளர்ச்சி யாகாது. உடலைப் பொறுத்த வரையில், உறுப்புக்கள் அனைத்தும் ஒன்றுக்கொன்று துணையாக வளராமல் வயிறு மட்டுமோ, அல்லது கால் மட்டுமோ அளவு கடந்து வளருமேயாஞல் அதை நோயின் அறிகுறியாக எப்படி கருதுவோமோ, அதேபோல் தார்மிகச் சமூக வளர்ச்சியைப் புறக்கணித்துவிட்டு, அரசியல் சுதந்திர முயற்சிக்கு மட்டும் போராடுவது முழுமையான நலம் பெறுவதற்குப் பயன்படாதென்று கருதவேண்டும். முழுமையான அரசியல் சுதந்திரம் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்களே என்ருலும், கோணலான குலாசாரப் பேய்க்கடிமையாகி, வயிற்றில் பிறந்த குழந்தைகளுக்கும் சுதந்திரம் கொடுக்க முடியாமல் அந்த அபலைப் பெண்கள் கைம்மைத் துன்பத்தில் விழுந்து துடிதுடிக்கப் பார்த்துக் கொண்டு வாளாயிருக்கும் நாம் என்ன சுகத்தை அனுபவிக்கப் போகிருேம்? வீட்டில் இன்பத்திற்கு அடிகோலும் நல்ல ஆசாரச் சுதந்திரத்தை முழுமையாகப் பெற்றுவிட்டாலும், வெளியே சொத்து சுகங்களுக்குக் காப்பளிக்காத கொடிய கொடுங்கோலாட்சிக்கு என்றும் தலைகுனிய வேண்டியதாக இருக்குமாஞல் என்ன சுகத்தை அனுபவிக்கப் போகிருேம்? வீட்டிலும் வெளியிலும் இழிவுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து விடுதலை பெற்று, இரண்டு சுதந்திரங்களையும் பெறும்போதல்லவா நாம் குறையற்ற இன்பத்தை அனுபவிக்க முடியும்? எனவே, உண்மையில் நாட்டு நலத்தை விரும்புவதாக இருப்பின் எல்லாச் சுதந்திரங்களுக்காகவும், எல்லா வளர்ச்சிகளுக்காகவும் ஒருங்கே பாடுபட வேண்டும்.

இப்பொழுது நம் ஆந்திர நாடு விழித்தெழுந்து, நாட்டு முன்னேற்றப் பணியில் சுறுசுறுப்புடன் ஈடுபட்டுப் பலவகைத் துறைகளிலும் மிக உற்சாகத்துடன் பாடுபட்டு வருவதைப் பார்த்து நான் பெருமகிழ்ச்சி யடைகிறேன். இத்தகைய நிலை நம் தாயகத்தில் தோன்ற வேண்டுமென்று நான் 30, 40 ஆண்டுகளுக்கு முன்பு விழைந்தேன். அப்பொழுது அந்த விழைவு அழகிய கனவுக் காட்சியாகத் தோன்றியது. அப்பொழுது ராஜமகேந்திரவரம் போன்ற பட்டணங்களிலும் இளைஞர்கள் கூட்டம் போடுவதே பொதுமக்கள் பார்வையில் தவறாக இருந்தது. இப்பொழுது பட்டிதொட்டிகளிலும் கூட்டங்கள் கூட்டப்பெற்று, பல்வகை விஷயங்களும் விவாதிக்கப் பட்டு, சாதாரண மக்கள் பாராட்டைப் பெறும் வாய்ப்பு வந்துள்ளது. அப்பொழுது பெண் கல்வி என்பது பெருவாரியான மக்கள் பழிப்புக்கு ஆளாகி யிருந்தது. இப்பொழுது எல்லா இடங்களிலும் பெண்கள் பள்ளிகள் தொடங்கப் பெற்று, மகளிர் கல்வி வளர்ச்சி யடைந்ததுடன், கூட்டங்கள் நடத்தவும், சொற்பொழிவாற்றவும், புத்தகங்கள் எழுதவும் ஆற்றல் வாய்ந்த பெண்கள் புகழப்படுகின்றனர். அப்பொழுது தேசிய மொழிகளில் ஆண்கள் படிப்பதற்குக் கூடச் சரியான புத்தகங்கள் இல்லாமலிருந்தன; இப்பொழுது ஆண்கள் படிப்பதற் கேற்ற புத்தகங்கள் மட்டுமல்லாமல், பெண்கள் படிக்கத் தக்க நூல்களும் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. அப்பொழுது படிக்கும் ஆர்வமுள்ள பணக்காரரே ஏராளமான தொகை செலவு செய்து புத்தகங்களை வாங்கிப் படிக்க முடிந்தது. இப்பொழுது ஊர்கள்தோறும் படிப்பகங்கள் ஏற்பட்டு, குறைந்த செலவில் ஏழைகளும் புத்தகங்கள் படிக்க வசதி ஏற்பட்டுள்ளது. அன்று தெலுங்குச் செய்தித் தாள்கள் அவ்வளவாக இல்லாமல், இருக்கும் ஒன்றிரண்டிற்கும் வாசகரில்லாத நிலை இருந்தது. இன்று தேசிய மொழிகளில் செய்தித் தாள்களும், பத்திரிகைகளும் பெருகி ஆயிரக் கணக்கான வாசகரைப் பெற்றிருப்பதுடன், அவற்றில் சில பட்டப் பகலில் கதிரவனைப் போல் திகழ்கின்றன. அன்று படிப்பதற்காக நீராவிப் படகேறிச் சென்னை சென்றவருக்கே பிராய்ச்சித்தங்கள் விதிக்கப்பட்டிருந்தன. இன்று படிப்பு, வாணிபம் முதலியவற்றிற்காகவும், சிற்பம் முதலிய கலைகளைப் பயில்வதற்காகக் கண்டங்கள் கடந்து திரும்பியவருக்கும் பிராய்ச்சித்தங்கள் தேவையில்லாமல் போய்விட்டன. இத்தகைய மாற்றங்கள் பலவற்றைச் சொல்லலாம். இருந்தாலும் சமூகச் சீர்திருத்தங்களில் நம்மவர்க்கு வாயளவில் உள்ள வீரம் செயலளவில், இன்னமும் நான் எதிர்நோக்கும் அளவில் தோன்ற

வில்லை. போராட்டங்களில் பேச்சு மிகையாகவும் செயல் மட்டாகவும் இருக்க வேண்டியவை சில உள்ளன ; பேச்சு குறைவாகவும் செயல் அதிகமாகவும் இருக்க வேண்டியவை சில உள்ளன. அரசியல் சீர்திருத்த முயற்சி முதல் பகுப்பைச் சாரும்; சமூகச் சீர்திருத்த முயற்சி இரண்டாவது பகுப்பைச் சாரும். இந்த இரண்டில் சமூகச் சீர்திருத்தம் நம் கையில் உள்ளது. அரசியல் சீர்திருத்தம் துரைத் தனத்தினரின் கையில் உள்ளது. நம் சமூக நிலை நலம் பெற்றலொழிய துரைத்தனத்தினர் அருளும் அரசியல் சுதந்திரத்தின் பயன்களை நாம் கவலையின்றி அனுபவிக்க இயலாது. இந்த உண்மையை உறுதியாக மனத்தில் நிலை நிறுத்திக்கொண்டு, சமூகச் சீர்திருத்த முயற்சியிலும் இணையான அக்கறையுடன் பாடுபடுவீராக. இந்தப் பணியில் அதிகத் தொல்லை யுள்ளதென்பதில் ஐயமில்லை. இருந்தா லென்ன ? அதிகப் பயன்களைத் துய்க்க விழைவோர் அதிகத் தொல்லைப் பட்டுத்தான் ஆகவேண்டும்.

ஒருவர் அதாவது ஒரு துறையில் பணியாற்றிப் பெயர் வாங்கும் போது பொருமை பிடித்த சிலர் அவரிடம் இல்லாத குறைகளைச் சுமத்தி, அவருடைய பெயருக்குக் களங்கம் உண்டாக்கப் பாடு படுவர். இன்னும் சிலர் அவருடைய புகழுக்கு இழுக்குண்டாக்கி, அவரைக் கீழே தள்ளி மிதிப்பதன் வாயிலாகவே தாம் மேலே வரலா மென்று முயற்சி செய்வர். இந்த இரு வகையினரால் வரும் தொல்லை கள் சமூகச் சீர்திருத்தத் தலைவர்களை எதிர்ப்பது போலவே அரசியல் தலைவர்களுக்கும் உண்டாகும். இந்த தேசத் தொண்டர்கள் நாட்டிற்கு ஆற்றிய தொண்டைப் பாராட்டத் தூரப் பகுதிகளிலுள்ள பெருமக்களும் கூட்டங்கள் கூட்டி பாராட்டிதழ்களைப் படித்தளித்துக் கொண்டிருக்கும்பொழுது, சொந்த ஊரில் பொருமைக்காரர்கள், அறிவும் விவேகமுமில்லாத முண்டங்களென்று பத்திரிகைகளில் விளாசிக் கொண்டிருப்பார்கள். இந்தக் காமாலைக்காரர் கண்களுக்கு ஒருவர் செய்யும் நன்மை எள்ளளவேனும் தென்படாது. உலகத்தில், பொறுப்பிலுள்ளவர்கள் தம் கண்ணெதிரில் லஞ்சம் வாங்கிக்கொண் டிருக்க, எதிர்த்து ஒரு சொல்லாவது சொல்வதற்கு இந்தப் பத்திரிகை ஆசிரியர்களுக்குத் துணிவு வராது; எழுதுவதற்குக் கை வராது. இரவு பகலாகக் கஷ்டப்பட்டு நியாயமாகப் பணியாற்றுவோரைப் பழிப் பதற்கு இவர்கள் வாய் வலிக்கவே வலிக்காது. சமூகத்தில் ஒரு கெட்ட வழக்கத்தையேனும் தடுப்பதற்கு இவர்களுக்கு எண்ணம் வரவே வராது. தடுப்பதற்கென முயற்சிப்பவரை இடித்துரைப்பதற்கு மட்டும் இவர்களுக்கு எங்கிருந்தோ துணிவு வந்துவிடும்.

நம் நாட்டை முன்னேற்றுவதற்கு இப்பொழுது பணியாற்றுவது தான் தேவையே ஒழிய, அவ்வாறில்லாமல் வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டிருப்பதில் பயனேதுமில்லை. நம் ஆந்திர நாட்டில் சமூக, தார்மிக விஷயங்களில் பணியாற்றுவதற்கென்று ஏற்பட்டுள்ள இயக்கங்களில் ஹிதகாரிணி சங்கம் முக்கியமானதென்று சொல்லலாம். அதன் பணிகளுக்கென என்னிடமிருந்த பணத்தையெல்லாம் கொடுத்தேனென்றாலும், அது அதன் செலவுகளில் பாதிக்குக் கூடக் காணாது. பணக் குறையின் காரணமாக ஹிதகாரிணி சங்கம் புதிய காரியங்களை மேற்கொள்ள முடியாமல் இருப்பதுடன், உள்ள விதவை பாதுகாப்பில்லம் முதலியவற்றையும் நிர்வகிக்க முடியாமல் அவதிப் படுகின்றது. உங்கள் நாட்டுத் தொண்டில் காலம் கழித்து உங்கள் அன்புக்குப் பாத்திரமாகியுள்ள நான் உங்களைக் கைகூப்பி வணங்கி என் இறுதி வேண்டுகோளை விடுக்கின்றேன் : ஹிதகாரணி சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்து அதைப் பாதுகாத்து பன்னெடுங்காலம் அது பணியாற்ற உதவுங்கள். கடவுள் உங்களுக்கு என்றென்றும் வளமான வாழ்வை அருள்வாராக! பக்தர்களின் அருளாளா! ஏழையின் ரட்சகா! எளியேன் நான், ஆந்திர நாட்டைத் தங்குதடையில்லாத முன்னேற்றப் பாதையில் செலுத்துமாறு வேண்டுகிறேன். என் வேண்டுகோளை நிறைவேற்றி அருள்வாயாக!

இவ்வாறு விண்ணப்பிக்கும் பணிவான தொண்டன்

**கந்துகூரி வீரேசலிங்கம்.**

# தமிழில் வெளிவந்துள்ள மற்ற நூல்கள்

## I. தேசீய வாழ்க்கை வரலாற்று வரிசை

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1. | **தியாகராஜர்** - பி. சாம்பமூர்த்தி | 1 | 75 |
| 2. | **ராமாநுஜர்** - ஆர். பார்த்தசாரதி | 2 | 00 |
| 3. | **குரு நானக்** - கோபால் சிங் | 2 | 25 |
| 4. | **முத்துஸ்வாமி தீக்ஷிதர்** - டி. எல். வெங்கட்ராம அய்யர் | 2 | 50 |
| 5. | **கபீர்** - பாரஸ்நாத் திவாரி | 2 | 25 |
| 6. | **ரண்ஜீத் சிங்** - டி. ஆர். ஸூத் | 2 | 75 |
| 7. | **ஹரிநாராயண் ஆப்தே** - எம். ஏ. க்ரந்தீகர் | 2 | 75 |
| 8. | **சுப்பிரமணிய பாரதி** - பிரேமா நந்தகுமார் | 3 | 00 |

## II. இந்தியா - நாடும் மக்களும் வரிசை

| | | | |
|---|---|---|---|
| 1. | **வீட்டுப் பிராணிகள்** - ஹர்பன்ஸ் சிங் | 4 | 50 |
| 2. | **சாதாரண மரங்கள்** - எஸ். சாந்தபௌ | 4 | 75 |
| 3. | **மக்கள் தொகை** - எஸ். என். அகர்வாலா | 3 | 75 |
| 4. | **இந்தியப் பாம்புகள்** - பி. ஜே. தேவரஸ் | 6 | 50 |
| 5. | **தோட்ட மலர்கள்** - விஷ்ணு ஸ்வரூப் | 6 | 00 |
| 6. | **பூமரங்கள்** - எம். எஸ். ரந்தாவா | 6 | 50 |
| 7. | **நிலமும் மண்வளமும்** - எஸ். பி. ராய் சௌதுரி | 5 | 25 |

## III. அகில இந்திய நூல் வரிசை

| | | | |
|---|---|---|---|
| 1. | **அக்னி நதி** - குர் அதுல்ஐன் ஹைதர் | 8 | 50 |
| 2. | **மறைந்த காட்சிகள்** - பகவதி சரன் வர்மா | 8 | 50 |
| 3. | **காகித மாளிகை** - முப்பாள ரங்கநாயகம்ம | 4 | 25 |

| | | | |
|---|---|---|---|
| 4. | **கதாபாரதி : இந்திச் சிறு கதைகள்** - *டா. நாம்வர் சிங்* | 8 | 25 |
| 5. | **அழிந்த பிறகு** - *சிவராம காரந்த* | 5 | 25 |
| 6. | **வெண் குருதி** - *நானக் சிங்* | 6 | 00 |
| 7. | **கவி** - *தாராசங்கர் பந்த்யோபாத்யாய்* | 5 | 50 |
| 8. | **கதாபாரதி : தெலுங்குச் சிறு கதைகள்** - (தொகுப்பு) *புராணம் சுப்பிரமணிய சர்மா & வக்காட்டி பாண்டுரங்க ராவ்* | 7 | 75 |
| 9. | **கதா பஞ்சாப்** - (தொகுப்பு) *ஹர்பசன் சிங்* | 5 | 50 |

## IV. பல்வகை நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | **காந்தியின் இந்தியா-வேற்றுமையுள் ஒற்றுமை** | 3 | 25 |
| 2. | **அக்பர்** - லாரென்ஸ் பின்யன் | 2 | 25 |
| 3. | **அறிவு வளர்க்கும் அறிவியல்** - ரிக்சி கால்டர் | 4 | 25 |
| 4. | **அசோக சாசனங்கள்** - என். ஏ. நிகம், ரிச்சர்ட் மக்கியோன் | 3 | 00 |
| 5. | **கோதம புத்தர்** - ஆனந்த கே. குமாரஸ்வாமி, ஐ. பி. ஹார்னர் | 6 | 00 |
| 6. | **மார்கோ போலோ** - மௌரின் காலிஸ் | 5 | 75 |
| 7. | **குடதிசை-குணதிசை ஞானப் பெண்மணிகள்** - ஸ்வாமி கானந்தா | 6 | 00 |
| 8. | **இன்பத்தின் வெற்றி** - பெட்ராண்ட் ரஸ்ஸல் | 3 | 50 |
| 9. | **பாமரமக்களின் பரம்பரைப் பாடல்கள்** - அழ. வள்ளியப்பா | 1 | 25 |
| 10. | **விழாவும் பூசையும்** - எல். ஜி. கணபதி அய்யர் | 1 | 25 |

